# சம்பந்தன்

# சிறுகதைகள்



வெளியீடு:

இலங்கை இலக்கியப் பேரவை,
82, பிரவுண் வீதி, யாழ்ப்பாணம்.

# சம்பந்தன் சிறுகதைகள்



ஈழத்துத் தமிழிலக்கியத்தின் சிறுகதை மூலவர்களில் ஒருவரான 'சம்பந்தனி'ன் பத்துச் சிறுகதைகளின் தொகுதி (1930 - 1950)




தொகுப்பாசிரியர்கள்:

செங்கை ஆழியான் க. குணராசா
செம்பியன் செல்வன் ஆ. இராஜகோபால்

பதிப்பாசிரியர்:
கந்தசாமி இராஜேந்திரன்





வெளியீடு:

இலங்கை இலக்கியப் பேரவை,
82, பிறவுண் வீதி, யாழ்ப்பாணம்.

- Sampanthan Sirukathaikal - Collection of Short Stories
  By-Sampanthan(Thirugnanasampanthar)
- First Edition : January 1998
- Printed By : Lanka Book Depot, Colombo.
- Price : Rs. 100/=


**சம்பந்தன் சிறுகதைகள்:**



குறிப்பு: சம்பந்தனின் ஏனைய சிறுகதைகள்: தாராபாய் (கலைமகள்); புத்தரின் கண்கள் (கலைமகள்); மனிதவாழ்க்கை (கலைமகள்); மனிதன் (கலைமகள்); அவன் (கிராம ஊழியன்); கலாஷேத்திரம் (ஈழகேசரி); கூண்டுக்கிளி (கலைமகள்)


**விற்பனையாளர்:**

**ஸ்ரீலங்கா புத்தகசாலை,**
**234 காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம்.**

**லங்கா புத்தகசாலை,**
**F L. 1.14 டயஸ் பிளேஸ்**
**குணசிங்கபுர, கொழும்பு 12.**
**☎ 341942**




# முன்னுரை

"சிறுகதை உலகம் எல்லை சொல்ல முடியாதளவிற்கு வளர்ந்துவிட்டது- வளர்ந்து கொண்டிருக்கின்றது" எனக் கூறும் க.தி. சம்பந்தன் அவர்கள் ஈழத்துச் சிறுகதை மூவர்களில் முக்கியமானவர். ஈழத்துச் சிறுகதைகளில் உருவமும், உள்ளடக்கமும் அழகாகவும், ஆழமாகவும் அமைவதற்குச் சம்பந்தன் அவர்களின் ஆரம்பகாலச் சிறுகதைகள் வழிகோலின எனலாம். இவரின் கதைகளில் எக்காலத்திற்கும் பொருந்துவதான மனிதனின் அடிப்படைப் பண்புகள் அழகிய உருவில் எழுந்திருப்பதால், இவரின் இலக்கியப்பாதை செம்மையானதாகவும், தனித்துவமானதாகவும் அக்காலத்திலேயே விளங்கியமை குறிப்பிடத்தக்கது. இதனாற்றான், ஆரம்பகாலச் சிறுகதை எழுத்தாளர்களான சி. வைத்தியலிங்கம், "இலங்கையர்கோன்" போன்றவர்களிலிருந்து இவரைப் பிரித்து ஆராயவேண்டியுள்ளது. மனித உணர்வுகளையும், மன அசைவுகளையும் மனோதத்துவ அறிவியற்றுறையில் அணுகி, அவற்றின் சிறப்புக்களைக் கலையாக்கிய பெருமை இவருக்குண்டு. அத்துடன் இவரைப் போல அக்கால எழுத்தாளர்கள் மனவலைகளிடையே தமது இலக்கிய யாத்திரைகளை ஒரு பலமாகக் கொண்டு செய்யவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவ்வளவு தனித்துவம் மிக்க சம்பந்தன் அவர்கள், தற்போது சிறுகதையுலகைவிட்டு விலகி-ஏன் கதை உலகினின்றும் விலகி- கவிதை உலகில் பிரவேசித்திருந்ததால், தற்போதைய வாசகர்கள் இவரை நன்கறிந்திலர். அத்துடன் இவரின் சிறுகதைகள் ஒரு கோவையாகவேனும் தொகுக்கப்பட்டு வெளிவராமையால், இவரைப்பற்றிய இலக்கிய எடைபோடுதலில் ஈழத்து இலக்கிய விமர்சகர்கள் பெரிதும் இடர்ப்படுகின்றனர். இந்த அவல

நிலையை உணர்ந்து, செம்பியன் செல்வன், செங்கைஆழியான் ஆகியோர் மிக முனைந்து இவரின் சிறுகதைகள் ஐந்தினை தேடிப் பெற்று, 1966-ம் ஆண்டு விவேகி "சம்பந்தர் சிறுகதை மலர்" ஒன்றினை வெளியிட்டனராயினும், அம்முயற்சி பூரணமாகச் சம்பந்தரைப் புரிந்து கொள்ளப் போதுமானதன்று. அறிந்து கொள்ள மட்டுமே பயன்பட்டிருக்கும்.

இக்காலத்தில் இவர் தொடர்ந்து எழுதாமையால், இவரின் எழுத்தையோ, அதன் வளர்ச்சிப் போக்கையோ நம்மால் அளவிடமுடியாதவாறு உளது. இதுபற்றிச் "சம்பந்தன்" கூறுவது வியப்பாகவும், அதே வேளையில் சிந்திக்க வைப்பதாகவும் உளது.

"எழுத்துலகு நானறிந்த வரையில் மிக ஆழமானது. எல்லையற்ற உயரமும், விசாலமுமுடையது. என்னால் அதன் தன்மைகளைக் கட்டுப்படுத்தி நிதானிக்க முடியவில்லை"

சம்பந்தன் அவர்களுக்கு இலக்கியம் பற்றி அன்றும், இன்றும் ஒரே கொள்கையே உறுதியாக நிலவி வருவதை அன்றைய எழுத்துக்களாலும், இன்றைய கவிதை, கட்டுரை முயற்சிகளாலும் நன்கு தெரிய வருகின்றது. இலக்கியத்தின் பண்பும் பயனும் பற்றி மிக உயர்வாகக் கருதி வருகின்றாராதலின் இலக்கியத்தின் பண்பினைப்பற்றி நன்கு தெரியாமல் எழுதுகின்றவர் மேல் அவர் மனம் கசப்படைகின்றது.

"சமுதாயத்தின் உயிர்நிலையைக் காப்பாற்றி வளர்த்த-வளர்க்கின்ற, வளர்க்கும் கலையே இலக்கியம். வாழ வேண்டும் என்பது சமுதாயத்திற்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவிற்கு சமுதாயத்தை வாழ்விக்கும் இலக்கியமும் அவசியமாகும்". எனக் கருதும் இவர், இத்தகைய பொறுப்பு வாய்ந்த இலக்கியத்தைப் படைப்பவர்கள் மிகவும் தெளிந்த மனமுடையோராகவும், சான்றோர்களாவும், அறிவு மிக்கவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதனை



வலியுறுத்திக் கூறுகிறார். "சமுதாயத்தின் காப்பாளர்களான சான்றோர்களே இலக்கியஞ் செய்தவர்கள். மதிப்பற்ற அவர்கள் பணி கேவலம் பொழுது போக்காக அமைவதில்லை." என்ற இவரின் கருத்து- கலை கலைக்காகவா (art for arts sake) அன்றி வாழ்க்கைக்காகவா?- என்ற பிரச்சனைக்கு விளக்கமாக அமைவதுடன், இவரின் கதைகளை எத்தகைய நோக்கில் அணுக வேண்டும் என்பதற்கு ஒரு விளக்கவுரையாகவும் அமைகின்றது.

இவரின் முதற்படைப்பான "தாராபாய்" 1938 ஆம் ஆண்டில் "கலைமகள்" பத்திரிகையில் வெளியாகியது. இக்கதை பாரதநாட்டின் இந்து-முஸ்லீம் இனக்கலவரத்தை அடிப்படையாகக் கொண்டு, இரு இள உள்ளங்களின் மனப் போராட்டத்தைச் சித்தரிப்பது. இந்தக் கதையே இவரின் இலக்கியப்பயணம் ஒரு புதிய பாதையில் தொடங்குகிறது, என்பதனைக் காட்டி நிற்கின்றது. இந்த எழுத்தைத் தொடர்ந்து வெளியான கதைகளில் காலதேசவர்த்தமானங்களைக் கடந்த சர்வதேசியச் சூழலில், வாழ்விற்கு அத்தியாவசியமான பொது மானிடப் பண்புகள் அழகிய உருவங்களாக, வெளிவருதலைக் காணலாம். இது இவரின் கதைகளில் குறிப்பிடப்பட வேண்டிய அம்சமாகும்.

வாழ்க்கைத் தாக்கங்களின் தூண்டுதல்களாலோ, அன்றி சமூக முன்னேற்ற விளைவு கருதியோ இவர் பேனாவை எடுக்கவில்லை. இளமையிலேயே தமிழிலக்கியங்களிலும், வடமொழி இலக்கியங்களிலும் இவருக்கிருந்த ஈடுபாடு இவரை ஒரு இரசனை மிக்க வாசகனாக்கியது. அந்த வாசக இரசனை நிலையே தாமும் வாசித்தவை போன்ற நயமிக்க படைப்புக்களை எழுத வேண்டும் என்ற எண்ணத்தைத் தூண்டி விட்டனவாயினும், அதனை சுடர்விட்டெரியச் செய்த சம்பவம் ஈழத்து இலக்கியப் பிரியர்களுக்கு மிக்க மகிழ்வூட்டுவனவாகும். ஆனந்தவிகடன் பத்திரிகை அக்காலத்தில் தன் பத்திரிகையில் "ஆனந்தமடம்" என்ற நாவலுக்கான விமர்சனப் போட்டி ஒன்றை

நடத்தியது. அப்போட்டியில் பங்கு பற்றி, முதற் பரிசைப் பெற்று ஈழத்தின் இலக்கிய உணர்வைத் தமிழகத்திற்கும் கொடிபரப்பினார் பண்டிதர் பொ. கிருஷ்ணபிள்ளை அவர்கள். இவர் பெற்ற இப்பரிசு நேரடியான இலக்கியத் தாக்கத்தை ஈழத்து எழுத்தாளர்களிடையே எழுப்பிவிட்டது. பண்டிதர் பொ. கிருஷ்ணபிள்ளை பெற்ற பரிசால் மகிழ்ச்சியையும், ஆர்வத்தையும் அடைந்த "சம்பந்தன்" எழுதுவதில் தனி அக்கறைகாட்டலாயினர். அத்துடன் இவரின் சிறந்த நண்பர்களாக காலஞ் சென்ற இலங்கையர்கோன், திரு.சி. வைத்தியலிங்கம், சோ.சிவபாதசுந்தரம், பண்டிதர் பொ. கிருஷ்ணபிள்ளை ஆகியோர் அமையவே, இவரின் எழுத்து இலக்கியச் சிறப்புக்களையும் மேன்மையையும் அடையலாயிற்று.

ஆயினும், இவரால் தன் எழுத்துப் பிறக்கும் விதம்பற்றி எதுவும் கூறமுடியவில்லை. "கதை எழுத என்னைத் தூண்டியது எதுவென்று என்னால் கூறமுடியவில்லை...... ஆனால் கற்பனை வரும் போது எழுத ஆசை வரும்" என்கிறார். இவரது கற்பனையைச் சாதாரண மூன்றாந்தர எழுத்தாளனின் கற்பனையுடன் ஒப்பிட முடியாது. ஏனெனில் இவரின் கதைகளைப் படிக்கும் போது சுத்த மனத்துடன் கூடிய ஆத்ம பலத்தின் தவமே அது எனக் கண்டுகொள்ளளாம்.

ஆயினும், இவரின் கதைகளில் சூழல் உலகப்பொதுமையை உணர்த்த கதாபாத்திரங்களின் பெயர்களோ பாரதப்பண்பினை உணர்த்துகின்றன. இதற்கு எந்தவித விசேட அர்த்தமும் கூறமுடியாது. இக்கதைகள் பெரும்பாலன கலைமகள், கிராம ஊழியன் என்ற தென்னிந்தியப் பத்திரிகைகளின் பிரசுரங்களுக்கென எழுதியதாலிருக்கலாம்.

1938- ஆம் ஆண்டளவில் எழுதவாரம்பித்த இவர், இன்றுவரை ஏறக்குறைய இருபது கதைகள் வரையே



எழுதியுள்ளார். இவரின் கதைகள் கலைமகள், கிராமஊழியன், ஈழகேசரி, மறுமலர்ச்சி ஆகிய பத்திரிகைகளில் வெளியாகி உள்ளன.

தாராபாய், விதி, புத்தரின் கண்கள்,கூண்டுக்கிளி, தூமகேது, மகாலஷ்மி, மனிதவாழ்க்கை, சபலம், மனிதன், சலனம், மதம், துறவு-ஆகிய கதைகள் "கலைமகளிலும், அவள், இரண்டு ஊர்வலங்கள், ஆகியன "மறுமலர்ச்சி" இதழ்களிலும், அவன் கிராமஊழியனிலும், கலாஷேத்திரம்-ஈழகேசரி ஆண்டு மலரிலும் வெளியாகியுள்ளன.

கலைமகளில் வெளியான-விதி என்ற கதை அல்லையன்ஸ் கம்பனியர் வெளியிட்ட "கதைக்கோவை" யில் மறுபிரசுரம் செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இவரின் கதைகள் பெரும்பாலும் சமூகக்கதைகளே. "புத்தரின் கண்கள்" ஒன்றுமட்டும் ஈழவரலாற்றை அடிப்படையாகக் கொண்ட ஸ்ரீ சங்கபோதி மன்னன் கண்ணிழந்த கதையைக் கூறுவது. தாராபாய்-இந்து முஸ்லீம் கலவரத்தைப் பின்னணியாகக் கொண்ட வகையில் அதுவும் வரலாற்றுக் கதையாகக் கொண்டாடப்படவேண்டியதுதான். இத்தகைய வரலாற்றுக் கதைகளை எழுதுவது, 1938-ஆம் ஆண்டளவுகளில் ஈழத்து எழுத்தாளர்களிடையே பெருவழக்காக இருந்தது. ஆயினும் இவர் ஒரே கதையுடன் தனது ஈழவரலாற்றுச் சிறுகதை முயற்சிகளை நிறுத்திக்கொண்டதும் குறிப்பிடத்தக்கது.

ஏனைய கதைகள் அனைத்திலும் மனித மனங்களின் சலனங்கள், சபலங்கள், எண்ண உணர்வுகள், ஏக்கச்சுழிப்புகள் என்பன வட்டமிடுகின்றன. நீர்க்குமிழிகளாக பெருகிப் பெருகி உடைந்து வழிகின்றன. அவற்றில் அழிவின், அநித்தியத்தின், உயிரின், உண்மைப் பொருளின் உயிர்ப் பொருட்கள் குமிழ்த்து எழுகின்றன. உண்மையின் உயிர்நாடிகள் நாற்சுவையும் பயப்பக் காவியமாக மலர்கின்றன.

சிறுகதைகளிலே காவியச் சுவையையும், கனத்தையும் கொண்டுவந்த பெருமை இவருக்குரியது. சிறு கதைதானே எனப் பொழுது போக்காகவோ, படித்துவிட்டு விட்டெறியவோ முடியாத கதைகள்-இவருடையவை.

இவரின் கதைகள் பல- பல்வகையான ஏக்கங்களைச் சித்தரிப்பவை. ஆனால் இவ் ஏக்கங்களுக்கு இவர் தீர்வு காணும் முறையே இவரை உயர்ந்த இடத்தில் வைத்தெண்ணச் செய்கின்றது. மனித மனத்தின் ஏக்கங்கள், நிறைவேறாத ஆசைகள் யாவும் முதலிலேயே பலவீனப்பட்டு அங்கலாய்த்தாலும், அவை யாவும் தத்துவ நெறியில், சத்திய வழியில் சென்று அமைதி காண்கின்றன. மனித உணர்ச்சிகளைப் புனிதமாகப் போற்றி அவற்றிற்கும் ஒரு புனிதமான இடத்தைக் கொடுப்பவை இவரின் கதைகள். மானிட வாழ்வில் பலவீன உணர்ச்சிகள் தாமே அதிகம். ஆதலால் பலவீனத்தின் பரிதாப முடிவுகளைக் காட்டுதலே உண்மையான இலக்கியத்தின் பண்பு எனக் கருதுபவர்களிலிருந்து பெரிதும் வேறுபடுகின்றார். என்னதான் பலவீனமாக இருந்தாலும்- அறிவுக்கும், உணர்ச்சிகளுக்கும் ஏற்படும் போராட்டத்தில் அறிவே வெற்றி பெறும்- பெறவேண்டும் என்ற அவாவினை இவரது கதைகளில் காணமுடியும்.

மேலும், மனத்தின் மேற்தளத்தில் நிகழும் உணர்ச்சிகளை மட்டுமல்லாமல், அடிமனதில் ஆழ்ந்து உறங்கிக்கிடந்து, அவ்வப்போது ஏற்படும் அதிர்ச்சிகளால் உள்ளோட்டமாகத் தொழிற்படும் மனவலைகளின் பாதிப்புக்களையும் இவரது கதைகள் சித்தரிக்கின்றன. இவரின் காலகட்ட எழுத்தாளர்களில் இத்தகைய படைப்புக்களை வெளியிட்டவர் இவர் ஒருவரே என்பதும் அவதானிக்கத்தக்கது.



இவரின் கதாபாத்திரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தத்துவார்த்த உருவகங்களாகவே பிரதிபலிக்கின்றன. மானிட வாழ்வும், பிரபஞ்ச பூத இயக்கங்களும், அவற்றிடையே நிகழும் தொடர்புகளும், தொடர்பின்மை போன்ற மயக்கங்களும் இவரின் கதைகளிலே கதாபாத்திரங்கள் மூலம் அலசப்படும். இவ்வலசலில் எழும் மனவோட்டங்களிலே தத்துவ விசாரம் ஒரு நெறியாக வகுக்கப்பட்டிருக்கும். அந்த நெறியினூடே தனி மனிதனின் செயலற்ற தன்மையும், பிரபஞ்ச வாழ்வில் அவன் ஒரு அங்கமேயொழிய, அவனே பிரபஞ்சம் எனும் போலிமயக்க நீக்கவுணர்வும் அழகுறச் சித்தரிக்கப்பட்டிருக்கும். பொதுவில் எல்லாக் கதைகளும் கூறும் பொருள் இதுதான்.

பூரணத்துவம் தான் வாழ்க்கை. பூரணத்துவம் அற்ற எதுவும் வாழ்க்கையல்ல. பூரணத்துவத்தைப் பெற முயலுகின்ற போராட்டமே யதார்த்தம். ஆனால், அந்த யதார்த்தம் தான் வாழ்க்கையல்ல. போராட்டத்தின் பயனுள்ள முடிவே வாழ்க்கை.

இவரின் சிறுகதைகள் யாவும், ஒரு குறிப்பிட்ட எல்லைக் கோட்டிற்குள் வரையறை செய்யப்பட்டது போன்று, அழகாகவும், ஆழமாகவும் அமைந்துள்ளன. இந்த எல்லைப்பண்பு இவரின் கதைகளில் மிகச் சிறப்பாக விளங்கி, சிறுகதையின் அளவிற்கும், உருவிற்கும் ஒரு அர்த்தமான படிமத்தன்மையை அளிக்கின்றது. சமூகக் கதைகளிலாயினும், வரலாற்றுக் கதைகளிலாயினும் இவர் இந்த முறையைக் கையாளத் தவறவில்லை.

பல சம்பவங்களையோ, பல உணர்ச்சிகளையோ, பல பாத்திரங்களையோ மோதவிட்டு, சிறுகதையின் செட்டான, இறுக்கமான உருவங்களை இவர் சிதைக்காமை குறிப்பிடக்கூடியதொன்று. ஒரு உணர்ச்சியையோ, சம்பவத்தையோ சித்தரிக்கும் முறையில் - பனித்துளியில் தென்படும் வானம் போன்ற கனத்தையும் உருவத்தையும் வெளிப்படுத்திவிடுகின்றார். சிறுகதையின் உருவம் பற்றிய

இலக்கணம் இன்னும் வரையறை செய்யப்படாத போதிலும், (ஒருகாலத்திலும் முடியாதவொன்று) படித்து முடித்ததும் சிறுகதையின் உருவம் இப்படித்தான் இருக்கவேண்டும் என்ற மனவுணர்வினை இவரின் சிறுகதை உருவங்கள் ஏற்படுத்திவிடுகின்றன. ஆயினும் இவர் உருவத்தைத் திட்டமிட்டு எழுதுவதில்லை. எழுதிவரும் போதே அதன் உருவமும் வளர்ந்துவிடுகிறது.

இலக்கியத்தில் சூழல் முக்கியத்துவத்தை விட, உரிப்பொருள் முக்கியத்துவமே இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இவர் எழுதியிருக்கிறார். உரிப்பொருள் என்று சொல்லப்படுகின்ற நற்பண்பு, ஒழுக்கம் என்பனவே இலக்கியத்தில் சித்தரிக்கப்பட வேண்டும். அதன் மூலம், பண்பாடு வாய்மை முதலிய நல்லொழுக்கங்களை வாசகர் மனதில் ஏற்படுத்த வேண்டும் என்ற ஆவலின் துடிப்பினையே இவரின் எழுத்துக்கள் வெளியிடுகின்றன.

இவரின் இலக்கிய நண்பர்களான இலங்கையர்கோன், சி. வைத்தியலிங்கம் போன்றோர் யதார்த்தரீதியாகக் கதைகளை எழுதியிருக்க இவர் அப்படி எழுதாததுடன், அது பற்றிய தனது கருத்துக்களை வெளிப்படையாகவும் கூறியிருக்கிறார். "யதார்த்தச் சித்தரிப்பால் நமது மனம் தூய்மையடைவதற்குப் பதிலாக, மேலும் மோசமடைகின்றது. யதார்த்தம் என்பது பைத்தியக்காரத்தனம். இத்தகைய யதார்த்தப் பண்பில் வரும் தேசிய இலக்கியங்கள் - சர்வதேசிய இலக்கியங்கட்கு ஒவ்வாதது - தேவையில்லாதது." என்று கருத்துத் தெரிவித்திருக்கிறார்.

இவர் பண்டைய, குருசீட முறையைப் போன்று கல்வி கற்றதினாலும், பண்டைய, தமிழ், வடமொழி இலக்கியங்களை ஆழ்ந்து படித்து வந்தமையினாலும், மரபுரீதியாக இலக்கியம் எழுதுவதையே விரும்புகிறார். மரபுவழி எழும் இலக்கியங்களே நீடித்து மக்கட்குப் பயன் தரும் என்ற நம்பிக்கையை இவரின்



எழுத்துக்களில் காணமுடிகிறது. எந்தவொரு கதையிலும் மரபுக்கொள்கையை, உருவத்திலாயினும் உள்ளடக்கத்திலாயினும் இவர் மீறவிலலைை என்பதனை ஒவ்வொரு கதைகளும் உணர்த்தி நிற்கின்றன. "மரபு என்பது ஒழுக்க நெறி, சான்றோர் வகுத்த பாதை," என்று கூறும்போது இலக்கியம் என்பது சான்றோர் வகுத்த தோட்டத்தில் முகிழ்க்கும் புத்தம்புதிய பூசனைக்குரிய மலர் எனப் போற்றுகிறார் என்பது புலனாகின்றது.

உரைநடையிலும் இவரது புனிதக்கொள்கையைக் காணமுடிகிறது. இவரது உரைநடை எளிமையும், அழகும் நிறைந்தது. காவியச் சுவை கொண்டது. கற்பனை வளமிக்கவை. ஒவ்வொரு சொற்களும் தேவை கருதி பொருத்தமான இடங்களில் அழகாகக் கோவை செய்யப்பட்டுள்ளன. இவரின் உரைநடையே மனதில் என்னவென்று புரியாத, ஒருவித மனக்கிளர்ச்சியை எழுப்பிவிடுகின்றன. எல்லாவற்றுக்கும் மேலாக இலக்கணவழுவற்றவை என்பது குறிப்பிடத்தக்கது. காரணம் இவர் முறையாகத் தமிழ் கற்ற தமிழ் ஆசிரியர் என்பதால் இருக்கலாம்.

"சிரமமின்றி வசனமெழுதுகின்ற ஆற்றல்- நாவலர் பெருமானுடைய நூல்களாலும், பழைய உரையாசிரியர்களின் வசனங்களில் பழகி இருந்ததாலும் எனக்கு ஒருவாறு வந்துள்ளது... வசனங்கள், பிரயோகிக்கும் சொற்கள் சம்பந்தமாக என்னை நானே திருப்திப்படுத்துவது என்னளவில் எப்போதும் பெரிய பிரச்சனையாக இருந்தது- இருக்கிறது. எழுதி முடித்ததைப் பிறகு பலதடைவை திருப்பித்திருப்பி எழுதுவேன்." என்பதிலிருந்து இவரின் உரைநடைக்குரிய சிறப்பின் காரணத்தை நன்கறியலாம்.

அத்துடன், இவரின் உரைநடையிலே அதிகமாக இல்லாவிடினும், வடமொழிப் பிரயோகத்தையும் காணமுடிகின்றது. இதற்கு இவரின் வடமொழிப் பயிற்சி காரணமாயினும், அக்கால ஏனைய எழுத்தாளரை விட, இவரின் எழுத்துக்களில் வடமொழிச் சொற்கள் ஓரளவு குறைவாகவே காணப்படுகின்றன. எழுத்தில் புனிதமான கொள்கையைக் கடைப்பிடிக்கும் இவர் இதற்குப் பதில் வைத்திருக்கிறார். "வடமொழியோ, தென்மொழியோ உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் போது ஒதுங்கி நிற்கக் கூடாது.

சிலர், இவரின் கதைகள் சிலவற்றைப் படித்துவிட்டு, லா.ச. ராமாமிர்தம், மௌனி போன்றோரின் எழுத்துக்களால் பாதிக்கப்பட்டவர். அதனாற்றான், அவர்களைப் போல எழுதுகின்றார் என்ற தவறான கருத்துக்கு வந்துவிடுகின்றார்கள். இது முற்றிலும் தவறானது என்பதுடன், உண்மைக்கும் மாறானது என்பதனைக் குறிப்பிட்டே ஆகவேண்டும்.

மணிக்கொடிப் பத்திரிகையில் மௌனியின் எழுத்துக்கள் பிரசுரமாவதற்கு முன்னரே, ஏன் லா.ச. ராமாமிர்தம் எழுத ஆரம்பிக்கு முன்னரே, ஈழநாட்டுச் சம்பந்தன் தமது முறையிலே கதைகளை எழுத ஆரம்பித்துவிட்டார் என்பதுடன், அதிகமான கதைகளை அப்போதுதான் எழுதினார் என்பதனை நன்கு கவனிக்கவேண்டும். அதாவது,- லா.ச.ரா, மௌனி- ஆகியோருக்குக் காலத்தால் முற்பட்டவர் சம்பந்தன். என்பதிலிருந்து இவரின் தனித்துவப் பெருமையும், சிறப்பும் வெளியாகின்றது. இவர் எழுத ஆரம்பித்த காலத்திலேயே- உயர்ந்த, சிறந்த இலக்கியப் படைப்புகள் எத்தகையதாக இருக்கும், இருக்க வேண்டும் என்பதனை நன்கு புரிந்திருந்தார் என்றே கருதவேண்டியுள்ளது.



இவர் சிறுகதை உலகிலிருந்து விலகியிருந்தாலும், இவரின் இலக்கியப்பணி ஈழத்துச் சிறுகதை உலகிற்கு நம்பிக்கையூட்டும் - நம்பிக்கையூட்டியதொன்றாகவே இருந்து வருகின்றது. மக்கள் மனதில் நல்லெண்ணத்தை வளர்ப்பதே இலக்கியத்தின் பணி எனக் கூறும் இவர்-- பிரசார நோக்கில் எழும் இலக்கியங்களையும், இலக்கியத்தில் புரட்சி என்றெழும் முயற்சிகளையும் மனமார வெறுக்கின்றார்.

"இலக்கியத்திலும் புரட்சியாம். அ∴தாவது சத்தியத்தில் புரட்சி... இலக்கியம் சத்திய நெறிப்படுத்துவது, சத்தியமாகிய பண்புகள் பிரதிட்டை செய்யப்பட்ட கோயில். இதில் புரட்சி முடியாது. முடிந்தால் அது இலக்கியமல்ல. வேறு ஏதோ ஒன்று." - இதன் மூலமே சம்பந்தன் அவர்களின் எழுத்துக்களின் தன்மையை எளிதில் உணர்ந்துகொள்ள முடிகிறது.

இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த சம்பந்தர் அவர்களின் படைப்புக்கள் 1960 ஆம் ஆண்டுகளிலிருந்து நூலுருப் பெற பல முயற்சிகள் பலரால் எடுக்கப்பட்டு வந்துள்ளன. "கலைமகள்" பத்திரிகையில் இவரது பல படைப்புக்கள் வந்திருந்தமையாலும் இலங்கைக்கு பலமுறை அதிதியாக வந்து நீர்வேலியில் தங்கியிருந்த காலங்களில் ஏற்பட்ட நட்பு இறுக்கத்தாலும் சம்பந்தர் படைப்புக்களை தனது அமுத நிலையம் பிரைவேட் நிறுவனத்தால் வெளியிட திரு. கி. வா. ஜகந்நாதன் முயற்சிகள் எடுத்தார். சம்பந்தர் அவசரம் அவசரமாக இவரது இனிய மாணவன் திரு. சு. இராஜநாயகம் துணையுடன் தனது கையிலிருந்த பத்திரிகை வெட்டுப் பிரதிகளை ஒழுங்காக்கி அவரிடம் கையளித்திருந்தார். துர்ப்பாக்கியவசமாக அவை கி. வா. ஜ. விடம் இருந்து தவறி விட மற்றொரு முறை கி. வா. ஜ. கலைமகள் வெளியீடாக வெளியிட முனைந்து சம்பந்தரிடம் கதைகளைக் கேட்டுப்பெற்றார். அப்போதும் தவறி விட்டனவா, கலைமகள் முயற்சி ஏன் வெற்றி பெறவில்லை என்பதும் சம்பந்தருக்கே தெளிவாகவில்லை.

பின்னர், 1980, ஆம் ஆண்டுகளிலிருந்து திரு. ச. இராஜநாயகம் அவர்கள் இம்முயற்சியிலீடுபட்டும் இதுவரை வெற்றியளிக்கவில்லை.

ஆனால், 1966 இல் செம்பியன் செல்வன், செங்கை ஆழியான் முயற்சிகளால் "விவேகி" ஆகஸ்ட் மாத இதழ் முற்றுமுழுதாக சம்பந்தரின் ஐந்து கதைகளையும் அதற்கேற்ற, ஒரு ஆய்வுக்கட்டுரையும், (அதுவே இங்கு முன்னுரை யாகின்றது) இணைத்து வெளியிடப்பட்டது.

மீண்டும், இங்கு அதே இருவரினால் "சம்பந்தர் சிறுகதைகள்" நூலாகியுள்ளது.

**- செம்பியன் செல்வன் -**

**அதிபர்**
**செங்குந்த இந்துக் கல்லூரி**
**யாழ்ப்பாணம்.**



# பதிப்புரை

ஈழத்துச் சிறுகதை இலக்கிய வரலாற்றில் ஈழத்துச் சிறுகதைத் துறையின் வளர்ச்சிக்கு வித்திட்ட திருமூலர் எனக் கொள்ளும் சி. வைத்திலிங்கம், இலங்கையர்கோன், சம்பந்தன் என்போரில் தனக்கெனத் தனித்துவமான போக்கினையும், ஆளுமையையும் கொண்டிருந்தவர் சம்பந்தனாவார். ஈழம் நவீன இலக்கியத்தில் பெருமையுடன் தலைநிமிரிந்து நிற்பதற்குச் சிறுகதைத் துறை காரணமாயின் அப்பெருமைக்கு வித்திட்ட பெரும்பணி சம்பந்தருடையது. சம்பந்தன் (பிறந்த திகதி: 20-10-1913) தனது இருபத்தைந்தாவது வயதில் எழுத்துலகில் பிரவேசித்தார். 1939- ஆம் ஆண்டு அவர் எழுதிய "தாராபாய்" என்ற சிறுகதை கலைமகளில் வெளியாகியது. யாழ்ப்பாணம் திருநெல்வேலியில் பிறந்து பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களிடம் பாடம் கேட்டுப் புடம் போடப்பட்டவர். ஆசிரியர் பணியில் தமிழாசிரியராக ஈடுபட்டு, இந்தியத் தமிழ் அறிஞர்களுடன் நெருங்கிய தொடர்பும், அதன் விளைவான பாதிப்புகளையும் உள்வாங்கியிருந்தவர். காந்தீயவாதியாக உருவாகியவர். அரையில் வேட்டி, உடம்பை மூடி ஒரு சால்வை. இவை தான் சம்பந்தரின் ஆடையணிகள். கூர்மையான விழிகளும் ஆழ்ந்த புலமையைப் புலப்படுத்தும் தீர்க்கமான பார்வையும் கொண்ட இந்த அறிஞர் ஒரு துறவி போல வாழ்ந்து வந்தார்.

அறிஞர் சம்பந்தனின் சிறுகதைகளின் தரம் உண்மையில் உயர்வானது. அவர் எழுதிய எழுத்தின் ஒரு வரியைக் கூட அவர் எடுத்துக்கொண்ட சிறுகதைப் பொருளின் ஒரு அசைவைக் கூட இன்றைய ஈழத்தின் புகழ் பூத்த சிறுகதையாசிரியர்கள் எட்டவில்லையென்பது மறக்க முடியாத சங்கதி. அவரது சிறுகதைகளை முழுமையாகக் கொண்ட தொகுதி வெளிவரின் இந்த உண்மைகளை உணரமுடியும்

என்ற கருத்து இத்தொகுதி மூலம் ஓரளவு நிறைவேறுகிறது. அவரின் இச்சிறுகதைகளைப் படித்து முடித்ததும் எஞ்சி நிற்கின்ற உணர்வுகள், அற்புதமான அனுபவங்கள் என நான் கருதுகின்றேன்.

இச்சிறுகதைகள் மூலம் தமிழுக்கு அறிமுகமான சம்பந்தர் பிற்காலத்தில் "சிறுகதைகள் அமர இலக்கியமாகா" எனக் கருத்துத் தெரிவித்திருக்கிறார்.அதனால் தான் அவர் முப்பது வருடங்களுக்கு முன்னரே சிறுகதை எழுதுவதைக் கைவிட்டு காவியம் எழுதுவதில் நாட்டம் கொண்டார். "பாசம்" என்ற உரைநடை நாவலைப் புனைந்த இக்கவிஞர் ஆக்கிய கவிதைநூல் "சாகுந்தல காவியம்" ஆகும். சிறுகதை எழுத்தாளர் சம்பந்தன் கவிஞராகியது தான் அவரது உண்மைச் சொரூபம்.

சம்பந்தரின் சிறுகதைகளில் தேடிப் பெற்ற பத்துச் சிறுகதைகளைத் தொகுத்து வெளியிடுவதில் மிக்க மகிழ்ச்சியடைகிறோம். சம்பந்தரின் சிறுகதைத்தொகுதி வெளிவரவேண்டுமென்பதில் இலங்கை இலக்கியப் பேரவை மிகுந்த ஆவல் கொண்டுள்ளது. யாழ் இலக்கிய வட்டத்தின் ஸ்தாபகர் இரசிகமணி கனகசெந்திநாதன் இச்சிறுகதைத்தொகுதி வெளிவர வேண்டியதன் அவசியத்தைப் பலதடவைகள் வலியுறுத்தியிருந்தார். எனவே இத்தொகுதியை வெளியிடுவது காலத்தின் தேவையாகிறது. நம்மை நாம் எடை போடுவதற்கு இத்தொகுதி உதவும்.

- செங்கைஆழியான் -

பதிவாளர்,
பல்கலைக்கழகம்,
யாழ்ப்பாணம்.
10-11-1997



சம்பந்தரின் ஐந்து சிறுகதைகளைத் தொகுத்து 1966, ஆகஸ்ட் மாதம் "விவேகி" சஞ்சிகை "சம்பந்தர் சிறுகதைமலர்" ஒன்றை வெளியிட்டது. அதில் இரசிகமணி கனகசெந்திநாதன் "சம்பந்தர்" குறித்து எழுதியவை.

# சிறுகதைச் சம்பந்தன்

"பன்றி பல ஈன்றுமென்ன குஞ்சரம் ஒன்றீன்றதனால் பயனுண்டாமே"-என்று பழங்கவி ஒருவர் பாடியதில் எவ்வளவோ உண்மை இருக்கிறது. அவசரம் அவசரமாக இடம் நிரப்புவதற்காக ஆயிரம் சிறுகதைகளை சிருட்டிப்பதைவிட அழகும் கலையம்சமும் உடைய ஒரு சில கதைகளே ஆசிரியனை நிலைக்கச் செய்துவிடப் போதுமானவை. அப்படி உணர்ச்சியைக் கிளறி உள்ளத்திற் பதிந்துவிடக் கூடிய சம்பவங்களைப் பொருளாகக் கொண்டு தெரிந்தெடுத்த இனிய சொற்களை அழகுபெறக் கோத்தமைத்துக் கதைகளை எழுதியிருப்பவர் தான் சம்பந்தன் அவர்கள்.

தாராபாய், புத்தரின்கண்கள், கூண்டுக்கிளி, விதி, மகாலஷ்மி, மனிதவாழ்க்கை, மதம், மனிதன், துறவி என்ற கதைகள் கலைமகள் இதழ்களிலும், அவன் என்ற கதை கிராம ஊழியனிலும் இரண்டு ஊர்வலங்கள், அவள் என்ற கதைகள் மறுமலர்ச்சியிலும், கலாஷேத்திரம் என்ற கதை ஈழகேசரியிலும் வெளியாகின. விதி என்ற அவருடைய கதை "கதைக்கோவையில்" இடம் பெற்று அவர் புகழை உயர்த்தியது.

கலைமகள் வாசகருக்காக அவர் எழுதியிருப்பதால் ஈழநாட்டு சூழ்நிலையோ, சம்பவங்களோ இந்நாட்டின் மொழி நடையையோ அவர் பின்பற்றவில்லை. புத்தரின்கண்கள் என்ற கதை மாத்திரம் இதற்கு விதி விலக்காக மின்னுகிறது. ஈழநாட்டைச் சூழ்நிலையாகக் கொண்ட இந்தக் கதை காதலை அடிப்படையாகக் கொண்டது.

சுதர்சனன்-சந்திரன் என்ற கலாவிற்பன்னர்களையும், குருதேவரின் புதல்வியையும் வைத்து நிறைவேறாத காதலைச் சித்தரிப்பது தான் கலாஷேத்திரம் என்ற கதை. ஆசிரியரின் வடமொழிப் பிரேமை இந்தக் கதை முழுவதிலும் ஊடுருவி நிற்கிறது. வர்ணனைகள் காவிய ரீதியில் செல்கின்றன.

"சுதர்சனா! எவளுடைய வடிவத்தினழகைக் கொடிகளிடமும், பார்வை சலனத்தை பெண்மான்களிடமும், புருவத்தின் விலாசத்தை நதிகளிடமும், கூந்தலின் சாயையை மயில்களிடமும், வார்த்தைகளின் மாதுர்யத்தை கிளிகளிடமும் கண்டு நீ பரமானந்தம் அடைகின்றாயோ, அவளை நீயும் அவ்வளவிற்கு ஆகர்ஷிக்கின்றாய்.

மரத்தடியில் இறந்துபோன பிச்சைக்காரப்பெண் ஒருத்தியின் கதையோடு பணக்கார விவாக வீட்டு ஊர்வலத்தைக் சம்பந்தப்படுத்தி எழுதியிருக்கும் ஊர்வலங்கள் என்ற கதை கட்டுக்கோப்பிலும் அம்சத்திலும் சிறந்து விளங்குகின்றது. இந்தியாவில் வகுப்புக்கலவரம் உச்சநிலை அடைந்திருந்த போதும்- அதன் பின்பும் அந்நிகழ்ச்சியைப் பின்னணியாகக் கொண்டு எத்தனையோ அற்புத சிருஷ்டிகள் வெளி வந்தன. ஆனால் அந்தச் சம்பவத்தை வைத்துச் சிரஞ்சீவிக் கதை எழுத தமிழ்நாட்டு எழுத்தாளர்கள் முயலவில்லை. அந்த மனக்கிளர்ச்சியால் துன்பப்பட்ட ஒரே ஒரு எழுத்தாளர் சம்பந்தன் தான். அவர் எழுதிய கதை "மதம்" என்பதாகும். அவரது எல்லா சிருஷ்டிகளிலும் சிறந்ததாக எனக்குப் பிடித்தது இந்தக்கதையே. முஸ்லீம் பெண்ணாகிய சலீமாவைக் காப்பாற்றிச் சந்திரநாத் என்ற ஹிந்து இளைஞன் அவளின் பெற்றோர் வசம் சேர்க்கப்போன இடத்தில் அவனே படுகாயப்படுகிறான். "நான் ஹிந்துவாகப் பிறந்து விட்டேன் நீங்கள் முஸல்மான்களாக பிறந்துவிட்டீர்கள். ஆயினும் என்ன? நாமெல்லோரும் இந்த நாடு பெற்ற குழந்தைகள்தாமே" என்று அருமையான சம்பாஷணையும் நல்ல குறிக்கோளும் இந்தக் கதையை உயர்த்துகின்றன.



இந்த அவசர யுகத்திலே ஒரு நல்ல நாவலை எழுதக்கூடிய பொறுமையும் - கற்பனையுமுள்ள எழுத்தாளர்கள் மிகக் குறைவு. சிறுகதை வளர்ந்த அளவிற்கு நாவலில் நாம் முன்னேறவில்லை என்றே கூறல் வேண்டும். சம்பந்தன் முப்பது அத்தியாயங்கள் கொண்ட பாசம் என்ற நல்ல ஒரு நாவலை ஈழகேசரியில் எழுதியுள்ளார்.

சம்பந்தனின் சிறுகதைகள் ஒரு தொகுப்பாக வெளிவராததாலும் நாற்புறமும் சிதறிக் கிடப்பதாலும் சம்பந்தனை சரியான முறையில் நம்மால் உணரமுடியாது போய்விடுகின்றது. மேலும், இளந்தலைமுறைகளும் விமர்சனக்காரர்களும் ஒரு காலகட்டத்தில் ஈழத்து எழுத்தைச் சரியான முறையில் எடைபோட முடியாதவாறுள்ளது. ஆகவே இவ்விதழில் சம்பந்தனின் 1930 - 1950 க்கும் இடைப்பட்ட கலைமகளில் வெளியான எழுத்துக்களை மட்டும் தொகுத்து வெளியிட்டுள்ளோம். இம்முயற்சி பத்திரிகை உலகிலேயே புதுமுயற்சி. துணிகர முயற்சி. ஒரு பிரபல எழுத்தாளரின் சிறுகதைத் தொகுப்பு நாற்பதே சதங்களில் உங்களுக்குக் கிட்டுகின்றது.

**- இரசிகமணி கனக. செந்திநாதன் -**

# மகாலக்ஷ்மி

**ரா**மு உள்ளே நுழைந்ததும் ஸ்தம்பித்து நின்றான். முதலில் அது யாரென்று கூட அவனால் முடிவு செய்து கொள்ள இயலவில்லை. அப்படி அவனைப் பிரமிக்கச் செய்த அந்த யுவதி எல்லோருக்கும் மத்தியிலே இருந்த பீடமொன்றில் கவிகளின் லக்ஷ்யப்பொருள் போல மௌனமாக இருந்தாள்.

எழுதுகோல் வர்ணங்களைத் தொடுவதால் ஏற்படும் மெல்லிய ஓசையையும் எடுத்துக்காட்டக்கூடிய நிசப்தம் அங்கே குடிகொண்டிருந்தது. எல்லோரும் புலன்கள் ஒடுங்கினவர்களாய்த் தங்கள் தங்கள் சித்திரங்களிலேயே லயித்திருந்தனர். ஆனால் அவர்களுடைய கண்கள் மட்டும் அடிக்கடி அந்தப் பெண் இருந்த திசையை நோக்கித் திரும்பின. அந்தப் பார்வைகளிலே ஒரு சமயம் கலை, ஒரு சமயம் காமவெறி என்று இப்படியான அநேக உணர்ச்சிகள் பிரதிபிம்பித்தன. ஆனால் அவள்? நிலத்தை நோக்கியபடியே சோகத்தில் ஆழ்ந்திருந்தாள். அதுவும் பூமி தேவியைப் பார்த்து, "தாயே! இந்தப் பாவ உடலைச் சுமப்பதிலும் உனக்குத் திருப்தி ஏற்படுகிறதா?" என்று கேட்பதுபோலவே இருந்தது. அவள் தன்னுடைய உடம்பை அழுக்கடைந்த ஒரு கந்தையால் மூடியிருந்தாள். மானம் என்ற ஜீவரகசியத்தைக் காப்பாற்றினாலே போதும் என்ற திருப்தியே அவளை வெளியே கொண்டுவந்திருக்க வேண்டும்.

ராமு மெல்ல மெல்ல நடந்து போய் தன்னுடைய இடத்திலே இருந்தான். அதைக் கவனித்த ஒரு ரசிகன், "இன்றைக்கு உன் கைக்கு ஒரு நல்ல விருந்து கிடைத்திருக்கிறதல்லவா?" என்று கேட்டான். உடனே எல்லோரும் திரும்பி அவனையே பார்த்தார்கள். அவனோ தலை குனிந்தபடி சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். ராமுவின் உற்சாகமற்ற முகத்தைக் கண்ட மற்றொருவன், "வீட்டிலே ஏதோ தகராறு போலும்" என்று சொன்னான். இதைத்தொடர்ந்து எத்தனையோ யூகங்களும் கேலிகளும் கிளம்பின. ஆயினும் வெகு சீக்கிரத்திலே மறுபடியும் அங்கே நிசப்தம் குடிகொண்டது.

அவள் இப்பொழுதும் பொற்பாவைபோல அப்படியே இருந்தாள். ஆனால் அவளுடைய நெற்றியில் இருந்து முத்து உருளுவதுபோல வியர்வை அரும்பி வழிந்து கொண்டிருந்தது. அப்போது ஒருவன் எழுந்து அவளை நோக்கி வந்தான். அவனுடைய முகத்தில் காமத்தின் கோரமான ஒரு வேகம் பிரதிபிம்பித்தது. கண்களிலும் ஆபாசமான அதே வெறி. அதற்கேற்ற ஒரு பேய்ச்சிரிப்பு இன்னும் அவனை வெறுக்கும்படி செய்தது. கிட்ட வந்ததும் அவளையே உற்றுப்பார்த்துக் கொண்டு நின்று விட்டான். யாரோ தனக்குச் சமீபத்தில் வந்து நிற்பதை உணர்ந்த அந்தப் பெண் அச்சத்தோடு திரும்பினாள். அவனும் அதையே எதிர்பார்த்திருந்தவன் போல, "அந்த மார்புத் துணியை கொஞ்சம் தளர்த்திவிடு" என்று அலட்சியமாக சொன்னான். வறுமையின் சோகத்திரைக் குள்ளும் பிரகாசித்துக்கொண்டிருந்த அவளுடைய சரீரம் கணத்துள் ஒடுங்கி உயிரற்றதுபோலக் களையிழந்து காணப்பட்டது. அழகான அந்த முகமும் கார்காலத்து வானம் போல இருண்டிருந்தது. உணர்ச்சியற்று, சலனமற்று, உயிரற்ற பொம்மையாகியே அவள் இருந்தாள். "இதற்கு நீ கூடப் பிரமாதப்படுத்துகிறாயே!" என்று அவன் மறுபடியும் சொல்லிவிட்டு "ஹே! ஹே! ஹே!" என்று சிரித்தான். அதற்குள் அவள் எழுந்து நின்று நீர் நிறைந்த கண்களால் எல்லோரையும் ஒருமுறை பார்த்தாள்.







"சொல்லுகிறபடி சும்மா உட்கார்ந்துவிட்டு லேசாக நாலணாவை வாங்கிக் கொண்டுபோக உனக்கு விதியில்லை." என்று ஒருவன் ஊளையிட்டான்.

"ஐயையோ! இந்த அருந்ததி எதற்காக இங்கே வந்தாளோ!" என்று ஒரு மாடு பேசியது.

"அப்போது, "இந்த மிருகங்களிடம் நீ எப்படியம்மா அகப்பட்டாய்?" என்ற ராமுவின் குரல் எல்லோரையும் அடங்கும்படி செய்தது. அவளுடைய கண்களும் அந்த வார்த்தைகளைச் சொன்ன மனிதனது தரிசனத்துக்காக சுழன்று கொண்டிருந்தன. அதற்குள் பெண்மையின் மானத்தைக் காப்பாற்றத் தன் ஜீவனையே பலி கொடுக்க வருபவன்போல அவன் எல்லோரையும் விலக்கிக்கொண்டு அவளுக்கு முன்பாக வந்து நின்றான். அவள் தலைசாய்ந்து வணங்கினாள். அவனுடைய பாதத்தில் உஷ்ணமான ஒரு நீர்த்துளி விழுந்தது. அதைப்பார்க்க பார்க்க அவனது உள்ளம் கொதிப்படைந்தது. மறுபடியும் ராமுவின் பேச்சானது கம்பீரத்துடன் எழுந்தொலித்தது.

"இவர்களுக்குத் தாய்மார் இல்லை; சகோதரிகளோடும் கூடப் பிறக்கவில்லை; மனைவிமார்களையும் தேவைக்கு விற்று விடுவார்கள். என்னால் என்ன செய்ய முடியும்? உன்னுடைய தரித்திரம் இப்படிச் செய்தது. நாலணா சம்பாதிக்க வந்து கண்ணீர் சிந்துகிறாய். உனக்கு ஆயிரம் நாலணாக்கள் வேண்டுமானாலும் நானே கொடுக்கிறேன். இதோ புறப்படு".

ராமு வெளியே கிளம்பி நடந்தான். அவளும் பின்னாலே போய்க்கொண்டிருந்தாள்.

அவள் வாழ்வெல்லாம் நடந்து நடந்து பழகினவளாயினும் அவனோடு நடந்து செல்ல முடியாமற்

கஷ்டப்பட்டாள். ஜனங்கள் நிறைந்த தெருக்களிலும் அவனுக்குப் பின்னால் ஓடினாள். வீட்டுக்குள் நுழைகிற போதுதான் ராமு திரும்பிப் பார்த்தான். அந்தப் பெண்ணின் உடம்பு முழுவதும் களைப்பினால் வியர்த்திருப்பது தெரிந்தது. 'சீ! வேகமாக நடந்து விட்டேனே' என்று பச்சாதாபப்பட்டான். அப்பொழுது கல்யாணியும் அங்கே வந்து சேர்ந்தாள். அவளைக் கண்ட ராமு "கல்யாணீ! இவளை உள்ளே அழைத்துக் கொண்டு போ" என்று சொல்லிவிட்டு தனது அறைப்பக்கமாகப் போனான். கல்யாணிக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ஆனால் கணவனுடைய உள்ளம் எதனாலோ கொதிப்படைந்திருக்கிறதென்பதைத் தெரிந்து கொண்டு பதிலொன்றும் பேசாமல் அப்பெண்ணைத் தன்னுடன் அழைத்துச் சென்றாள். உள்ளே போனதும் அந்தப் பெண்ணிடமே விசாரித்தாள். நடந்த சம்பவங்களை யெல்லாம் அவள் சொல்லிக்கொண்டு வரும்பொழுது கல்யாணிக்கே அழுகை வந்துவிட்டது. தன் புருஷனுடைய செய்கைகளை உயர்ந்த மனநிலையை கேட்டபோது பெருமையினால் பூரித்து மலர்ந்தாள். கண்களை மூடிக்கொண்டு, "சுவாமி! நீ தான் அவரை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று பகவானிடம் பிரார்த்தித்தாள்.

இதைக்கண்ட அந்த ஏழைப்பெண் "அம்மா! உன் பாக்கியத்திற்கு ஒருநாளும் குறைவு வராது. பகவான் உங்கள் இருவரையுமே ஆசீர்வதித்துக்கொண்டிருக்கிறார்" என்றாள்.

இதைக் கேட்டதும் கல்யாணியின் உள்ளம் மேலும் மேலும் சாந்தியும் சந்தோஷமும் அடைந்தது. அன்றி, அந்தப்பெண்ணுடைய களங்கமற்ற கண்களும் முகமும் இனிய பேச்சும் அவளையும் வசீகரித்துவிட்டன. அதனால் சிறிதுநேரம் வரைக்கும் அவளையே பார்த்துக்கொண்டு இருந்துவிட்டு "உன்னுடைய பெயர் என்ன?" என்று கேட்டாள்.

"துரதிஷ்டக்காரியான எனக்கு யாரோ மகாலக்ஷ்மி என்று பெயரிட்டிருக்கிறார்கள்."





"அப்படிச் சொல்லாதே! உன்னுடைய தூய்மையான மனம் உன்னை எப்போதும் மகாலக்ஷ்மியாகவே வைத்திருக்கும்" என்றாள் கல்யாணி.

மகாலக்ஷ்மிக்கு இந்த ஆசீர்வாதம் பெரிய ஆறுதலாக இருந்தது. எழுந்து கல்யாணியின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தாள். கல்யாணியின் குழந்தை இருதயம் இதைக்கண்டு மேலும் உருகியது. அவள் மகாலக்ஷ்மியைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு, "உனக்கு உற்றார் ஒருவரும் இல்லையென்றாயே, என்னோடு இருந்துவிடுகிறாயா?" என்று கேட்டாள்.

மகாலக்ஷ்மியிடமிருந்து எந்தவிதமான பதிலும் வரவில்லை. அவள் மௌனமாகவே இருந்தாள். அவ்வளவில் கல்யாணி எழுந்து தன் புருஷனிடம் போனாள். அவளை ராமு கண்டதும், "அந்தப் பெண் போய்விட்டாளா?" என்று கேட்டான். "இல்லை" என்று சொல்லிவிட்டு நின்றாள் கல்யாணி.

"அப்படியானால் அவளை அனுப்பிவிடப்போகிறாயா?" என்று அவன் மறுபடியும் கேட்டான். அதற்கும் "இல்லை" என்ற பதிலே வந்தது. "அவளும் உன்னுடைய நிழலில் கொஞ்சக்காலத்துக்காவது ஆறி இருக்கட்டும்" என்று அவன் சொல்லிவிட்டு எழுந்து வெளியே போனான்.

## 2

திடீரென்று தன் வாழ்வில் இப்படி ஒரு மாற்றம் ஏற்படும் என்று மகாலக்ஷ்மி கனவிலும் எண்ணியிருந்ததில்லை. அவளுடைய நைந்துபோன உள்ளம் வெகுநாட்களுக்கு முன்பே நம்பிக்கையையும் தைரியத்தையும் இழந்து சோர்வடைந்துவிட்டது. தன்னுடைய ஷேமத்தை, கேவலம் உயிரைக்கூட ஒரு துரும்பாக மதிக்க இந்த உலகத்தில் ஒருவரும் இல்லை என்பதை அவள் எப்பொழுதோ கண்டு

முடிவு செய்துகொண்டிருந்தாள். ஆனாலும் மரணத்தை அணுக அவளுக்கு மனமில்லை. அதை நினைக்கும் போதுதான் உள்ளபடியே பயந்தாள். எப்படியோ விதியின் ஒருகை அவளைப் பிடித்துவைத்திருந்து இங்கே கொண்டுவந்து தள்ளிவிட்டது. மனித இலட்சியங்கள் போன்ற அந்த இருவரும் அவளை இனிய கண்களால் பார்த்தார்கள். கொடிய பாலையிலே சோர்வடைந்து குற்றுயிராகக் கிடக்கின்ற மனிதருக்குச் சுனையும் நிழலும் கிடைத்ததுபோல அவளுக்கும் அந்தப் பாக்கியம் கிடைத்தது.

இத்தனை நாளும் ஏழை, பிச்சைக்காரி என்று எல்லோராலும் ஒதுக்கப்பட்டவள் இப்பொழுது கந்தர்வகுமாரியாக விளங்கினாள். மானத்தைக் காப்பாற்ற கந்தையும் கிடைக்கப் பெறாதவளுக்கு எத்தனை எத்தனை வர்ணப் புடவைகள்! ஆபரணங்கள். உண்மையில் அவளை அடையாளமே கண்டுகொள்ள முடியாது. கல்யாணி கேட்கிறவர்களிடமும், "அவள் என்னுடைய தங்கை" என்று சொல்லிக் கொண்டாள். அப்படியிருந்தும் மகாலக்ஷ்மி தன்னை மறந்து விடவில்லை. கல்யாணியோடு சமதையாகவோ நேருக்கு நேராகவோ நிற்பதில்லை. வேலைக்காரிபோல பணிவோடு நடந்து கொண்டாள்.

இதைக்கவனித்து வந்த கல்யாணி, ஒருநாள் அவளை அழைத்துத் தன் பக்கத்தில் இருத்திக்கொண்டு "மகாலக்ஷ்மி இனியும் நீ சம்பந்தம் இல்லாதவள் போலத் தூரத்தில் ஒதுங்கி நில்லாதே. ஏதோ பாவ வினையினால் என்னுடைய தாயின் வயிற்றிலே பிறக்கிற உரிமை உனக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் விதி நம்மைச் சேர்த்து வைத்துவிட்டது. நீயே என்னுடைய தங்கை. "அன்பினால் உரிமையானவள்" என்று சொன்னாள். அப்போது மகாலக்ஷ்மியின் கண்களில் நீர் நிறைந்தது. மயிர் சிலிர்த்த அவள் தன் புதிய அக்காளின் கைகளைப் பிடித்து கண்களில் பலதடவை ஒற்றிக்கொண்டாள்.





ஒருநாள் ராமு தன் அறையிலேயே யார் யாருக்கோ எழுதுகிற வேலையிலே முழுகி இருந்தான். வெகுநேரமாகியும் கல்யாணி அந்தப் பக்கத்திற்கே வரவில்லை. ஒருமுறை கூப்பிட்டும் பார்த்தான். அந்தச் சப்தத்தைக் காதிலே வாங்கக்கூடிய நிலையில் உள்ளே ஒருவரும் இல்லை. அதனால் பதிலும் கிடைக்கவில்லை. உற்றுக் கவனித்தான். இடையிடையே சிரிப்பின் மெல்லிய இன்பவோசை வந்து விழுந்து கொண்டிருந்தது. மெல்ல எழுந்து போய்ப் பார்த்தான். கல்யாணி தன் தோழியை ஜோடிக்கிற வேலையிலே எல்லாவற்றையும் மறந்து ஈடுபட்டிருந்தாள். இத்தனை காலமும் பெட்டிகளிலே கிடந்து தூங்கிக் கொண்டிருந்த ஆபரணங்களெல்லாம் மகாலக்ஷ்மியின் அழகான மேனியிலே ஏறியிருந்து பிரகாசித்தன. அவள் நாணத்தால் தலை குனிந்தபடி கல்யாணியைக் கூட பார்க்காமல் இருந்தாள். அவன் மறுபடியும் சப்தம் செய்யாமல் தன் அறைக்கு வந்து கதவைத் தாழிட்டுக் கொண்டிருந்தான். தன் கைத்திறமையைக் காட்டுவதற்கென்றே செய்தவள் போலப் பிறகும் வெகு நேரம் வரைக்கும் கல்யாணி அவளை வைத்து கஷ்டப்படுத்தி விட்டு அழைத்துக்கொண்டு வந்தாள். கதவு பூட்டப்பட்டிருப்பதைக் கண்டதும், "ஐயையோ! அவரைக் காணவில்லையே!" என்று ஏங்கிப்போய் நின்றாள். "அக்கா இன்றைக்கு ஒருவருக்கும் சொல்லாமலே போய்விட்டாரே" என்று மகாலஷ்மியும் சொன்னாள். திடீரென கதவு திறக்கப்பட்டது. ராமு உள்ளே சிரித்துக் கொண்டு நின்றான். மகாலக்ஷ்மி நாணத்தாற் குன்றிப் போய்க் கண்களை மூடிக்கொண்டு சுவரோடு ஒதுங்கினாள். "திருட்டுப் புத்தியைப் பார்த்தாயாடீ!?" என்று சொல்லிக் கல்யாணியும் சிரித்தாள்.

பிறகு மகாலக்ஷ்மியைத் தனக்கு முன்பாக இழுத்துவிட்டு, "ஒரு நிமிஷம் தான் பார்க்க வேண்டும். திருஷ்டி பட்டுவிடப் போகிறது" என்று தன் புருஷனுக்கு எச்சரிக்கை செய்தாள். புது மணப் பெண் போல அலங்கரிக்கப்பட்டிருந்த

அந்தச் சௌந்தரியத்தை ராமு ஆவல் நிறைந்த கண்களால் பார்த்துவிட்டு, “இவளுடைய மணவாளன் யாரோ?” என்று கேட்டான்.

“ஏன்? ஸ்ரீமந் நாராயணன் தானே இவளுடைய புருஷன்!” என்றாள் கல்யாணி.

“அப்படியானால், ராமனும் ஸ்ரீமந் நாராயணனுடைய அம்சந்தானே! எனக்கே இவளைக் கொடுத்து விடுகிறாயா?” என்று சிரிப்பை அடக்கிக் கொண்டு கேட்டான்.

உடனே அவள் மகாலக்ஷ்மியின் கையைப் பிடித்து, “இந்தாருங்கள் வேண்டுமானால் இப்பொழுதே ஏற்றுக் கொள்ளலாம்” என்று சொன்னாள். மகாலக்ஷ்மி எப்படியோ தன்னை விடுவித்துக்கொண்டு உள்ளே ஓடி விட்டாள்.

கல்யாணி அங்கே வந்ததும், “அக்கா! உனக்கு இனியும் இந்தக் குழந்தைப் புத்தி மாற மாட்டேன் என்கிறதே!” என்று சொல்லித் தன் வேஷத்தைக் கலைக்கத் தொடங்கினாள்.

வரவர ராமு மகாலக்ஷ்மியோடு அந்நியமின்றிப் பழகினான். அவளுடைய தெய்வீக அழகு அவனை இழுக்கத் தொடங்கிவிட்டது. அதனால் கல்யாணியையும் அவளையும் ஒப்பிட்டுப் பார்த்துத் திருப்தி அடையத் தொடங்கினான். உண்மையில் அந்த இரண்டு பேருக்கும் தோற்றத்தில் அவ்வளவு வித்தியாசம் இல்லை. கல்யாணி கொஞ்சம் உயர்ந்திருந்தாள். வயசிலும் இரண்டொரு வருஷம் வித்தியாசம் இருக்கலாம்.ஆனால் அவளுடைய சௌந்தரியம் சாசுவதமானது. சுனைக்கரையில் மதர்த்து வளர்ந்த பசுங்கொடிபோலப் பூரித்து விளங்கினாள். இடையீடின்றி அவளுடைய அமைதியான அழகிலேயிருந்து ஒரு கந்தர்வகானம் எழுந்து எல்லோரையும் களிக்கச் செய்து கொண்டுதான் இருந்தது. ஆனால் மகாலக்ஷ்மியோ நீண்ட







முதுவேனிலின் கொதிப்பிலே சுருண்டு கிடந்த மலர்க்கொடி. கார் தந்த பெருமழையின் இனிமையினால் தளிர்த்துப் புதிய சோபை பெற்றுப் பிரகாசிப்பது போல இருந்தாள். அன்றியும் பருவத்தின் மறுமலர்ச்சி இப்பொழுது தான் அவளிடம் நிறைந்து இந்திரஜாலம் பண்ணிக்கொண்டிருந்தது.

கல்யாணி மலர்ந்த மணமுள்ள புஷ்பம். அழகுள்ளது: மகாலக்ஷ்மியோ மலர்ந்து கொண்டிருக்கும் போது அதில் உதயகாலத்துப் புதுமணம் நிறைந்திருந்தது. வைத்த கண்களை மீட்க முடியாது ஒரு வசீகர சக்தியும் பெற்று மற்றவர்களை வலிந்து இழுத்துக்கொண்டிருந்தது.

ராமுவின் இதயத்தின் ஒரு மூலையிலேயிருந்து இந்தக் காமவெறி வளரத்தொடங்கி விட்டது. மகாலக்ஷ்மியோ தூரத்தில் இருந்து கொண்டே அவனுக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்து வந்தாள். நெருங்க அவளுக்குப் பயமாக இருந்தது. ஆனால் இந்த இரண்டு உள்ளங்களும் மனிதனால் உணர முடியாத ஒரு மௌன பாஷையிலே பேசித் திருப்தி அடைந்தன. கல்யாணியின் கபடமற்ற உருவமே அவர்களுக்கு இடையில் மலை போல வளர்ந்து நின்று தடை செய்து கொண்டிருந்தது. இதற்குள் அவன் எத்தனையோ தடவை மகாலக்ஷ்மியோடு பேசுவதற்கென்று வாயெடுத்து விட்டுத் தன்னை அடக்கிக்கொண்டிருந்து விட்டான். அவளும் இதை நன்றாக அறிந்துகொண்டே மௌனமாக இருந்தாள். சில சமயங்களில் அவளுடைய உள்ளமும் புயலில் அடிபட்ட படகு போலத் தடுமாறும். உடனே தைரியமான மாலுமி போலத் தன் உள்ளத்தின் வெறியைநோக்கிச் செலுத்தி அந்த நிலைமையைச் சமாளித்துக்கொள்வாள்.

# 3

**அ**ன்றைக்குக் கல்யாணிக்கு உடம்பு சரியாக இல்லை. வெளியே வராமற் படுத்திருந்தாள். மகாலக்ஷ்மி வேலைகளை முடித்துக்கொண்டு வந்து அவளுக்குப் பக்கத்திலே இருந்தாள். அப்பொழுது ராமு உள்ளே வந்து, "இன்றைக்குச் சாப்பாடு கூடக் கிடைக்காது போலிருக்கிறதே" என்றான்.

அதைக்கேட்ட கல்யாணி மகாலக்ஷ்மியைப் பார்த்து, "நீ போய் பரிமாறிவிட்டு வா. அரைவாசியோடு எழுந்து போகவிடாமல் மட்டும் பார்த்துக்கொள்" என்று சொல்லி அனுப்பிவிட்டாள். அவள் எழுந்து சமையல் அறைக்குள்ளே போனாள். அவனும் பின்னாலே நுழைந்தான். மகாலக்ஷ்மி பரிமாறிக்கொண்டு நிற்கும்போது ராமு அவளையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். சாப்பிடுவதிலும் அவன் மனம் செல்லவில்லை. எத்தனையோ காலமாக வெளியே ஓடி விடுவதற்கு அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் கைதிக்குக் காவலும் நீங்கிவிட்டால் எப்படிக் காற்றாகப் பறப்பானோ அதுபோலவே அவனுடைய உணர்ச்சிகளும் அறுத்துக் கொண்டு ஓடின. எல்லாம் பரிமாறப்பட்ட பிறகும் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். மகாலக்ஷ்மியின் உடம்பு முழுவதும் வியர்வையினால் நனைந்து விட்டது. வெட்கம் கண்களை மறைக்க, நிலத்தைப் பார்த்தபடியே சிலைபோல நின்றாள். அதைக் கவனித்த ராமு, "சீ எதற்காக அத்தனை கஷ்டப் படுகிறாய்?" என்று சொல்லிக்கொண்டே எட்டி அவளுடைய கையைப்பிடித்தான். இந்தத் தடுமாற்றத்தில் அவளுடைய கையிலிருந்த பாத்திரம் நழுவிக் "கணீர்" என்று கீழே விழுந்து உருண்டோடியது. அவனும் திகைத்துப் போனான். அதனால் எழுந்து வெளியே போய்விடுவதற்குப் பிரயத்தனப்பட்டான்! மகாலக்ஷ்மி திடீரென்று அவன் முன் வந்து நின்று "சாப்பிடாமல் போகக்கூடாது" என்று தடுத்தாள். அவன் திரும்பவும் உட்கார்ந்து சாப்பிடத்தொடங்கினான். ஆனால் வழக்கத்திலும் குறைவாகச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு எழுந்து போய் விட்டான்.





மகாலக்ஷ்மி அவனை நினைத்து ஏங்கும் உள்ளத்தால் அன்று இரவைக் கழிக்க வேண்டியவளாக இருந்தாள். படுக்கைக்குப் போயும் வெகு நேரமாகி விட்டது. நித்திரை வரவில்லை. அங்கும் இங்கும் புரண்டு புரண்டு படுத்துப் பார்த்தாள். கடல் போலக் கொந்தளிக்கின்ற உள்ளத்தில் சாந்தி பிறக்கவில்லை. அன்று பகல் அவன் கைபட்ட இடத்திலிருந்து ஏதோ ஒரு காந்தசக்தி எழுந்து உடம்பில் அலை அலையாய் பரவிக்கொண்டிருந்தது. பருவத்தின் பேயுணர்ச்சிகள் அவளை மதயானை போல இழுத்துக்கொண்டு ஓடின. மூலைக்கு மூலை யாரையோ தேடுவது போல அடிக்கடி திரும்பிப் பார்த்தாள். எங்கும் நிறைந்த நிசப்தத்தை கிழித்துக் கொண்டு, "மகாலக்ஷ்மீ!" என்று யாரோ கூப்பிடுவது போலக்கேட்டது. உற்றுக் கவனித்தாள். தூரத்திலிருந்து ஒரு கோழி அழைத்த குரல். அவளுக்குத் தேவையற்ற குரல்தான் கேட்டது. உடனே வேறு வேறு திசைகளிலிருந்து பல கோழிகள், முறை முறையாகக் கூவுகிற சப்தங்கள் காற்றிலே மிதந்து வந்து மறைந்து கொண்டிருந்தன. வேதனையால் எழுந்து படுக்கையிலேயே இருந்தாள். பக்கத்திலே தணிந்து எரிந்து கொண்டிருந்த விளக்கும் அவளைப் பார்த்துச் சிரிப்பதுபோல இருந்தது. அதனருகில் போவதற்குள்ளாக அவளது நீண்ட பெருமூச்சே அதை அவித்துவிட்டது. ஆனால் க்ஷணத்துள் எங்கும் அந்தகாரம் நிறைந்து பயங்கரமாக இருந்தது. அதையும் அவளாற் சகிக்க முடியவில்லை. ஜன்னல் ஒன்றைத் திறந்து வெளியே பார்த்தாள். வானத்தின் ஒரு கோடியிலே மட்டும் இரண்டொரு நஷத்திரம் மின்னின. முகில் மந்தை மந்தையாக ஏதோ ஒரு திசையை நோக்கி ஓடிக்கொண்டிருந்தன. எல்லையின்றி நீண்டிருந்த அந்த வானவெளியை விட்டுத் தோட்டப்பக்கத்தைப் பார்த்தாள். அவ்வளவில் அவளுடைய உடம்பு நடுங்கியது. ரத்தம் உறைந்துவிட்டது போல அடிபெயர்க்கவும் முடியாமல் நின்றாள். "ஜன்னலை அடைத்துவிட்டுப் போய்ப்படு. நில்லாதே" என்று அவளுடைய அந்தரங்கத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது.

ஆனால் அதற்குச் செவிகொடுக்க முடியாமல் நின்று அவள் தயங்கினாள். அதற்குள் ராமு ஜன்னலுக்குப் பக்கத்தில் வந்து நின்றான். உடனே "மகாலக்ஷ்மீ!" என்ற அவனது குரல் ஆழத்திலிருந்து கேட்பது போல அடக்கமாக வெளிவந்தது. அவள் பேசவில்லை. தடுமாற்றத்தோடு அவனைப் பார்த்துக்கொண்டே நின்றாள். மறுபடியும் அதே தாகம் நிறைந்து குரல் எழுந்தது. "ஐயோ எதற்காக வந்தீர்கள் தயைசெய்து போய்விடுங்கள்"

அவ்வளவில் அவன் குருடன் போல கைகளை நீட்டி ஜன்னலின் கம்பிகளைத் தடவினான். மகாலக்ஷ்மிக்கு மேலே வார்த்தைகள் வரவில்லை. சுவரைப் பிடித்தபடியே களைப்படைந்து நின்றாள். "ஐயோ நீ எங்கே நிற்கிறாய்? மகாலக்ஷ்மி! நித்திரையற்ற என் கண்களை உன் கைகளினாலே தொட்டு மூடிவிடு. நான் ஓடிவிடுகிறேன்" என்று அவன் வெளியே நின்று யாசித்தான். உத்தரவை எதிர்பாராமலே அவளுடைய கைகள் கதவைத் திறந்தன. ராமு உள்ளே பறந்தான். அவனுடைய கண்கள் மெல்ல மெல்ல மூடிக்கொண்டன.

## 4

கல்யாணி மெய்மறந்த தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். திறந்து கிடந்த கதவின் வழியாக குளிர் காற்று உள்ளே புகுந்து அவளுடைய நித்திரையைக் கலைத்துவிட்டது. போர்வையைத் தேடிக்கொண்டு எழுந்தவள் விளக்கும் அணைந்திருப்பதைக் கண்டு அதை ஏற்றினாள். அப்பொழுது தான் திறந்தபடி கிடந்த கதவையும் பக்கத்திலே வெறிச்சென இருந்த படுக்கையையும் கண்டாள். ஆயினும் உடனே அவளுக்குச் சந்தேகம் ஏற்படவில்லை. அதனால், "நீங்கள் எழுந்திருக்க வேண்டுமானால் என் நித்திரையையும் குழப்பியே போக வேண்டும் என்பது போலக் கதவையும் திறந்து காற்றிடமும் சொல்லிவைத்துவிட்டுப் போய்விட்டீர்களே! இது நீதிதானா?"







என்று கேட்கவேண்டுமென்று எண்ணிக்கொண்டே காத்திருந்தாள். ஆனால் அவன் வரவில்லை. நேரம் செல்லச் செல்ல அவளுடைய மனதில் ஒருவிதமான சந்தேகம் தோன்றியது. அறையை விட்டு வெளியே வந்தாள். கால்கள் அவளை மகாலக்ஷ்மியின் அறைப்பக்கமாக இழுத்துச் சென்றன. அந்த அறைக்குள்ளும் மையிருளே பரந்திருந்தது. ஆனால் மெல்ல அவர்கள் பேசுகிற சப்தம் ஓடி வந்த அவளுடைய காதுகளிலே நாராசம் போல விழுந்தது. திடீரென்று கல்யாணிக்கு வழிதிசை ஒன்றும் தெரியவில்லை. சுவரோடு சாய்ந்தபடி மௌனமாக இருந்தாள். நம்பிக்கையை இழந்து அவளுடைய இருதயம் ஊளையிடத் தொடங்கியது. தன் ஜீவனையே அர்ப்பணம் செய்து ஒரேயொரு மாணிக்கத்தைப் பூட்டிவைத்து, "என்னுடையது" என்று அவள் இதுவரை இறுமாந்திருந்தாள். மரணத் துன்பம் நெருங்கி வருகிற போதும் ராமுவினுடைய களங்கமற்ற அன்பின் அமிர்த சுகத்திலே அதை மறந்துவிடலாமென்று அவள் கட்டியிருந்த கோட்டையில் இடிவிழுந்துவிட்டது. இனி எங்கே போக வேண்டும் என்பதும் அவளுக்கு விளங்கவில்லை. ஒருவாறு எழுந்து தடவிக்கொண்டே தன் அறைக்கு வந்தாள். உடனே நெஞ்சை அமுக்கிக் கொண்டு படுக்கையில் விழுந்துவிட்டாள். கண்களிலிருந்து மட்டும் நீர் ஆறாகப் பெருகிக்கொண்டிருந்தது. அடக்கி அடக்கி எழும்புகிற மூச்சுக்கள் அடிக்கடி திணறிக்கொண்டு வெளிக்கிளம்பின.

வெகு நேரத்திற்குப் பிறகே வெளியிலே காலோசை கேட்டது. கல்யாணி மறுபக்கம் திரும்பிக் கிடந்தாள். ராமு பூனை போல் உள்ளே நுழைந்து படுத்துக்கொண்டான். தான் போகும் பொழுது அணைத்துவிட்ட விளக்கு எரிந்துகொண்டிருக்கிறதே என்ற எண்ணம் பிறகுதான் அவனுடைய மனதிலே பட்டது. உடனே திடுக்கிட்டுப் போனான். பிறகு அவன் கண்கள் மெல்லக் கல்யாணியைப் பார்த்தன. அவள் அழுதுகொண்டே கிடக்கிறாள் என்பதைக் கண்டதும் அவனால் அசைய முடியவில்லை. படுக்கையே நனைந்து விடும்படியாக வியர்வை

ஒழுகியது. அசையாமல் அப்படியே கிடந்துவிட்டான்.

ராமு வெளியே வந்தபிறகு மகாலக்ஷ்மி எழுந்து கதவைத் தாழிடப் போனாள். அப்பொழுது அவளுடைய கழுத்திலே கிடந்த வைரமாலை நழுவிக் கீழே விழுந்தது. ஒருநாள் கல்யாணி அந்த மாலையை எடுத்து, "இது உனக்குத்தான் பொருத்தமாக இருக்கிறது. நீ இதைப் பார்க்கிற சமயங்களிலாவது என்னை நினைத்துக்கொள்ள வேண்டும்." என்று சொல்லி அவளுடைய கழுத்தில் அணிந்துவிட்ட ஆபரணந்தான் அது. கீழே விழுந்து கிடந்த அந்த மாலையை எடுப்பதற்கு மகாலக்ஷ்மி குனிந்தாள். திடீரென்று கல்யாணியின் முகம் முன்னுக்கு வந்து நின்றது. அவ்வளவில் சோர்வடைந்து படுக்கையிலே வந்து சரிந்தாள். பழைய ஞாபகங்கள் மாலை மாலையாக வந்து விழுந்தன. தேவி இந்தப் பிச்சைக்காரியை வரவேற்று, "எல்லாம் உன்னுடையவை. நீயே என் தங்கை" என்று ஒரு நாளில் இந்த மேலான வாழ்வினைத் தந்தாய். மறுபடியும் என்னை மகிழச் செய்வதற்காக உன் அந்தஸ்த்துக்கு ஏற்காத தொண்டுகளையும் செய்தாய். எனது கீழ்மைக் குணத்தை அறிந்தவள் போல உன் தாய் சந்தேகித்த போதும், "அம்மா மகாலக்ஷ்மி நல்லவள். என்னை விட நீ அவளையே நம்பலாம்." என்று அவளுக்கும் என்னிடம் நம்பிக்கையை உண்டு பண்ணி வைத்தாய். இன்றைக்கும், "நீயே போய் அவருக்குச் சாப்பாடு போட்டு விட்டு வா" என்று நம்பி என்னை அனுப்பினாயே! உனது ஒப்பில்லாச் செய்கைகளுக்கெல்லாம் நான் செய்த இந்தப் பிரதியுபகாரத்தை நீ அறிந்தால்? அப்பால் அவளுடைய சிந்தனைகள் சுழன்றன. வெகு நேரத்திற்குப் பிறகே ஒரு மூச்சு வந்தது. சுவாதீனமற்ற நிலையிலேயே மகாலக்ஷ்மி அந்த இரவைக் கழித்தாள்.

பொழுது புலர்வதற்கிடையில் ராமு எழுந்து வெளியே போய்விட்டான். ஆனால் கல்யாணி அன்று படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. மகாலக்ஷ்மியும் வெளியே வர விரும்பாமல் அறையைப் பூட்டிக்கொண்டு கிடந்து விட்டாள்.





கதவு, சுவர், ஜன்னல்கள் என்ற ஜடப்பொருள்களையே அவளாற் பார்க்க முடியவில்லை. யாராவது வெளியே போகிற வருகிற ஓசையைக் கேட்டாலும் கண்களை மூடிக்கொண்டு அவதிப்பட்டாள். நடுப்பகலான பிறகு சமையற்காரி வந்து கதவைத் தட்டி "அம்மா! எழுந்து சாப்பிடுங்களேன்" என்று கேட்ட போது, "இப்பொழுது எனக்கு உடம்பு சரியாக இல்லை. வேண்டும் போது நானே வந்து சாப்பிடுகிறேன். மறுபடியும் வந்து தொந்தரவு செய்யாதே" என்று சொல்லி அவளையும் அனுப்பிவிட்டு உள்ளேயே கிடந்தாள்.

பயங்கரமான இந்த அமைதியைக் கண்ட வேலைக்காரரும் மறைவாகத் தங்களுக்குள்ளே பேசிக் கொண்டிருந்தார்கள்.

மெல்ல மெல்ல அந்தப் பகற்பொழுதும் கழிந்து விட்டது. மகாலக்ஷ்மி நாழிகைகளை எண்ணிக்கொண்டே நள்ளிரவை எதிர்பார்த்திருந்தாள். வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் நித்திரையில் ஆழ்ந்தார்கள். சமையற்காரி ஒருத்தி விடுகிற குறட்டைச் சப்தம், எங்கும் நிறைந்து கிடந்த அந்த நிசப்த சித்திரத்தைக் கீறுவது போல அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தது. "இந்த சப்தத்தை நான் மறுபடியும் கேட்கக்கூடியதாக ஒரு நாள் வரப்போவதில்லை" என்று எண்ணும் போது அவள் கண்களில் நீர் நிறைந்தது. எப்படியோ தன்னைத் தயார் செய்து கொண்டு வெளியே காலை எடுத்து வைத்தாள். பிரிவென்னும் சகிக்க முடியாத பெரிய துன்பம் அவளுடைய இதயத்தில் அடித்து நெகிழச் செய்தது. கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தாள். கல்யாணியின் அறையில் வெளிச்சம் தெரிந்தது. மெல்ல நடந்து போய் ஜன்னல் வழியாகப் பார்த்தாள். கல்யாணி நித்திரையில் ஆழ்ந்து கிடந்தாள். அவளுடைய முகத்தின் ஒரு பகுதிதான் தெரிந்தது. அதிலும் பாதியைச் சேலை மூடியிருந்தது. கருணை ஒழுகுகிற அந்த முகத்தின் பூரண சௌந்தரியத்தைக் கடைசியாக ஒருமுறையாவது பார்த்து விட்டுப் போக வேண்டுமென்று அந்த ஏழையின் இருதயம் அவலப்பட்டது. அவளை அறியாமல், "அக்கா!" என்று கூப்பிடுவதற்கு இதழ்கள்

குவிந்து நடுங்கின. மறுபடியும் கண்களிலிருந்து நீர் ஒழுகியது. அப்பொழுது தான் வேறொரு படுக்கையிலே ஆழ்ந்த துயிலில் மூழ்கிக் கிடந்த ராமுவின் தோற்றமும் மங்கலாகத் தெரிந்தது. சிறிது நேரம் வரையும் அப்படியே நின்று விட்டாள். "போதும் இனிக் கிளம்பு" என்று அவளுடைய அந்தராத்மா ஞாபகப்படுத்தி உயிரினும் இனிய அவர்களைப் பார்ப்பதற்குக்கூட விடாமல் வெளியே இழுத்தெறிந்து விட்டது.

உடனே அவள் ஏதோ ஒரு திசையில் வேகமாக ஓடிமறைந்து விட்டாள். ஒரு வேளை காரிருள் தான் அவளை விழுங்கி மகிழ்ந்ததோ?



# மதம்

"சலீமா!"

அவள் அசையவில்லை. சந்திரநாத் அவளைப் பார்த்தடியே நின்றான். நிமிஷங்கள் ஒவ்வொன்றாகக் கழிந்துகொண்டே இருந்தன. அவள் தலையில் முக்காடு விலகி ஒரு புறத்திலே கிடந்தது. முதல் நாள் வாரிவிட்ட கூந்தல் கலைந்து பறந்து கொண்டிருந்தது. முகத்தை மேசையோடு சேர்த்தபடி கவிழ்ந்திருந்தாள். ஆயினும் அவள் விம்மி விம்மி அழுது கொண்டிருப்பது நன்றாகவே தெரிந்தது. சந்திரநாத் மறுபடியும் "சலீமா!" என்று கூப்பிட்டான். அப்பொழுது அவனுடைய குரலிலும் ஒரு வித கரகரப்பு தட்டியது. சில நிமிஷங்கள் கழிந்தன. அவள் அசையாமல் அப்படியே தான் இருந்தாள். மூன்றாம் முறையாகவும் கூப்பிட்டுக்கொண்டு அவன் மெல்ல மெல்ல நடந்து அவளுக்கருகில் வந்தான். அப்பொழுதுதான் அவள் தலையைத் தூக்கினாள். கண்ணீர் அவளது பொன் போன்ற கன்னங்களில் கோடு கிழித்து ஓடிக் கொண்டிருந்தது. அதைப்பார்த்தவுடன் அவனும் பேசமுடியாமல் அழுபவன் போலவே நின்றான். சிறிது நேரம் சென்றது. பிறகு அவள் அவனைப் பார்த்து ஒருவித ஏளனம், ஆவேசம் எல்லாம் கலந்த குரலில் இதைக் கேட்டாள்:

"உங்கள் ஹிந்து சமூகத்திற்கு மேலும் மேலும் வெற்றிக்குமேல் வெற்றி கிடைக்கிறது. இல்லையா?"

சந்திரநாத் ஒன்றுமே பேசவில்லை. அவள் அதே தொனியில் மறுபடியும் பேசினாள். ஆனால் விஷயம் வேறொன்றாக இருந்தது.

"என்னை எதற்காக இங்கே கொண்டு வந்து வைத்திருக்கிறீங்கள்?"

இப்படியாக ஒரு கேள்வி கிளம்பும் என்று அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அதனால் சிறிது நேரம் யோசித்துக் கொண்டே நின்றுவிட்டு பிறகு சொன்னான்:

"உன் தந்தையும் இதையே விரும்பியிருந்தார். என் கடமையும் இதுதானே?"

அவள் மேலும் பேச விரும்பாதவள்போலவே மௌனமாக இருந்தாள். சந்திரநாத் அவளைப் பார்த்தபடியே அங்குமிங்குமாக நடந்து கொண்டிருந்தான். சிறிது நேரம் சென்றதும் அவள் மீண்டும் ஆரம்பித்தாள். அதற்குள்ளாக மறுபடியும் அவளுடைய கண்கள் கலங்கி விட்டன.

"அந்தப் பக்கத்தில் வசித்த நம் ஜனங்கள் எல்லோருமே கொல்லப்பட்டு விட்டார்களா?"

"எனக்கு நிச்சயமாக ஒன்றுமே தெரியாது, சலீமா. நான் இங்கே வருவதற்கு முன்பே எல்லாம் நடந்து விட்டது. உன் தந்தையார் உன் விஷயமாக அறிவித்திருந்தாராம். அதைக்கேட்டதுமே புறப்பட்டு உன்னிடம் வந்தேன்".

அவள் மறுபடியும் விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அதைப்பார்த்ததும் அவன் கிட்டச் சென்று, "சலீமா, எப்படியோ எல்லாம் நடந்து விட்டது. வீணாக அழாதே. அழுது தான் வரப்போவது என்ன? நீ ஒரு குழந்தையா?" என்று ஆறுதல் சொன்னான்.





அவளுடைய கண்களும் முகமும் சிவந்து பொங்கி இருந்தன. அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

அப்போது வேலைக்காரி ஒருத்தி ஒரு தட்டில் ஏதோ உண்ணுவதற்கும் குடிப்பதற்கும் கொண்டு வந்து அவள் முன்னிலையில் வைத்துவிட்டு சென்றாள். அவளை இடைமறித்து, "இது யாருக்காக?" என்று சலீமா கேட்டாள். அந்த வேலைக்காரி ஒன்றுமே பேசாது சந்திரநாத்தையும் அவளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

அப்போது அவன் பதில் சொன்னான்: "வீணாக உன்னையே வெறுத்துக் கொள்ளுகிறாய். நீ படித்தவள். அதிலும் அறிவுள்ளவள். வாழ்க்கையிலே எல்லோருக்குமே துன்பங்கள் எதிர்பாராத நிலையில் மலைபோல வந்து விழுகின்றன. அதற்காக எல்லோருமே இறந்து விடுகிறார்களா?"

அவள் ஆவேசத்துடன் எழுந்து நின்று சொன்னாள்:

"இது தற்செயலாக நிகழ்ந்த ஒன்றா, மறந்து விட? பழிக்குப்பழி வாங்க முடிந்தால் ஒரு சமயம் நான் மறக்கக்கூடும். என் ஆசையும் அதுவே."

"பழிக்குப்பழி வாங்க வேண்டும் என்னும் எண்ணமே இன்று தேசம் முழுவதும் நடக்கும் எல்லாக் கொடுமைக்கும் காரணம் என்பதை நீ உணரவில்லையா சலீமா?"

"எங்கோ எவனோ யாரையோ கொன்றதற்கு வேறு ஒரு மூலையிலே வாடும் ஒன்றுமறியாத மக்களைக் கொன்று சூறையாட நான் விரும்பவில்லை. என் பெற்றோர்களை, உறவினர்களை, காரணம் நீதி நியாயம் ஒன்றுமே இன்றி யார் கொன்றார்களோ அவர்களையே தண்டிக்க வேண்டும் என்று உயிர் துடிக்கிறது. இதில் நியாயம் இல்லை என்று சொல்ல யாராலும் முடியாது."

"சலீமா, நீ சொல்வது சரியாகவே இருக்கலாம். ஆனால் அதில் ஒரு பிரயோஜனமும் கிடைக்கப்போவதில்லை. பதிலுக்கு இன்னும் அனேகருடைய கண்ணீரால் நமது நாட்டு மண் நனைக்கப்படும் என்பது மட்டும் நிச்சயமாகும்."

இந்த வார்த்தைகள் அவளிடத்தில் ஒருமாறுதலையும் உண்டு பண்ணி விடவில்லை. அவள் முன்போன்ற உணர்ச்சிகளுடனேயே காணப்பட்டாள். பேச்சை நிறுத்தி விட்டு அவளைப் பார்த்தபடியே சந்திரநாத் மௌனமாக இருந்தான். சிறிது நேரத்திற்குள் அவள் மறுபடியும் எழுந்து நின்று, "இவ்வளவிற்குப் பிறகும் என்னை எதற்காக இங்கே பாதுகாத்து வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? நான் போக வேண்டும். இதைத்தவிர என்னால் இப்போது வேறு ஒன்றும் சொல்ல முடியாது" என்று சொன்னாள்.

"எங்கே போக வேண்டும் என்கிறாய்?"

"எங்கேயா? என்னுடைய இடத்திற்குத்தான். முஸ்லிம்கள் என்று பிறந்த ஒரு குற்றத்திற்காக அநியாயமாக யார் யார் கொல்லப்பட்டார்களோ அவர்கள் செத்து கிடக்கும் இடத்திற்குத் தான் நான் போக வேண்டும்".

சந்திரநாத் இதற்கு ஒரு பதிலும் சொல்ல விரும்பவில்லை. நிலத்தைப் பார்த்தபடி எதையோ சிந்தித்துக்கொண்டு சும்மா இருந்தான்.

அவள் தொடர்ந்து பேசினாள். வரவர அவளுடைய வார்த்தைகளில், தோற்றத்தில் ஒருவித வேகமும் வர்மமும் கலந்து காணப்பட்டன.

"இனி எனக்கு யாருமே உரிமையானவர்களல்ல. என்னுடைய துன்பத்திற்கு மரணத்திற்கு கண்ணீர் விடத்தக்கவர்கள் எல்லோருமே பூண்டோடு அழிக்கப்பட்டு விட்டார்கள். இனி எனக்கு மரணம் தான் சுகம் தரும். நானும் அதையே விரும்புகிறேன்."







மேலே அவளால் பேச முடியவில்லை. திரும்பவும் மேசை மீது முகத்தை வைத்துக்கொண்டு விம்மி விம்மி அழத்தொடங்கினாள்.

அதைப்பார்த்தவுடனே சந்திரநாத் எழுந்து அவளுக்கருகில் போய் நின்று, "சலீமா!" என்று உருக்கமாகக் கூப்பிட்டான். அந்தக் குரலுக்குச் செவி கொடுக்காமலிருக்க அவளால முடியவில்லை. அதனால் தலையைத் தூக்கிப் பார்த்தாள். அவன் அவளது கையைப் பிடித்துக்கொண்டே இதைச் சொன்னான்:

"நீ மறுபடியும் குழந்தையைப் போலவே பேசுகிறாய். நடக்கக்கூடாதது நடந்துவிட்டது என்பது உண்மைதான். இந்த நிலையிலும் நிதானமான பாதையில் நியாயத்தோடு நடக்கக்கூடிய ஆற்றலை சம்பாதித்துக்கொள்வதுதான் மனித தன்மை. அதை இழந்துவிடுவது மிகவும் இலேசு. ஆனால் அதைக் காப்பாற்றுவது எல்லோருக்கும் இயலாத காரியமாகும். ஒருவேளை நீ என்னிடத்திலே சந்தேகப்படுகிறாயா?"

சிறிது நேரம் வரையில் மௌனமாக இருந்துவிட்டு மறுபடியும் தொடங்கினாள்:

"இதோ பார், நீ யாருக்காக இவ்வளவு கவலைப்பட்டு அழுகிறாயோ அவர்களையும் காப்பாற்றி உன்னையும் அழாமல் செய்திருப்பேன். துரதிருஷ்டவசமாக நான் அப்பொழுது இங்கே இருக்கவில்லை. கடைசியில் உன்னை மட்டுமே காப்பாற்ற முடிந்தது. இனி உன்னைப் பாதுகாத்து வைப்பதும் உன் மனத்திற்கு ஆறுதலைத் தேடித் தருவதும் என் கடமை."

அவன் பேச்சை நிறுத்தினதும் அவள் தொடங்கினாள்.

"தயவுசெய்து பெரிய மனசு வைத்து என்னைச் சாக விட்டு விடுங்கள். இதுதான் நீங்கள் எனக்குச் செய்யும்பெரிய ஆறுதல்."

சந்திரநாத் அவளைப்பார்த்தபடியே சிலைபோல இருந்தான். அவளுடைய உள்ளம் எந்தவிதமான சமாதானத்தாலும் ஆறுகிற நிலையில் இல்லை என்பது நன்றாக விளங்கியது. சிறிது நேரம் வரையில் அவனாலும் ஒன்றும் பேசமுடியவில்லை. பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "சலீமா, என்னை ஒரு கெட்டவன், மனிதத்தன்மை இல்லாதவன் என்று சொல்லும்படி செய்துவிடாதே. எனக்காகக் கொஞ்சம் பொறுத்திரு" என்று வேண்டினான்.

அவள் மேலே ஒன்றுமே பேசவில்லை. வேதனைகளை அடக்கிக் கொண்டு ஒருவாறு மௌனமாக இருக்க முயன்றாள்.

அப்போது வெளியே கொஞ்ச தூரத்துக்கப்பால் வெறி கொண்ட ஜனங்களின் குமுறல் கடலின் அலைபோலக் கேட்கத் தொடங்கியது. அந்தச் சத்தம் காதில் விழுந்ததும் அவன் எழுந்து நின்று, "சலீமா இன்றும் தொடங்கி விட்டார்கள் என்றே தோன்றுகிறது. நான் போக வேண்டும். ஐயோ! மனிதர்கள் தர்மத்தையும் கடமையையும் மறந்து எப்படி மிருகங்களாக மாறுகிறார்களோ, தெரியவில்லை. நான் போய்ச் சீக்கிரமாகத் திரும்பிவிடுகிறேன், சலீமா!" என்று சொன்னான்.

"வேண்டாம் நீங்கள் அந்த இடத்திற்குப் போகவே கூடாது. ஒருவேளை உங்களையும் நான் இழந்து விடநேரிடும்."

"திடீரென்று இப்படி ஏன் சொன்னேன்?" என்று அப்போது அவளுக்கே தெரியவில்லை. ஆனாலும் அவளுடைய மிருதுவான பெண் உள்ளம் இதையே தான் விரும்பியது. சந்திரநாத் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ஏனோ மிகுந்த ஆறுதலடைந்தான். பிறகு, "சலீமா, நீ ஒன்றுக்கும் பயப்படாதே. எனக்கு ஒரு தீங்குமே வந்து விடாது. நான் இந்த சமயத்தில் வீட்டினுள்ளே இருப்பது பெரிய துரோகமாகும்." என்று சொல்லிக்கொண்டே வெளியேறினான். போகும் போது வாசலிலே நின்ற வேலையாளைப் பார்த்து, "ஜாக்கிரதை!" என்று எச்சரித்துவிட்டுச் சென்றான்.







தெருவில் இறங்கினதும் கூக்குரல்கள் வருகிற திக்கை நோக்கி வேகமாக நடந்தான். சிறிது நேரத்திற்குள் ஜனங்களின் வெறி கொண்ட பேய்க்கூத்து அவன் கண்ணுக்கு நன்றாகத் தெரிந்தது. மேலே அவன் ஓடியே சென்றான். வேங்கையின் கோரமான இயல்புடைய அந்த ஜனக்கூட்டமும் அவனைக் கண்டதும் மெல்ல விலகியது. சிலர் உண்மையாகவே பயந்து ஒதுங்கினார்கள். இன்னும் சிலருக்கு அவனுடைய இரக்கம் அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆனாலும் அவர்களும் மெல்ல ஒதுங்கி அவ்விடத்தை விட்டு அகன்றார்கள்.

அதற்கிடையில் அந்தப் பகுதியில் வசித்த முஸ்லீம்கள் ஆண்கள் பெண்கள் குழந்தைகள் என்ற எல்லாருமே அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். பரிதாபகரமான அவர்களது முகத்தைப் பார்த்ததும் சந்திரநாத் அழுதுவிட்டான். பிறகு அவர்களுக்கு வேண்டிய ஆறுதல் சொல்லித் தன் ஆட்களின் உண்மையான சிலரை அவர்களுடைய பாதுகாப்புக்காக நிறுத்தி வைத்து அவர்களுக்கு நம்பிக்கை தந்த பிறகே வீட்டை நினைத்தான்.

## 2

சலீமா சாளரத்தின் வழியாகத் தெருவைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். ஜனங்கள் பிரேதக் களையுடன் அங்குமிங்குமாகப் போய் கொண்டிருந்தார்கள். "இது ஏன்?" என்று சிந்திக்கவும் அவளால் அப்பொழுது முடியவில்லை. சிறிது நேரத்தில் ஒரு கூட்டத்தவர்கள் அந்தப் பக்கத்தில் வந்தார்கள். அவர்களைப் பார்த்ததுமே இன்ன இடத்தில் இருந்து தான் வந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அவள் தெரிந்து கொள்ளக் கூடியதாய் இருந்தது.

அவர்களில் பலர் இளைஞர்கள். சிலர் நடுத்தர வயதினர். இரண்டொரு கிழவர்களும் இருக்கத்தான் செய்தார்கள். ஒரு வெற்றிக்குப்பின் ஆடிக்கொண்டும்

பாடிக்கொண்டும் வருகிற யுத்த வீரர்களைப் போல அவர்களும் உல்லாசமாகவே வந்தார்கள். அதைப்பார்த்ததும் அவளுக்கு உடம்பெல்லாம் பற்றிக் கொண்டது. எழுந்து சாளரத்துக்குப் பக்கத்திலே வந்துநின்று கையைக் காட்டி ஒருவனைக் கூப்பிட்டாள். எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

"நீங்கள் மனித ஜன்மங்கள் தானா? அல்லது பிசாசுக் கூட்டமா?"

இந்த வார்த்தைகளைப் பேசும்போது அவளிடம் அலாதியான ஒரு கம்பீரம் காணப்பட்டது. வந்தவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர்கள் அதில் நின்றபடியே தடுமாறினார்கள். மறுபடியும் அவள் பேசத் தொடங்கினாள்:

"ஒன்றுமே அறியாத ஏழைகளை வதைசெய்தீர்கள். கொள்ளையடித்தீர்கள். எல்லாம் மறுபடியும் வட்டியோடு சேர்த்து அனுபவிக்கும் நாள் தூரத்தில் இருக்கவில்லை. அடே! நான் யார் தெரியமா? உங்களால் கொல்லப்பட்ட, கொள்ளையிடப்பட்ட அந்த நிரபராதிகளான முஸ்லிம்களின் கூட்டத்தில் தவறியிருக்கும் ஒருத்திதான். பதிலுக்கு வஞ்சம் தீர்க்கும் வரையில் உயிரோடு இருக்கிறேன் என்பதை மறந்து விடவேண்டாம்."

அவள் துர்க்கை போலவே அப்போது விளங்கினாள். அதற்குள் சிலர் நிமிர்ந்து பார்த்துவிட்டு "இது சந்திரநாத் அவர்களின் வீடு" என்றார்கள். உடனே எல்லோருமே மேலே பார்த்துவிட்டு யோசித்துக்கொண்டு நின்றார்கள். ஒருவனுக்கு மட்டும் அவளுடைய வார்த்தைகள் பொறுக்கவில்லை. அவன் வாசல்பக்கமாக ஓடினான். அதற்குள் வாயிலிலே நின்ற வேலையாள் அவனை வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டு விட்டான்.

அப்பொழுதுதான் சந்திரநாத் அங்கே வந்து சேர்ந்தான். வீட்டின் அருகே நின்ற ஜனங்களைப் பார்த்ததும், "என்ன?"





என்று கேட்டான். அவனைக் கண்டதும் அந்த ஜனங்கள் நழுவ ஆரம்பித்தார்கள். அவன் எல்லோரையும் மறித்து நிறுத்திக்கொண்டு இரண்டொரு வார்த்தை மட்டும் பேசினான்.

"நீங்கள் தானா உண்மையான ஹிந்துக்கள்? ஐயோ! நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் மதத்தின் பழம்பெருமைக்கு, தர்மத்திற்கு அழிவு தேடி விட்டீர்கள். பரம்பரையாக வந்த சகிப்புத்தன்மை எப்படி உங்களிடம் இருந்து மறைந்தது? பதிலுக்கு இராட்சசர்களாகி விட்டீர்களே? உங்களைப் பாாக்கவே என் கண்கள் கூசுகின்றன."

கடைசியில் அவன் தொண்டை குழறியது. அவ்வளவில் பேச்சை நிறுத்திவிட்டு படிமீது ஏறிநின்று அந்த ஜனங்களை ஒருமுறை பார்த்தான். எல்லோரும் கணத்தில் அந்த இடத்தை விட்டு மறைந்து விட்டார்கள்.

சந்திரநாத் மேலும் சிறிது நேரம் வரையில் அதிலேயே நின்று விட்டு உள்ளே நுழைந்தான். எதிரில் சலீமா நின்றாள். அப்போது அவளிடம் நிரந்தரமாக உறைந்து கிடந்த சோகத்தின் திரை முழுவதும் விலகி இருக்க ஒருவித ரௌத்திரமே காணப்பட்டது. அவன் அவளை ஒருமுறை உற்றுப்பார்த்துவிட்டு மெல்லச் சிரித்துக்கொண்டே, "சலீமா, உள்ளே போ. இது என்ன பைத்தியக்காரத்தனம்?" என்று ஒரு மாதிரியாகச் சொன்னான். அவளோ அதை அலட்சியமாகக் கேட்டுக்கொண்டு அங்குமிங்குமாக நடந்து கொண்டிருந்தாள்.

அப்பொழுதுதான் அந்தத் தந்தி வந்தது. சந்திரநாத் அதை வாங்கிப் படித்ததும், "சலீமா, எல்லோரும் சௌக்கியமாக டாக்காவிலே இருக்கிறார்களாமே" என்று தந்தியை நீட்டினான். உடனே, "உண்மையாகவா?" என்று கூச்சலிட்டுக்கொண்டே அவள் ஓடி வந்தாள். பிறகு கொஞ்ச நேரமாக அங்குமிங்குமாகச் சிறு குழந்தையைப் போலவே குதித்துக் குதித்து ஓடித்திரிந்தாள்.

பிறகு அவனுக்கருகில் வந்து உட்காா்ந்து கொண்டு "என்னை எப்போது டாக்காவிற்கு அனுப்பப் போகிறீா்கள்?" என்று கேட்டாள்.

"நீ எப்போது போக விரும்புகிறாய்?"
"எவ்வளவு சீக்கிரமாகப் போக முடியுமோ; அது உங்களையே பொறுத்தது".

சந்திரநாத் சிறிது வரையில் யோசித்துக் கொண்டிருந்துவிட்டுச் சொன்னான்:

"சலீமா, எதிா்பாராமல் திடீா் திடீரென்று எங்குமே கலகங்கள் முளைத்துவிடுகின்றன. அதனாலே தான் யோசிக்கின்றேன். அல்லது...."

அதற்குள் அவள் இடைமறித்து, "நீங்கள் கஷ்டப்பட வேண்டாம். என்னை வண்டியில் ஏற்றிவிட்டாலே போதும். எப்படியாவது நான் போய்விடுகிறேன் என்றாள்.

இதைக்கேட்டதும் அவனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. சலீமா அவனையே பாா்த்துக்கொண்டிருந்தாள். பிறகு சந்திரநாத் இதையே சொன்னான்: "ஒன்றுக்கும் அவசரப்படாதே சலீமா! எப்படியாவது உன்னை அங்கே கொண்டுபோய் சோ்த்து விடுகிறேன். நினைத்தவுடனே எதையும் செய்துவிடக் கூடிய நேரம் இதுவல்ல என்பதை நீயே நன்றாக உணருவாய்".

அவளெல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு மௌனமாக இருந்தாள். பிறகு எழுந்து சென்று அங்கே கிடந்த பட்சணத்தட்டை எடுத்துக்கொண்டு வந்து அவனுக்கு முன்பாக வைத்தாள்.

"விருந்தாளி சாப்பிடுமுன் வீட்டுக்குடையவனான ஒரு ஹிந்து சாப்பிடுகிற வழக்கம் இல்லையே?







"அது உண்மையாக இருக்கலாம். ஆனால் நீங்கள் சாப்பிடுமுன் நான் எதையும் தொடமாட்டேன் என சத்தியஞ் செய்து விட்டேன் என்று வைத்துக்கொண்டால் ...."

அவள் பேச்சை நிறுத்திவிட்டுத் தட்டை எடுத்து நீட்டினாள். அவன் அந்தத் தட்டை வாங்கித் தனக்கு முன்னால் வைத்துவிட்டு அவளுடைய முகத்தையே பாா்த்துக் கொண்டிருந்தான். மறுபடியும் அவள் தொடங்கினாள்: "ஒரு முஸ்லிம் பெண் கொடுக்க, உயா்ந்த ஹிந்து குடும்பத்திலே பிறந்த நீங்கள் உண்ணக்கூடாது என்று இருக்கிறீா்களா?"

அவ்வளவில் அவன் சாப்பிடத் தொடங்கினான். அப்பால் இரண்டு பேருமாகவே பட்சணங்களைக் காலி செய்தாா்கள்.

பிறகு அவள் சந்திரநாத்தைப் பாா்த்து, "உங்களிடம் ஒன்று கேட்கிறேன், ஒளிக்காமலே சொல்லுகிறீா்களா?" என்று கேட்டாள். அவன் வெறுமனே தலையை மட்டும் அசைத்துத் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

"சிலமணி நேரத்திற்கு முன் நான் சொன்ன வாா்த்தைகளைக் கேட்டு நீங்கள் என்மீது வெறுப்புக் கொள்ளவில்லையா? மறைக்காமல் சொல்லுங்கள்".

அவன் சாந்தமான குரலிலே "சலீமா, எதற்காகவும் நான் கோபிக்கிறதில்லையே" என்றான்.

"ஆனாலும் என் அறிவில்லாத வாா்த்தைகளை நீங்கள் மறந்து விடவேண்டும்".

"நீ அப்படி எதையும் சொல்லிவிடவில்லை."

"என்னுடைய மனம் சாந்தியடைய்வில்லையே".

"அதற்கு என்ன செய்ய வேண்டும்?"

"உங்களுக்கு எது இஷ்டமோ அதன்படி என்னைத் தண்டித்து விடுங்கள்."

"சரி, தண்டிக்கிறேன்: அதற்குரிய நேரம் வரட்டும்" ஏனோ, இரண்டு பேருமாகவே சிரித்தார்கள்.

## 3

மறுநாள் அதிகாலையிலேயே அந்த வீட்டு வாசலிலே ஒரு வண்டி வந்து நின்றது. சந்திரநாத் அது யார் என்று பார்க்க ஆளை அனுப்பினான். அதற்குள் அந்தக் கிழவர் உள்ளே வந்து விட்டார். முதிர்ந்த நிலையிலும் அவருடைய வாயிலிருந்து வந்த வார்த்தைகள் இளமையைத் தொட்டுக் காட்டின.

"சந்திரநாத்!" என்று முதலில் ஆத்திரத்தோடு கத்தினார். அவன் ஒன்றும் புரியாமலே ஓடி வந்து, "நமஸ்காரம் தாத்தா" என்று வணங்கினான். அவர் அவனுடைய வணக்கத்தை ஏற்கவில்லை. மேலும் ஆத்திரம் கொண்டவராய், "நீ அந்நிய மதத்தைச் சேர்ந்த ஓர் இளம்பெண்ணை இங்கே வைத்திருக்கிறாயாமே?" என்று உறுமினார்.

அவன் ஒன்றுமே பேசவில்லை. அவருடைய கோபம் மேலும் உச்சநிலையைக் கிட்டியது.

"எதற்காக அவளை நீ இங்கே வைத்திருக்க வேண்டும்? எங்கள் ஹிந்து தர்மத்துக்குச் சாவுமணி அடித்துவிட்டாயே".

அப்பொழுதுதான் அவன் வாயைத் திறந்து மெல்லப் பதில் சொன்னான்:

"தாத்தா, இதனால் நான் ஹிந்து தர்மத்துக்குச் சாவுமணி அடிக்கவில்லை. உண்மையில் ஹிந்து தர்மத்தைச் சாக விடாமல் காப்பாற்றி விட்டேன்."







கிழவர் தம் வாயில் வந்தபடியெல்லாம் திட்டிக் கொண்டே வெளியே சென்று வண்டியில் ஏறி விட்டார். அவன் அவர் பின்னோடு போய் நமஸ்கரித்துவிட்டுத் திரும்பி வந்தான். அதுவரைக்கும் உள்ளே நின்ற சலீமா அப்பொழுதுதான் முன் ஹாலுக்கு வந்து சேர்ந்தாள். அவளுடைய முகம் கொஞ்சம் வாடியிருந்தது. அதைப்பார்த்ததும், "இந்த மனிதர்களுடைய எந்த விதமான வார்த்தைகளையும் நீ பொருட்படுத்தக்கூடாது. அவர்கள் "பாட்டன் சொன்னான்" "அப்பன் செய்தான்" என்று தர்மம் பேசுபவர்கள். சலீமா, இது என் வீடு, ஆதலால் உனக்கும் உரிமை உண்டு. எனவே நீ சிந்திக்க நியாயமே இல்லை" என்று ஆறுதல் சொன்னான். அவள் சிறிது நேரம் வரையில் ஒன்றுமே பேசாமல் இருந்துவிட்டு, "எப்படியானாலும் என்னைச் சீக்கிரம் அனுப்பி விடுங்கள்" என்று கேட்டுக் கொண்டாள்.

இதைக்கேட்டதும் அவனும் "சரி" என்று தலையை அசைத்தான்.

## 4

அன்றைக்கே புறப்படுவதற்குரிய எல்லா ஆயத்தங்களையும் செய்து முடித்தார்கள். அவனுடைய மோட்டார்வண்டியைச் சாரதி வாயிலிலே கொண்டு வந்து நிறுத்திவிட்டு வெளியே வந்து நின்றான்.

சந்திரநாத் தன் அறையிலிருந்து புறப்பட்டு நேரே அவள் இருந்த அறையை நோக்கி நடந்தான். அவன் வருவதைக்கண்டதும் சலீமா எழுந்து நின்று, "புறப்பட ஆயத்தமா" என்று கேட்டாள்.

"ஆம்; இதை உன் கைப்பெட்டியினுள்ளே வை"

"எதற்காக இதை நான் வைத்துக் கொள்ள வேண்டும்?"

"அவர்களும் எல்லாவற்றையும் இழந்தே போயிருக்கிறார்கள். இது அவசியம் உங்களுக்குத் தேவைப்படும்.

"ஆனாலும் இவ்வளவும் எதற்கு?"

"பரவாயில்லை"

"ஐயோ! இதில் எத்தனை ஆயிரம் தந்திருக்கிறீர்கள்?"

"பாரமாக இருக்கிறதா?"

அவள் பேசாமல் நின்றாள். அதை வாங்கி அவளது கைப்பெட்டியைத் திறந்து அவனே வைத்து விட்டான்.

மோட்டார் வண்டி பாதையிலே போய்க்கொண்டிருந்தது. சந்திரநாத்தே வண்டியை ஓட்டிக் கொண்டு போனான். சலீமா பின்புறத்து ஆசனத்தில் உட்கார்ந்திருந்தாள். இடையில் "எதற்காக மோட்டார் ஓட்டியை நிறுத்தி விட்டு வருகிறீர்கள்?" என்று அவள் கேட்டாள். நான் இப்பொழுது உங்கள் மதத்தைச் சேர்ந்தவர்கள் வாழுகிற இடத்துக்கு வருகிறேன். அவர்களோ இன்று ஜாதி மத வெறியில் நமக்கும் வழிகாட்டிகளாக இருக்கிறார்கள். அபாயம் வந்தாலும் நான் அமைதியாகவும் சந்தோஷமாகவும் ஏற்பேன். "எனக்காக மற்றவர்கள் ஏன் அகப்பட்டுக் கொள்ள வேண்டும்?" என்று எண்ணியதால்......." என்று இழுத்தான்.

அவள் உடனே "வண்டியை நிறுத்துங்கள்" என்று கூச்சலிடத் தொடங்கி விட்டாள். கடைசியில் வண்டியை நிறுத்தியே அவளைச் சமாதானம் செய்ய முடிந்தது. பிறகு அவளும் முன்பக்க ஆசனத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டாள்.

வண்டி மறுபடியும் போய்க் கொண்டிருந்தது. இடையில், "சலீமா நீ ஒரு முஸ்லிம் பெண். உங்கள் ஜாதிப் பெண்கள், ஆசாரப்படி வெளியே தலையைக்கூட நீட்டுவதில்லை. அப்படியிருக்க அந்நிய மதத்தவனாகிய







ஒருவனுக்குப் பக்கத்தில் நீ உட்கார்ந்திருக்கிறாயே..." என்று அவன் பேசி முடிப்பதற்குள்ளாகவே அவள் தொடங்கி விட்டாள்.

"எல்லா மதத்திலும் இப்படியான உளுத்துப்போன கட்டுப்பாடுகள் இருக்கத்தான் இருக்கின்றன. அது உண்மையில் நியாயமென்றே வைத்துக் கொண்டாலும் நீங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் என்னை யாரும் தடுக்க முடியாது."

அவன் திரும்பி அவளைப் பார்த்துக்கொண்டே "ஏன் அப்படி" என்று கேட்டான்.

"அது என் இஷ்டம்"

மறுபடியும் சந்திரநாத் திரும்பி அவளைப் பார்த்தான்.

இரண்டு பேருடைய உள்ளத்திலும் உண்டான மலர்ச்சி அவர்கள் முகங்களில் வெளியாகி மறைந்தது. வண்டி மேலே போய்க்கொண்டிருந்தது.

"இன்னும் எத்தனை மைல் போக வேண்டும்?" என்று இடையில் சலீமா கேட்டாள்.

"பாதி தூரத்துக்கு மேலே வந்துவிட்டோம். இனி ஹிந்துக்களினால் எந்த அபாயமும் வராது. நீ பயமின்றி இருக்கலாம்."

அவள் இதைக் கேட்டதும், "ஆனால் இனித்தான் நான் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் அல்லவா? என் உயிர் போன பிறகே உங்களுக்கு ஏதேனும் தொந்தரவு வரலாம்" என்று சொல்லி விட்டு மெல்லச் சிரித்தாள்.

"சலீமா, நீயோ ஒரு பெண். எப்பொழுதும் பெண்களைக் காப்பாற்ற ஆண்கள் தங்களைத் தியாகம் செய்வதுதான் தர்மம். நீ நினைப்பது தப்பு."

"இந்தத் தர்மங்களைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. ஆனாலும் நான் அப்படித்தான் செய்வேன். அதை யாரும் தடுக்க முடியாது"

சந்திரநாத் மௌனமாகவே வண்டியை ஓட்டிக்கொண்டு சென்றான். "போகவேண்டிய தூரத்தில் பெரும்பகுதி கழிந்து விட்டதல்லவா?" என்று இடையில் அவள் கேட்டாள். அவனும் "ஆம்" என்று தலையை அசைத்தான்.

ஒரு சந்திப்பில் திரும்பியவுடனே திடீரென்று ஒரு ஜனக்கூட்டம் எதிரே காட்சி கொடுத்தது. அவர்களது நிலையைக் கண்டதும் சந்திரநாத் திகைத்து வண்டியை நிறுத்தினான். அந்தக் கூட்டத்திலிருந்த சிலர் வேகமாக அவர்களது வண்டியை நோக்கி ஓடி வந்தார்கள். அதற்குள் ஒருவன் தூரத்திலிருந்தே கல் ஒன்றை வீசி எறிந்தான். அது வண்டியின் முன்புறத்திலே பட்டுத் தெறித்துக் கண்ணாடியை உடைத்து விட்டது. ஒரு கண்ணாடித்துண்டு சந்திரநாத்தின் நெற்றியில் பறந்து ரத்தத்தைப் பெருகச் செய்தது.

கணத்துள் சலீமா அந்த ஜனக்கூட்டத்தின் முன்பாக நின்றாள். அவளைப் பார்த்ததும், "இவள் ஓர் உயர்ந்த ஜாதி முஸ்லிம் பெண்" என்பதை எல்லோரும் உணர்ந்து கொண்டார்கள். உடனே சிலர் பின்வாங்கி ஒதுங்கினார்கள். மற்றவர்கள் வெறிகொண்டு தான் நின்றார்கள். அதற்குள் ஒருவன் சொன்னான்: "அடே இவன் ஒரு ஹிந்துவாகவே இருக்க வேண்டும்."

எல்லோரும் சந்திரநாத்தையே பார்த்தார்கள். அந்தக் கூட்டத்தின் ராட்சத எதிர்ப்பை அடக்கிச் சலீமாவின் குரல் எழுந்து கேட்டது.

"எல்லோரும் விலகுங்கள். உங்கள் ஜாதியை - உங்கள் மதத்தைச் - சேர்ந்த ஆயிரக்கணக்கான மக்களைப் பாதுகாத்த இந்த மகான் யாராக இருந்தாலும், எந்த மதத்தவராக இருந்தாலும் என்ன? நீங்களும் உங்கள் மதத்தாரும் அவர் காலடியில் மண்டியிட்டு வணங்கக் கடமைப்பட்டவர்களாக இருக்கிறீர்கள்.







"நான் யார் என்று இன்னும் நீங்கள் உணரவில்லையா? என்னையும் என்னைப்போன்ற உங்கள் மனிதர்களையும் காப்பாற்றிய உங்கள் ஆண்டவனின் அன்பரது புனித உள்ளத்தைப் புண்படுத்தி விட்டீர்களே."

பேச்சை நிறுத்திவிட்டு எல்லோரையும் ஒருமுறை நிமிர்ந்து பார்த்தாள். அத்தனை பேரும் அசையாமல் அப்படியே நின்றார்கள். பிறகு அவள் தன் புடவையின் ஒரு தலைப்பைக் கிழித்து அவனது நெற்றியில் வழிந்த ரத்தத்தைத் துடைத்துக் கட்டுப்போட்டாள்.

சந்திரநாத் அசையாமல் அப்படியே இருந்தான். முன்புறத்தில் நின்றவர்களில் சிலர் மண்டியிட்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்.

உள்ளே அவன் வண்டியை விட்டு இறங்கி நின்று இதையே சொன்னான்: "நான் ஹிந்துவாகப் பிறந்து விட்டேன். நீங்கள் முஸல்மான்களாகப் பிறந்து விட்டீர்கள். ஆயினும் என்ன? நாமெல்லோரும் இந்த நாடு பெற்ற குழந்தைகள்தாமே!"

அவ்வளவோடு நிறுத்திவிட்டு அந்தக் கூட்டத்தைநோக்கி நமஸ்கரித்தான். அதைப் பார்த்துக் கொண்டு நின்ற ஒரு வயோதிபர் அருகில் வந்து அவன் கைகளைப் பிடித்துத் தன் கண்களில் ஒத்திக்கொண்டார்.

வண்டி புறப்படும்பொழுது கூட்டத்தினர் எல்லோருமே அமைதியாக நின்று தங்கள் வணக்கத்தைத் தெரியப்படுத்தினார்கள்.

வண்டி போய்க்கொண்டிருந்தது.

"சலீமா!" என்றான் சந்திரநாத்.

அவள் தன் கையினால் அவனது நெற்றியைத் தடவிக் கொண்டே, "வலிக்கிறதா?" என்று கேட்டாள்.

சந்திரநாத் சொன்னான்: "வலி எப்பொழுதோ மறைந்து விட்டது. அதற்கு மாறாக உடம்பு முழுவதும் குளிர, உள்ளம் இனிக்கிறது, சலீமா!"

உடனே அவள் அவனது கையைப் பிடித்துத் தன் கண்களில் ஒத்திக்கொண்டாள். அந்தக் கையில் இரண்டு துளி நீர் ஒட்டிக் கொண்டிருந்தது.





# சலனம்

**எ**னக்கு நான் எப்படி ஒரு புதிராக இருந்தேனோ அப்படியே அவளும் தனக்குத்தானே விளங்காத ஒரு பொருளாக இருந்தாள்.

அவளை நான் ஒரு நாளும் ஒரு சிறு அளவேனும் அறிந்திருந்ததில்லை. அவளுக்கும் நான் முழுதும் புதியவனே. அவளைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற தேவையோ வேறு எதுவோ அப்போது ஏற்படவில்லை. சலனமற்ற அவளுடைய மனநிலை, "விலகி நட" என்று எனக்கு வழி காட்டுவது போல இருந்தது. ஆனால், கால வெள்ளத்தைக் கடந்து நின்ற ஏதோ ஒரு தொடர்பு அறுந்து போக விடாமல் எனக்குள்ளிருந்து அவளை முற்றும் மறந்துவிட முடியாதபடி செய்து கொண்டிருந்தது. அதன் இரகசியம் இதுதான் என்று நிதானிக்க எனக்கு எப்போதுமே சக்தி உண்டானதில்லை.

அது நகரம் அல்ல; நகர் கழிந்த எல்லை. பக்கத்திலிருந்து நகரத்தை வேறு ஏதேதோ ஊர்களோடு தொட்டு வைப்பது போன்ற ஒரு நீண்ட சாலை. மாமரங்களும் புளிய மரங்களும் எனக்குத் தெரியாத வேறு பல சாதி மரங்களும் அந்தச்சாலையில் ஓங்கி வளர்ந்து நின்றன. தூரத்திற்கு ஒன்றாகச் சில வீடுகள் மட்டும் அதிலே காணப்பட்டன.

ஒரு வீட்டில் அவள் இருந்தாள். அந்த வீட்டுக்கு அரை மைல் தூரத்திற்கு அப்பால் என்னுடைய சிறியவீடு. ஆயினும் நான் அடிக்கடி அவளைச் சந்தித்தேன்; பார்த்தேன். அவளும் அப்படியே சந்திக்கும் போது என்னைப் பார்த்திருக்கிறாள். அப்போதெல்லாம் எந்த அர்த்தத்தில் நான் அவளைப் பார்த்திருக்கிறேனோ அதே கருத்தில் அவளும் என்னைப் பார்த்திருக்கக் கூடும். ஆனால் நான் அவளிடமும் அவள் என்னிடமும் பேச ஒரு தேவையும் இருக்கவில்லை. எப்போதாவது அவள் தன்னை அலங்காரம் செய்து கொண்டு வந்ததாக- நின்றதாக- என்னால் சொல்ல முடியாது. ஆயினும் வைகறையின் கழிவுக்கும் புலருவதற்கு முன்னும் உள்ள அந்த இன்பப் பொழுதின் அமைதியான பொன்னொளி அவளிடம் நிரந்தரமாக உறைந்திருந்தது. அதே சமயம் அவள் என்னிடம் எதைக் கண்டாளோ, எதைத் தேடினாளோ, நான் அறிந்திருக்கவில்லை.

நாங்கள் எப்படியோ இடையிடையே சந்தித்தோம். ஒரு நாளைக்கு இல்லாவிட்டாலும் ஒரு நாளைக்கு எதிரெதியாக ஒருவரை ஒருவர் பார்த்தபடி நடந்திருக்கிறோம். அப்போதெல்லாம், "எங்கே போகிறாள்? யார் இவள்?" என்று ஆராய விரும்பினதில்லை. அவள் எங்கே போனாலும் யாராக இருந்தாலும் எனக்கு அக்கறை இல்லை என்றே எண்ணியிருந்தேன்.

அவளுடைய பார்வையிலும் எந்தத் தேவையையும் நான் உணர்ந்துகொள்ள முடியவில்லை. அவள் கண்களில் வேறு ஏதேதோ கருத்துக்கள் இருந்தன. நிதானம் இருந்தது. ஆனால் அமைதி-? அதைத் தெளிவாகச் சொல்ல முடியவில்லை.

மொத்தத்தில் அவளைப் பார்ப்பதில் மனத்துக்கு ஒருவிதத் திருப்தி, ஆறுதல், இருந்தது. எத்தனையோ அதிர்ச்சிகள் - சலனங்கள் - தாகங்கள் என்ற இவற்றுக்கு நடுவிலும் என்னால் புரிந்து கொள்ள முடியாத, என்னைப்







புரிந்து கொள்ள விரும்பாத அவளைப் பார்ப்பதில் ஒரு வித ஆறுதல் எனக்கு உண்டானதை மறுக்க முடியாது.

எனக்கு முன்பு அவள் அங்கே குடி வந்தாளோ, அவளுக்கு முன்பு நான் தான் வந்தேனோ அதுவும் எனக்குத் தெரியாது. ஒருவேளை அவளுக்கு அது தெரிந்திருக்கலாம். நான்கு ஐந்து மாதங்களுக்கு மேலாகியும் நான் அதை அறிய விரும்பவில்லை.

அன்று வழக்கம் போலவே சாலையின் ஓரத்தில் நடந்து கொண்டிருந்தேன். தெளிவற்ற நினைவுகளில் சிக்கி நடந்து கால்கள் ஓய்ந்து விட்டன. கடைசியில் அவளுடைய வீட்டின் எதிரே நின்ற ஒரு மரத்தினடியில் வந்து உட்கார்ந்தேன். மேலே குருவிகள் பாடிக் கொண்டிருந்தன. அணில்கள் விளையாடின. காற்று விசிறுவதுபோல ஓய்ந்து ஓய்ந்து வீசியது. எதையுமே சிந்திக்காத சிந்திக்க முடியாத அந்த நிலையிலும் இவை மனத்தைத் தடவிக் கொடுத்து ஆறுதல் செய்தன. உட்கார்ந்து குழந்தைபோல மேலே பார்த்தபடி இருந்தேன். வெகுநேரம் அப்படி நான் இருந்திருக்கக் கூடும். அந்தச்சமயத்தில் என் பக்கவாட்டிலிருந்து ஒரு குரல் கேட்டது; "நீங்கள் யார்?"

நான் திரும்பிப் பார்த்ததும் எழுந்தேன். அவள் எதிரே நின்றாள். ஒப்பிட முடியாத ஒரு தனிப்பண்பு அவளிடம் ஊடுருவி ஒளி செய்தது. அந்தப்போதையில் மயங்கி ஏன் இப்படிக் கேட்டாள்? எதை அறிய விரும்பினாள்? என்ற ஒன்றையுமே சிந்திக்காமல் மௌனமாகிக் கொஞ்ச நேரம் நின்றபிறகே இப்படிச் சொன்னேன்: "அது எனக்கே புரியாத விஷயம்."

அவள் மெல்ல ஒரு மாதிரிச் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் துளிகூடக் கேலி இல்லை. நிறைய அர்த்தம் இருந்தது.

கண்களை அவளை விட்டு எடுக்காமலே நான் சிலைபோல நின்றேன். அப்பொழுது அவள், "தெரிந்து

கொள்ளவேண்டும் போல் இருந்தது; கேட்டேன். அது தவறாகவுமிருக்கலாம். அப்படியானால் என்னை நீங்கள் மன்னித்துவிடவேண்டும்" என்றாள்.

என்னிடம் இருந்து எந்தவிதமான பதிலையும் எதிாபார்க்கமலே அவள் தன்னுடைய வீட்டை நோக்கி நடந்தாள்.

விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இன்பமோ துன்பமோ மயக்கமோ எதையுமே தராவிட்டாலும் "அவள்" என்ற அந்தப்பொருள் மனத்தில் நிலையான ஒரு இடத்தைப் பிடித்துக்கொண்டிருந்தது. தெளிவுக்கும் மயக்கத்துக்கும் இடையில் ஒரு மனநிலையில் நான் என்னுடைய திசையில் நடந்து கொண்டிருந்தேன். கொஞ்ச நேரத்திற்கு முன்பு காலில் வலி இருந்தது. இப்போதோ அது எப்படியோ மறைந்துவிட்டது. இன்னும் எவ்வளவு தூரமானாலும், எவ்வளவு நேரமானாலும் நடக்கலாம் என்பது போன்ற ஒரு வலிமை உணர்ச்சி உண்டாகிவிட்டது. வீட்டை அடைந்த பிறகும் மறுபடியும் நடக்கவேண்டும் என்பது போல ஏதோ தூண்டிவிட்டது. அதை அடக்கி உள்ளே தனித்திருக்க உண்மையில் முடியவில்லை. அதனால் மறுபடியும் வந்த வழியாகவே நடக்க ஆரம்பித்தேன்.

அவளுடைய வீட்டுக்கு அருகில் வரும்போது நன்றாக இருட்டிவிட்டது. அவளை மாலையில் சந்தித்த அந்த இடத்துக்கு வந்ததும் திரும்பிப் பார்த்தேன். ஒரு விளக்கு அதிக பிரகாசமின்றி எரிந்துகொண்டிருந்தது. அதற்கு எதிரில் அவள் இருந்தாள். சிறிது நேரம் வரை அவளை உற்றுப் பார்த்தேன். "உள்ளே போ" என்று மனம் தூண்டவில்லை என்பது உண்மைதான். ஆனாலும் அந்த மனத்துக்குப் பின்னாலிருந்து ஏதோ ஒன்று என்னைத் தள்ளியிருக்க வேண்டும். கணத்துள் அவளுக்கு முன்னால் போய் நின்றேன். என்னைப் பார்த்தபடியே அதுவரை உட்கார்ந்திருந்தவள் எழுந்து நின்று, "என்ன, வந்திருக்கிறீர்களே?" என்று கேட்டாள்.







அவளுடைய கண்களில் முகத்தில் - அங்கங்களிலெல்லாம் அதிசயம் வழிந்தது.

அதைக் கவனித்தபடியே, "உங்களை அறிய விரும்புகிறேன்" என்று நான் சொன்னேன்.

என்னுடைய குரல் எனக்கே தெளிவற்றதாகிக் கேட்டது. ஆனால் தெளிவான, நிதானமான குரலில் அவள் பேசினாள்: "எது உங்களுக்கு வேண்டியதில்லையோ அதை அறிய ஏன் விரும்புகிறீர்கள்?"

நான் வெளியேற முயன்றேன். தானும் உடன் வந்து வழியனுப்பிவிட்டு அவள் திரும்பிச் சென்றாள்.

இப்பொழுது மேலும் அதிகமாக என் மனத்தின் பெரும் பாகத்தை அவள் பிடித்துக் கொண்டாள் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டேன். குழப்பம் என்று சொல்ல முடியாவிட்டாலும், அமைதியற்ற ஒரு வித மன நிலையோடுதான் வீட்டுக்குள் நுழைந்தேன். ஆனரல் அன்று வழக்கத்திற்கு மாறாக நேரத்தோடு தூக்கம் வந்ததன் இரகசியம் என்னால் ஊகிக்க முடியவில்லை.

## 2

**கா**லையில் வெகு நேரத்திற்குப் பிறகே எழுந்திருந்தேன். ஏதோ கனமான பொருள் அடிமனத்தை அழுத்துவது போன்ற உணர்ச்சி கலைந்து போகவில்லை.

"அவள் யாராக இருந்தால் உனக்கென்ன?" என்று பல தடவை எனக்குள்ளே கேட்டுப் பார்த்தேன். அவளை மறந்துவிடுவது நல்லது என்று உள்ளுக்குள்ளே ஒரு குரலை எழுப்பியும் விலக முயன்றேன். இப்டியெல்லாம் இலேசாக அழித்து விடத்தக்க ஒரு சாதாரண பொருளாக அவள் இல்லை.

கடைசியாக "இனி அந்தப் பக்கமே போவதில்லை. எதிர்பாராமல் சந்தித்தாலும் பார்ப்பதில்லை" என்று முடிவு செய்தேன்.

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. என் பிரதிக்கினைகள் மேகச்சாயை போல மெல்ல மெல்ல அழிந்து கொண்டே இருந்தன. அழிந்து போகாதபடி தடுக்கவோ, அழிய அழிய மேலே பூச்சுப் போட்டு ஒட்டவோ என்னால் முடியவில்லை. கடைசியில் அவளைப் பார்க்க வேண்டும் என்று முடிவு செய்தேன்.

அவளுடைய வீட்டை நோக்கி நடக்கும் போது மனத்துக்குள்ளே ஒரு குரல் எழுந்தது; "அவள் இல்லாமல் இருந்தால், கண்டுகொள்ள முடியாத ஏதாவது ஓர் இடத்திற்குப் போய் விட்டாளானால், எவ்வளவு நன்றாக இருக்கும்;"

தடுமாற்றத்தினிடையிலும் நிதானமாக நடந்தேன். வாயிலை அடைந்த போது, அவள் படியில் உட்கார்ந்தவளாய் என்னையே கவனித்துக் கொண்டிருந்தாள். வழக்கத்தைவிட நன்றாகத் தன்னை அலங்கரித்திருந்தாளோ அல்லது என் கண்களுக்கு தெரிந்ததோ என்னால் சொல்ல முடியாது. என்னைக் கண்டதும் அவள் எழுந்து நின்றாள். என்னோடு ஒரு வார்த்தை கூடப் பேசாவிட்டாலும் அவளைப் பார்த்துக்கொண்டு நிற்பதில் அலாதியான ஒரு சுகம் இருப்பதாக உணர்ந்தேன். அவளும் வெகு நேரம் வரை மௌனமாகவே நின்றாள். பிறகு இரண்டடி முன்னால் வந்து "நீங்கள் நிச்சயமாக வரவே மாட்டீர்கள் என்றே எண்ணியிருந்தேன்" என்றாள்.

நான் பேசவில்லை. சிந்திக்கவும் விரும்பவில்லை. அவள் முகத்தையே பார்த்தபடி சிலையாகி நின்றேன். சிறிது நேரத்தில் மறுபடியும் அவளே பேசினாள். "நிற்கிறீர்களே! உள்ளே வரலாமே".





நேராகவே படிகளில் ஏறிச் சென்று ஓர் ஆசனத்தில் உட்கார்ந்தேன். அவளும் வந்து எதிரில் அமர்ந்தாள். பேச எனக்கோ அவளுக்கோ ஏதாவது விஷயம் இருந்ததாகச் சொல்ல முடியவில்லை.

அவள் மெல்லச் சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டேன்

"குழந்தை போல வந்து விட்டீர்கள்".

"நீங்கள் சொல்லுவது எனக்கு புரியவில்லை" என்றேன் நான்.

அவள் பேச விரும்பாதவள் போல மௌனமாக இருந்தாள்.

கொஞ்சம் பொறுத்து, "ஒன்றுமே பேசாமல் இருக்கிறீர்களே" என்று நான் ஆரம்பித்தேன்.

"பேசுவதை விட மௌனத்தில் நிறையத் தெரிந்து கொள்ள முடிகிறதல்லவா?"

அவளுடைய வார்த்தைகள் என்னையும் மௌனத்தில் ஆழ்த்தி அவளைக் கூர்ந்து பார்க்கும்படி செய்து விட்டன.

அப்பொழுது அவள் கேட்டாள்: "என்ன ஆழ்ந்து சிந்திக்கின்றீர்கள்?"

"இல்லை உங்களைப் பார்க்கிறேன்"

"உங்களுக்கு என்னிடம் பார்க்கத்தக்கதாக ஒன்றும் இல்லையே!"

"நீங்களே அதைச் சொல்லிவிட முடியாது. தவத்தின் கனல்போல ஏதோ ஒரு தெய்வ ஒளி அல்லது தெய்வத்தின் மறைக்கமுடியாத சோபை உங்கள் முகத்தில் தெரிகிறது."

இருக்கமுடியாத நிலையில் எழுந்து நின்று அவள் பேசினாள். அவளுடைய குரல் சுருதி கலைந்த யாழினின்றும் எழுந்த கீதம் போல் இருந்தது. "எதைச் சொல்லக்கூடாதோ, அதையே சொல்லுவதற்கு நீங்கள் விரும்பிவிட்டீர்கள்".

"உங்களிடம் எதைக் கண்டேனோ அதையே சொன்னேன். வேறுவிதமாகப் பேசியிருந்தால் நிச்சயமாக நான் பொய் பேசினவனாகியிருப்பேன்." என்றேன் நான்.

அவளுடைய முகத்தில் இலேசாக வேதனையின் சாயல் படர்ந்தது.

இனிப்போக வேண்டும் என்று எண்ணிக்கொண்டு எழுந்தேன்.

அதை எப்படித்தான் தெரிந்து கொண்டாளோ; "வேண்டாம், இருங்கள்" என்று தடுத்தாள். அந்தச் சமயம் எதிர்பாராதவிதமாக அவளுடைய கை என்னைத் தீண்டிவிட்டது. திடீரென்று என் உடம்பு நடுங்கியது.

பிறகு நான் எழுந்திருக்கவில்லை. அப்படியே சக்தியற்றவனாக உட்கார்ந்திருந்தேன். எதிரில் அவள் நின்றாள். நன்றாக மனத்தை அகல விரித்து அதனூடே அவளை உற்றுப் பார்த்தேன். உண்மையில் இத்தனை காலமும் எந்த ஒரு பெண்ணிடமும் காணாத - கண்டுவிடமுடியாத - தூய ஒளி அவளிடமிருந்து எனக்கு வழி காட்டுவதுபோல இருந்தது.

அவள் உள்ளே சென்றாள். அந்த வழியையே பார்த்துக்கொண்டு நான் உட்கார்ந்திருந்தேன். திரும்பி வரும்பொழுது கையில் எதையோ எடுத்துக்கொண்டு வந்து என்முன்னால் வைத்து விட்டு, "அன்போடு எதை யார் கொடுத்தாலும் தெய்வம் அதை நிராகரிப்பதில்லை. இந்த அனுபவம் எனக்குச் சமீபத்திலேதான் உண்டானது" என்றாள்.

உண்மையில் நான் தடுமாறிக்கொண்டே எழுந்து நின்று அதை எடுத்து அருந்தினேன். அது இனித்ததோ கசந்ததோ எனக்குத் தெரியாது. சிறிது பொறுத்து அவளைப் பார்த்து "போ என்று இனிச் சொல்லுவீர்களா?" என்று கேட்டேன். அவள் சிரித்தாள். நானோ தலை கவிழ்ந்தபடி அவள் பாதங்களையே பார்த்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது அவள் குரல் கேட்டது: "நீங்கள் போகத்தான் போகிறீர்கள் நானும் தடுக்க விரும்பமாட்டேன்".







நான் எழுந்து நின்று வணங்கினேன். அவளும் தலை சாய்த்து தன் வணக்கத்தைத் தெரிவித்து வழியனுப்பினாள்.

# 3

**இ**த்தனை காலமும் எந்த திசையில் என் வாழ்வு நடத்தப்பட்டதோ, அந்தத்திசை மெல்ல மெல்ல மாறிவிட்டது. அதை நிறுத்திப் பழைய பாதையிலே செலுத்த நான் விரும்பியிருந்தாலும் அது முடிந்திராது. அப்படி என்னை நானோ அன்றி எதுவோ கொண்டு செல்ல விட்டு மௌனமாக இருந்தேன்.

பிறர் சரியாகவோ தப்பாகவோ எழுதி வைத்தவற்றை நெட்டுருப் பண்ணுவதேயே இலட்சியமாகக் கொண்ட கல்விக்காக எத்தனையோ முழுவருடங்களை முதலில் செலவழித்து விட்டேன். இந்த நிலை கசந்துபோக மற்றொரு பயங்கரமான சாதனைக்காலம். அப்பால் என்னை நானே சோதித்து சோதித்து கழித்த பலவருஷங்கள். பிறகு இது. இதை அந்தக் கல்வி என்றோ சொல்ல முடியாது. வேதனைகளைச் சகிப்பதில் சிலருக்கு இன்பம் இருக்கிறதல்லவா? அப்படி எனக்கும் இதில் ஒரு சுகம் இருந்தது.

எனக்குள் புகுந்து மறைந்து எப்போதுமே அவள் தூரத்தில் இருந்தாள். அவளுக்கு அருகில் போக எனக்கோ எனக்கருகில் வர அவளுக்கோ நினைவு வந்திருக்கலாம் என்று சொல்ல முடியாது. காணும் நேரங்களில் அவள் என்னை உபசரித்தாள். அந்த உபசரிப்பில் தூய்மையே எப்போதும் பிரகாசித்தது. அப்போதெல்லாம் ஏன் இப்படிச் செய்கிறாய் என்று கேட்பதே பாவமாக இருந்தது.

நான் அவள் முன்னிலையில் நின்று சிரித்திருக்கின்றேன். அவளும் சிரித்திருக்கின்றாள். என் சிரிப்பில் அவள் எதையாவது கண்டு இருக்கக்கூடும். ஆனால்

அவளுடைய சிரிப்பிலோ நான் ஒன்றையுமே புரிந்து கொண்டதில்லை. நீ யார்? என்று கேட்பதை இப்போது நான் நிறுத்தி விட்டேன். எனக்குள்ளும் ஆராய்கிற விருப்பம் அழிந்து விட்டது. அவள் அவளாகவும் நான் நானாகவும் எப்படியோ இருந்துவிட்டோம்.

ஜனங்கள் எங்களைச் சருகுக் கண்களால் பார்க்கிறார்கள். பேசுகிறார்கள். அதில் எனக்கோ அவளுக்கோ அக்கறை கிடையாது,

ஒருநாள்; அதுவும் மாலைநேரம் என்று நினைக்கிறேன். குடிசையின் முன்புறத்தில் மரத்தின் கீழே பரந்து கிடந்த மணல் மீது படுத்துக் கண்ணயர்ந்து விட்டேன். விழித்துப் பார்த்தபோது என் பக்கத்தில் இருந்து ஒரு விசிறியால் அவள் விசிறிக் கொண்டிருந்தாள்.

படுத்தபடியே கேட்டேன்: "ஏன் இப்படிச் செய்கிறீர்கள்?" அவள் சொன்னாள்: "சுகமாகத் தூங்குங்கள்"

நான் எழுந்து உட்கார்ந்தேன். அவள் விலகவில்லை. அதில் இருந்தபடியே விடாமல் விசிறிக் கொண்டிருந்தாள்.

"விசிறியை இனி என் கையில் கொடுங்கள்." என்று நான் கேட்டேன்.

"முடியாது. நீங்கள் மறுபடியும் படுத்துத் தூங்குங்கள். நான் விசிறப் போகிறேன்".

அவள் கொஞ்சமும் எதிர்பாராத நிலையில் எட்டி விசிறியைப் பிடித்தேன். அவள் கையே என் கைக்குள் அகப்பட்டது. விசிறி கீழே மணலில் விழுந்து கிடந்தது.

அவள் எழுந்தாள். ஆனால் நான் மட்டும் அவள் கையை விட நினைக்கவில்லை. அவளும் பறித்தெடுக்க விரும்பாதவள் போலவே சற்றே குனிந்தபடி நின்றாள். நான்





உற்றுப்பார்த்தேன். என் கை தானாகவே நெகிழ வாயிலிருந்து பக்தியின் துடிப்போடு "பராசக்தி!" என்று குரல் எழுந்தது.

அவள் நன்றாக நிமிர்ந்து நின்று என்னை ஒருமுறை பார்த்துவிட்டுச் சாலையை நோக்கி நடந்தாள். அப்படி நடக்கும்போது இடையில் ஒருமுறையாவது திரும்பிக் கூடப் பார்க்காமலே சென்று மறைந்துவிட்டாள். நான் மட்டும் இருந்தபடியே அங்கேயே உட்கார்ந்திருந்தேன். நேரம் கழிந்து கொண்டிருந்தது. உலகத்தை இருள் மூடியபிறகும் அப்படியே உட்கார்ந்திருந்தேன். வீட்டில் விளக்குக் கூட ஏற்றவில்லை. அப்பொழுது அவள் எங்கிருந்தோ வந்து என்முன் நின்றாள்.

"ஏன் வந்து மௌனமாக நிற்கின்றீர்கள்?" என்று நான் கேட்டேன்.

"உங்களை என்னோடு அழைத்துப் போக வந்திருக்கிறேன்." என்ற பதில் அவளிடமிருந்து கிடைத்தது.

"எதற்காக?"

என்னுடைய கேள்விக்கு ஒன்றும் சொல்ல விரும்பாதவள்போலவே அவள் மௌனம் சாதித்தாள்.

மறுபடியும் நானே கேட்டேன்: "உங்களை யாரென்று எனக்குப் புரியும்படி அறிவிக்க மாட்டீர்களா?"

"அதை ஒரு நாளைக்குச் சொல்லத்தான் எண்ணியிருக்கிறேன். ஆனால் ....."

"நிறுத்திவிட்டீர்களே, சொல்லுங்களேன்"

அவள் எனக்குப் பதில் தராமல், "இன்றைக்கு நான் இங்கேயே தங்கப் போகின்றேன்" என்றாள்.

நான் மௌனமாகி நின்று அவளைப் பார்த்தேன். என்னிடமிருந்து எதையுமே எதிர்பாரதவளாய் அவள் உள்ளே சென்றாள். இருட்டில் எதையோ இழுத்துத் தரையில் போட்டுக்கொண்டு படுத்து விட்டாள். கொஞ்ச நேரத்தில் நானும்

எழுந்து சென்று விளக்கை ஏற்றினேன். அதற்குள் அவள் நன்றாகத் தூங்கிவிட்டாள். சிறிது நேரம் வரையில் அப்படியே நின்று அவளைப் பார்த்தேன். பிறகு மெல்ல வெளியேறி அதே மரத்தடியில் மணல் மீது உட்கார்ந்தேன்.

## 4

**அ**ந்த இடத்திலிருந்து அவளை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவள் அயர்ந்து தூங்கினாள். விளக்கொளியில் அந்தத் தூரத்தில் இருந்து பார்க்கும்போது கூட அவளுடைய தோற்றம் மயக்கம் தருவதாக இருந்தது.

மறுபடியும் எழுந்து அவளுக்கருகில் போய் விளக்கை நன்றாகத் தூண்டிவிட்டு உற்றுப் பார்த்தேன். சராசரங்களை ஊடுருவி எங்கும் நிறைந்து பரிமளிக்கும் ஜீவ சக்தியாகிக் கலைகள் காணாத அமிர்த சுரமாகி, அவள் விளங்கினாள்.

என் உடம்பு சிலிர்த்தது. எழுந்துநின்று என் வணக்கத்தைச் செலுத்திவிட்டு வெளியே வந்து உட்காந்தேன். மெல்ல மெல்ல தூக்கம் கண்களை வந்து மருகியது.

அதிகாலையில் எழுந்து பார்க்கும்போது என் எதிரே இருந்த மண்ணை ஒழுங்காக்கி அதில் எதையோ எழுதிக் கொண்டிருந்தாள் அந்தப்பெண். உற்றுக்கவனித்தேன். ஒன்றையுமே புரிந்து கொள்ள முடியவில்லை. அதனால் "என்ன எழுதுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

உடனே அவள் அதனை அழித்துவிட்டுத் தன் கைக்கு எட்டிய மணலை அழுத்தி அழகு செய்தாள். பிறகு அதைக் காட்டி, "இதிலே என்னை யாரென்று கண்டுகொள்ளுங்கள்" என்றாள்.

நான் எழுந்து உட்கார்ந்தபடி அவளைப் பார்த்து இதையே சொன்னேன்: "உங்களை - உங்கள் வார்த்தைகளை - செயல்களை -உங்களோடு சம்பந்தப்பட்ட மற்ற எதையுமே





புரிந்து கொள்கின்ற சக்தி என்னிடம் இல்லை."

அவள் என்னை நன்றாக உற்றுப் பார்த்துவிட்டு நடக்க ஆரம்பித்தாள். நான் அவளைத் தடுக்கவில்லை. ஆனால் எழுந்து பின்னால் நடந்தேன். சிறிதுதூரம் சென்றதும் திரும்பி நின்று "ஏன் வருகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"எப்படியாவது உங்களைத் தெரிந்துகொள்ளவே விரும்புகிறேன்" என்றேன் நான்.

"உங்களுக்கு அது வேண்டாம்".

இப்படிச் சொல்லிவிட்டு அவள் அங்கேயே நின்றாள். நான் மேலும் நடந்தேன். அதைப்பார்த்ததும், "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று என்னைக் கேட்டாள்.

உடனே பதில் கொடுத்தேன். "உங்களை மறந்து விடக்கூடிய ஓர் எல்லையை அடைவதற்காக".

அவள் ஒரு மாதிரிச் சிரித்துக்கொண்டே "சொல்லுகிறேன், வாருங்கள்" என்று கூப்பிட்டாள். அவ்வளவில் திரும்பி அவளுக்குப் பின்னால் நடந்தேன். அவள் நேராகவே என் வீட்டைநோக்கி நடந்து சிறிது நேரத்திற்கு முன் தான் அழுத்தி அளவு செய்த அந்த மணல் மீது உட்கார்ந்துகொண்டு, "இதோ பாருங்கள் என்னை நானே எரித்துச் சாம்பராக்க முடியுமானால் நான் யாரென்பதை உங்களுக்குச் சுலபமாக காட்ட முடியும்" என்றாள். நான் திகைப்பினால் மௌனமாகி நின்றேன்.

அவள் தொடர்ந்து பேசினாள்: "உங்களை நானும், என்னை நீங்களும் இனிச் சந்திக்க வேண்டாம். நீங்கள் நான் என்ற பேதம் - உறவு அழிந்து மறைந்து போகட்டும். உங்களை மறக்கவோ நினைக்கவோ நான் முயல மாட்டேன்."

நான் ஸ்தம்பித்துக் கல்லாகி நின்றேன். அவளோ எழுந்து கனவேகமாக ஏதோ ஒரு திசையில் நடந்து மறைந்தாள்.

# விதி

உள்ளே களியாட்டங்களும் கேளிக்கைகளும் நடந்துகொண்டிருந்தன. ஆயிரக்கணக்கான ஜனங்கள் அதிலே கலந்து சந்தோஷமாகக் காலத்தைக் கழித்தார்கள். அங்கிருந்து வரும் ஆரவாரமும் சிரிப்பும் தெருவுக்கப்பாலும் வெகு தூரம் வரைக்கும் கேட்டுக்கொண்டிருந்தது. ஆனால் தெருவில்....? ஏழைப் பிச்சைக்காரர்களின் கூட்டம். பொலிசாரால் துரத்தப்பட்டு ஓடுவதும் ஒளிந்துகொண்டு திரும்புவதுமாக அந்தக் கூட்டம் நிலை தடுமாறி அடிக்கடி கலைந்து கூடிக்கொண்டிருந்தது. அதிலே பெண்களும் கிழடுகளும் குழந்தைகளும் கலந்திருந்தார்கள். அவர்களைக் கூர்ந்து பார்ப்பதற்கு அங்கே ஒருவருமில்லை. யாராவது வெளியே புறப்படும் போது மட்டும் "ஐயா! ஏழைக்கு ஒரு செப்புக்காசு கொடுங்கள், கோடி புண்ணியம் கிடைக்கும்" என்ற சோகம் நிறைந்த ஒலிகளே தெருநெடுகக் கேட்டுக்கொண்டிருந்தன.

ஜனங்களிற் சிலர் வெளியே வந்தார்கள். சில பிச்சைக்காரர்களும் அவர்களைத் தொடர்ந்து ஓடினார்கள். "அம்மா! ஏதாவது கொடுங்கள், பசிக்கிறது" என்று ஒரு குரல் எழுந்தது. "சீ நாயே! தூரப்போ" என்ற பதிலே அதற்குக் கிடைத்தது. மறுபடியும் "அம்மா", "ஐயா" என்ற குரல்கள். அதற்கு "ஐயையோ சகிக்க முடிகிறதில்லையே. இந்த அரசாங்கமாவது இவர்களைக் கொன்றுவிட்டாலென்ன?







தெருவிலே கிளம்ப முடிகிறதில்லை. தொலைந்து போங்களேன்" என்ற இனிமையான வரவேற்பு மட்டும் கேட்டது. ஒருவர் பின் ஒருவராகப் போன அத்தனைபேரும் திரும்பி விட்டார்கள். இப்படியே பல ஆயிரம் பேரிடம் கேட்டுக்கேட்டு அவர்களுக்கு ரோஷமும் மானமும் போய்விட்டன. "கேட்டால் "இல்லை போ" என்றால் நாங்கள் போய்விடுகிறோம். எதற்காக இத்தனை வசவுகள்? ஆமாம். ஒருவரிடத்திலும் பிசகில்லை. எங்கள் விதி செய்விக்கிறது" என்ற ஒரு பெண் குழந்தையின் கீச்சுக்குரல் மட்டும் தனிமையிலே கேட்டது. அதற்குள்ளே பிச்சைக்காரர்கள் தெருக்கோடியிலே மறைந்துகொண்டிருந்தார்கள். அவள் அந்த இடத்தைவிட்டு அசையவேயில்லை. இதுவரை எவ்வளவோ நேரமாக அங்கே சுற்றிச் சுற்றி அலுத்துப்போனாள். அற்பப் புழுவைப் போல ஜனங்கள் அவளைத் தூரத்தள்ளினார்கள். சிலர் மட்டும், "உன் ஆட்கள் எங்கே ஒளிந்து நிற்கிறார்கள். நோவாமற் சாப்பிட இப்போதே கற்றுக்கொண்டாயே, போடி நாயே!" என்று சுடும்படி பேசினார்கள். இந்தப் பேச்சுகள் ஏழைக்குழந்தையின் இருதயத்தைக் கசக்கிவிட்டன. வருகிறவர்கள் போகிறவர்கள் எல்லோரையும் பார்க்கப் பார்க்க அவளுக்கு எரிச்சலும் அழுகையுமாகவே வந்தது. யாரையும் பிச்சை கொடுங்கள் என்று கேட்கவும் மனம் வரவில்லை. ஒன்றும் கிடைக்காவிட்டாலும் என்ன செய்வதென்றும் தெரியவில்லை. "அம்மா வீட்டிலே என்ன செய்கிறாளோ? சுரம் எப்படி அடிக்கிறதோ?" என்ற எண்ணமும் அவளது ஸ்படிகம் போன்ற உள்ளத்தை அழுக்கிக்கொண்டிருந்தன.

பேசாமல் நின்றவள், தனக்கெதிரே வந்த மனிதரைப் பார்த்தாள். அவரும் அவளையே கவனித்துக்கொண்டு வருவதாகத் தெரிந்தது. துணிவாக இரண்டு கைகளையும் நீட்டினாள். ஆனால் தலை நிமிரவில்லை. அவருக்கு ஆச்சரியமாகவே இருந்தது. சிறிய அந்தக் கைகளைப் பிடித்துக்கொண்டு, "அம்மா, உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார் பெரிய மனிதர். எவரும் இப்படிப் பேசினதை

அவள் கேட்டதில்லை. ஆவல் நிறைந்த கண்களால் அவளைப் பார்த்தாள். ஏனோ குழந்தையின் கண்கள் கலங்க வாயிலும் பேச்சு வராமல் துடித்தது. "அம்மா! உனக்கு என்ன வேண்டும் என்னிடம் பயப்படாமல் சொல்லு." என்று அவர் மறுபடியும் கேட்டார். அப்போதுதான் அவள் பேச்சு வெளியே கேட்டது.

"யாரைக் கெஞ்சினாலும் உதைக்க வருகிறார்கள். ஏதாவது பிச்சை கொடுங்கள் ஐயா".

"நீ யாரம்மா? உன் பெயர், ஊர் என்ன?"

"ஐயா நானொரு பிச்சைக்காரப் பெண் என்று தெரியவில்லையா? என் பெயர் சாந்தி. எங்களுக்கு அந்த ஆற்றோரக் கிராமம்"

"அப்படியானால் உனக்கு அம்மா இல்லையா?"

"அம்மா காயலாகக் கிடக்கிறாள். நான் போகலாமா என்று கேட்டபோது விடமாட்டேனென்று தடுத்தாள்.சொல்லாமல் மற்றவர்களோடு ஓடிவந்துவிட்டேன். இனி எல்லோரும் போய்விடுவார்கள். ஏதாவது கொடுங்கள் நானும் போகவேண்டும்."

"அம்மா சாந்தி! உன்னைத் துணையோடு அனுப்பி வைக்கிறேன். என் வீட்டுக்கு வருகிறாயா"?

சிறிது நேரம் வரை அவள் ஒன்றும் பேசவில்லை. பிறகு, "ஐயா! எல்லோரும் என்னைக் கண்டால் அடித்து விரட்டுகிறார்கள்.நீங்கள் ஏன் அப்படிச் செய்யாமல் நல்லவராக இருக்கிறீர்கள்?" என்று அவள் கேட்டாள். இதைக் கேட்டதும் அவரும் சிறுகுழந்தையாகி விட்டார். ஆவலோடு இரண்டு கைகளாலும் அவளை அணைத்து முத்தமிட்டு பரவசமானார். பிறகு, "சாந்தி! நீ குழந்தையாயிற்றே? உன்னைக் கண்டால் எல்லோருக்கும் பிடிக்குமல்லவா?" என்று சொல்லிக்கொண்டே தன் வீட்டுக்கு அவளை இட்டுச் சென்றார். குழந்தைக்கு எல்லாமே புதுமையாகவேயிருந்தது. அவள் சந்தோஷத்தால் அழுதுவிட்டாள். "நீ இனிமேல் பிச்சைக்குப் போகவே கூடாது.





என்ன வேணுமானாலும் நான் தருகிறேன். ஏனம்மா?" என்று அவர் கேட்டபோது சாந்தி சந்தோஷத்தோடு தலையை ஆட்டினாள்.கொஞ்ச ரூபாய்களை அவளது துணியிலே முடிந்து துணைக்கு ஓர் ஆளையும் அனுப்பிவைத்தார். திடீரென்று ஏற்பட்ட பாசம் அந்தக் குழந்தையைக் கூட பிரிய விடாமல் இழுத்தது.

சாந்தி தங்கள் குடிசையைக் கண்டதும் மான் போலக் குதித்துக்கொண்டு கூட வந்த மனிதரையும் கவனிக்காமல் ஓடிவிட்டாள். மனமுடைந்து நோயோடு கிடந்த அந்த ஏழைத் தாயின் முகம் அவளைக் கண்டதும் மலர்ந்தது. தனது பலமற்ற கைகளைத் தூக்கி, "வா என் செல்வமே! இத்தனை நேரம் எங்கே போனாய்?" என்று கேட்டாள். குழந்தை ஒன்றும் பேசவில்லை. துணியிலிருந்த முடிப்பை அவிழ்த்து அம்மாவிடம் கொடுத்தாள். "அம்மா! விதி நம்மைக் கொன்றுவிடும் என்றாயே? இன்று பார்த்தாயா?" என்று நடந்த எல்லாவற்றையும் சொன்னாள். அந்தப் பிச்சைக்கார குடிசையில் ஈசுவரனுடைய கருணையைப் பற்றிய பேச்சே அன்று முழுவதும் கேட்டுக்கொண்டிருந்தன.

ஒன்பது அல்லது பத்து வருஷங்கள் முந்தி இருக்கலாம். இன்றைக்கு எல்லோராலும் பிச்சைக்காரி என்று கருதப்படுகின்ற அவள் அளவில்லாத செல்வத்தில் மிதந்துகொண்டிருந்தாள். அவளிருந்த வீடு இன்றைக்கும் நகரத்தின் மத்தியிலே கம்பீரமாக விளங்கிக்கொண்டிருக்கிறது. அப்போது உடம்பில் ஒரு சிறிய கோளாறு ஏற்பட்டாலும், டக்டர்கள் "நான்" "நீ" என்று வந்து குவிந்து விடுவார்கள். "உடம்பு எப்படியம்மா?" என்று தினமும் நூறு தடவை கேட்டுப்போவதற்கும் அநேகர் இருந்தார்கள். ஆனால் இன்றைக்கு?...... "இது என் விதி. யாரையும் குறை சொல்வதற் கில்லை." என்று அவள் தானே அடிக்கடி சொல்லிக்கொள்வாள். நினைந்து வயதாக இருக்கும்போதும் அவளுடைய தாய் "ரபா! என் செல்வமே" என்று அவளைத் தன் மடிமீது

எடுத்து அணைத்துக்கொண்டு தாலாட்டியது உண்டு. "கோமளமே" "குலவிளக்கே" என்று கொண்டாடின தாய் எங்கே? அந்த மாளிகையிலே அழியாத் சோகத்திரைக்குள்ளே மயங்கிக் கிடந்து தவிக்கின்றாளோ? யார் அறிவார்? இதனையெல்லாம் நினைக்க நினைக்க பிரபாவதியின் உள்ளம் சோர்ந்து கண்களில் நீர் நிறைந்துவிடும். அப்பொழுதெல்லாம் "விதி செய்விக்கிறது" என்ற வார்த்தை மட்டும் மெல்லப்பிறந்து அவளது வாய்க்கருகிலே தேய்ந்து சூன்யமாகிவிடும். இதைக் கேட்டுப் பழகினதாலேதான் குழந்தையும் பிச்சைக்காரர்களை ஜனங்கள் பேசித் துரத்திய போது "விதி செய்விக்கிறது" என்று சொல்லிக்கொண்டு நின்றாள்.

பிரபாவதி சிறு பெண்ணாக இருந்த போது உலகம் அவளைக் கண்போலக் கருதி வளர்த்தது. எல்லோருக்கும் அவள் உயிர். பெரிய இடத்துக் குழந்தையல்லவா? ஆனால் அவளுக்கு உயிர் போன்ற வேறு ஆத்மாவும் இருந்தது. அந்த ஹரிஹரன் இப்போது எங்கே என்பதும் அவளுக்குத் தெரியாது. ஆனால் தான் இத்தனை இழிவு நிலைக்கு வந்தும் மாசற்ற அந்த மனிதனாலேதான் என்பதை அவள் நினைத்துப் பார்ப்பதே இல்லை. இளமையில் எப்படியெல்லாம் கலந்து விளையாடினார்கள்! பக்ஷிகள் போலக் கவலையின்றிப் பறந்தார்கள். அப்போது குழந்தைகளின் ஸ்நேகம் தனே என்று எல்லோரும் கருதியிருந்தார்கள். புஷ்பங்களைப்போல அவர்களையும் பருவம் வந்து அணைத்துவிட்டது. பிறகும் அவர்களது பாந்தவயத்தை வெட்டிவிட ஒருவரும் நினைக்கவில்லை. அவள் பெரியவளான புதிதில், "பிரா! இப்பொழுதெல்லாம் ஏனோ ஒதுக்கத்திலே போய்விட்டாய்?" என்று அவன் கேட்டதும், தான் மௌனமாக நின்றதும், தன் மௌனத்தில் எழுந்த புதிய உணர்ச்சிகளும், அவன் தன் கைகளைப் பிடித்துக்கொண்டு, "நீ எப்படி மாறினாலும் நான் உன்னைவிட்டுத் தூரத்தில் இருக்க மாட்டேன்" என்றதும் நேற்று நடந்தவை போலலே அவள் உள்ளத்திலே எழுதியிருந்தன.





"ஹரி! இப்படி ஏன் செய்கிறாய்?" என்பதைவிட்டு "நீங்கள் இப்படிச் செய்யலாமா?" என்று அவள் பேசத்தொடங்கிய காலம் அது. அவளுடைய எண்ணங்களிலும் செய்கைகளிலுமே பழைய இயல்பு இருந்தது. வார்த்தைகள் மாறின. இம்மாறுதல் அவனுக்குப் பிடிக்கவில்லை. " பிரபா! நான் என்ன பெரிய மனுஷனா? ரொம்பவும் மரியாதை செய்கிறாயே? எனக்கு இது வேண்டாம். முன்பு போலவே பேசு. விளையாடு. அதையே நான் விரும்புகிறேன்." என்றான். "போங்கள். நாம் இன்னும் குழந்தைகளா? பார்த்தவர்கள் என்ன சொல்லுவார்கள்? அப்படியானால் உங்களோடு பேசமாட்டேன்." என்று அவள் பிடிவாதம் செய்தாள். இந்த நாட்களில் அவர்களுடைய வாழ்விலே ஏதோ ஒன்று சூஷ்யமாக அமைந்திருந்தது. ஆனால் எல்லாவற்றிலும் ஒரு உற்சாகம் பிறந்ததேயன்றிச் சலனம் ஏற்படவில்லை. இப்படியே இரண்டு வருடங்கள் கழிந்துவிட்டன.

# 3

**பி**ரபாவதிக்குப் பதினாறுவயதுதான் இருக்கும். ஹரிஹரனின் தந்தை கல்கத்தாவிலே இறந்துவிட்டாரென்ற செய்தி வந்தது. அங்கே அவருடைய சொத்துக்களின்மேல் வியாஜ்யங்களும் நடந்து கொண்டிருந்தன. எல்லாவற்றிற்கும் ஹரிஹரனே கல்கத்தாவுக்குப் போக வேண்டியிருந்தது. "இந்தப் பொருளுக்காக இவளைப் பிரிந்து போக வேண்டியிருக்கிறதே, என்று அவன் முதலில் வருத்தப்பட்டான். மற்றவர்களும் போ போ, என்று தொந்தரவு செய்தார்கள். எப்படியும் சீக்கரம் வந்து விடுவோம் என்று முடிவு செய்து கொண்டு புறப்பட்டான். போகும்போது, "பிரபா! நான் போக வேண்டியிருக்கிறதே. உடனே வந்து விடுகிறரேன். நீ சந்தோஷமாகப் போகச் சொல்லு" என்று அவளைக் கேட்டான். அவள் தலையை அசைத்தாள். அந்த அசைப்பு "நீ போக வேண்டாம்" என்று சொல்லுவது போலவே அவனுக்குப் பட்டது. உயிரைப்

பறித்துச்செல்லும் யமனது குரல் போலக் கல்கத்தாவண்டி கூவிய சத்தம் பிரபாவதியின் காதிலே வந்து விழுந்தது.

ஹரிஹரன் கல்கத்தாவுக்குப் போய் ஒரு மாதகாலமாகிவிட்டது. அப்பொழுதுதான் பிரிவின் பயங்கரம் அவளுக்குத் தெரியவந்தது. தனது சரித்திரம் வசையாக எழுதப்படப் போகிறதேயென்று கவலையோடு பார்த்திருந்தாள். ஒவ்வொன்றாக மாதங்களும் ஐந்து கழிந்து விட்டன. "இனிக் கைகொடுத்து எனக்கு முன்பு நின்று பேச அவர் வரவேண்டும். இல்லாவிட்டால் நம் குலமே மானக்கேட்டால் அழிந்துவிடும். இதை அம்மா அறிந்தால்..." என்றெல்லாம் நினைக்கும்போது, தான் செத்து விட்டதாகவே எண்ணிக் கொண்டாள். எல்லாவற்றையும் எழுதி உடனே வரும்படியும் ஹரிஹரனை வேண்டிக் கொண்டாள். பிறகும் ஒருமாதம் கழிந்து விட்டது. அவனிடமிருந்து பதில் கூட வரவில்லை. கல்கத்தாவில் அவன் இருந்தால்தானே. விதி அவனை எங்கோ மறைவிலோ ஒளித்து வைத்து விட்டது. "வாழ்வின் கடைசிக் கோட்டிலே உலகம் சொல்லும் வசை என்னும் சுழற்காற்றின் நடுவிலே நிற்கிறோம்" என்பதை மட்டும் அவள் பிரத்தியட்சமாகக் கண்டாள். வரவர மனதிலும் உறுதி பிறந்தது. "அம்மாவை விட்டுப் போவதை நினைக்க முடியவில்லையே. ஆனாலும் அவர்களுக்குக் கெட்ட பெயர் வராதபடி காக்க வேண்டும்." என்று சங்கல்பம் செய்து கொண்டிருந்தாள்.

ஒருநாள்; நடுநிசி. வானம் மழை முகில்களால் போர்த்தப்பட்டிருந்தது. மரங்களும், கட்டிடங்களும், பாதைகளும், வெறும் வெளியும் ஒன்றாக மயங்கிக் கிடந்தன. கண்களை இறுக மூடிக்கொண்டு பார்த்தாலும் மலர விழித்துப் பார்த்தாலும் உலகம் ஒருமாதிரியாகவே தெரிந்தது. அடி வானத்தின் வட கோடியில் மட்டும் ஒரு நட்சத்திரம் மங்கலாகத் தெரிந்தது. தூரத்திலே சில நாய்கள் ஊளையிட்டுக் கொண்டிருந்தன. மௌனமான இரவிலே அந்தச் சத்தம் பேய்களின் நினைவுகளைக் கொண்டு வந்தது. மரணத்தைத் தேடிக் கொண்டு அவள் போனபோதிலும் ஏங்கிக் கலங்கினாள். "எப்படி







யானாலும் சாவு வரட்டும். ஆனால் எனது தேகத்தைக் கூட இந்த உலகம் கண்டுவிடக்கூடாது" என்று நினைத்துக்கொண்டு இருளோடு ஐக்கியப்பட்டு நடந்தாள்.

மனத்தின் வேகம் போல நாழிகைகளும் கழிந்து கொண்டிருந்தன. நதிக்கரைக்கு வந்துவிட்டாள். மனமோ வரவர திடமற்று தடுமாறியது. மறுபடியும் திடப்படுத்திக்கொண்டு தண்ணீருக்குள்ளே காலை வைத்தாள். முன்னால் ஏதோ ஒன்று மங்கலாகத் தெரிந்தது. உற்றுப் பார்த்தாள். அது ஒரு சிறிய படகு. எல்லா நினைவுகளும் ஒருமுறை சுழன்று தடுமாறின. "தன்னைத் தான் கொன்று கொல்வது மகா பாபம். இதிலே சிசுஹத்தியும் ஏற்படுகிறது. எப்படியோ என் உடம்பு கண்டுபிடிக்கப்பட்டால் எல்லாம் தெரிந்துவிடும். கடவுளே தடுத்துப் புது வழியைக் காட்டுகிறார்" என்று நினைத்துப் படகை எப்படியோ அவிழ்த்து அதிலே ஏறிக்கொண்டாள். படகு தன் இஷ்டப்படியே வேகமாகவும் மெதுவாகவும் காற்றோடு சென்றது. அப்பொழுதுதான் தனது வாழ்க்கைப்படகும் ஏதோ ஒரு திசையில் ஓடிக்கொண்டிருக்கிறது என்பதை பிரபாவதி உணர்ந்தாள். தான் இருக்கும் படகும், நீண்டு சலசலத்தோடும், நதியும், இருண்ட மரத்தோப்புகளும் தனிமையிலே அவளைக் கலங்கச் செய்தன. மனம்நடுங்க உடம்பும் சேர்ந்து நனைந்துவிட்டது. கண்களை இறுக மூடிக்கொண்டாள். படகு நீரைக்கிழித்துக் கொண்டு ஓடும் சத்தம் ஒன்றே அப்போது கேட்டுக் கொண்டு இருந்தது.

மெல்ல மெல்ல வானத்தில் முகில்கள் கலைந்தன. அங்குமிங்குமாகச் சில நட்சத்திரங்கள் கண்சிமிட்டத் தொடங்கின. அந்த நட்சத்திரங்களின் மங்கிய ஒளியிலும் அவளுடைய தேகம் பிரகாசித்தது. அப்போது நீரர மங்கை போல நதியின் நடுவிலே அவள் சென்று கொண்டிருந்தாள். படகும் தடுமாறிக்கொண்டே ஒரு கரையை அடைந்து நின்றது. பக்கத்திலே மணல் பரந்த நெடிய கரையைக் கண்டாள். நெருப்புப் போல ஒரு மூச்சு வந்தது. அதைத்தொடர்ந்து

வந்த கண்ணீர்த்துளிகள் நதியின் பிரவாகத்திலே விழுந்து கலந்து விட்டன. கரையிலே வந்து பார்த்தபோது வழி துறை ஒன்றும் தெரியவில்லை. சிறிதுநேரம் வரை மணலில் இருந்தாள். "வாழ்வு என்ற குரூரமான பாதையிலே முள்ளால் குத்தப்பட்ட புஷ்பம் போலாகிவிட்டாய். விதியோ கோரப்பற்களைக் காட்டிக்கொண்டு பயங்கரமாகச் சிரித்தாலும் "உன் மானம் அழிந்துவிடப் போவதில்லை" என்று தனக்கத்தானே சொல்லிக்கொண்டாள். அப்பொழுது வைகறையும் வந்துகொண்டிருந்தது. உற்றுப்பார்த்தபோது மனிதர் நடமாடிய ஒரு சிறிய பாதை மட்டும் தெரிந்தது. அதுபோன வழியே தானும் யோசிக்காமல் நடந்தாள்.

# 4

**பி**ரபாவதி முழுதும் வேறான ஓர் உலகத்தை இப்போது கண்டாள். ஆழத்தில் மறைத்து வைத்திருந்த இரகசியங்களைக் கூடச் சொல்லக் கூடிய மனிதர்கள் அங்கே அகப்பட்டார்கள். ஆனால் தன் பதி, தங்களது உயர்ந்த அந்தஸ்து என்பவற்றைப்பற்றி மட்டும் ஒன்றும் சொல்லவில்லை. அறிந்தவற்றையும் பூடகமாக வைத்துக் கொள்ளும்படி அவர்களை வேண்டிக்கொண்டாள். அவளுடைய பரிதாபமான நிலைமைக்காக எல்லோரும் கண்ணீர் வடித்தார்கள். தாயின் அன்பும், தோழிகளின் உருக்கமும் அங்கும் காணக் கூடியனவாக இருந்தன. அலட்சியமும் அதிகாரமும் யாரிடமும் இல்லை. "எல்லோரும் ஒரே குலத்தவர்கள், சமதைகளா னவர்கள்" என்று வாழ்ந்தார்கள். ஒருகால் சச்சரவுகள் எற்பட்டாலும் அடுத்த நிமிஷம் அவர்களிடம் அன்பு பெருகி ஓடுவதைக் காணலாம். ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் பிச்சைக்குப் போய்விடுவார்கள். பிரபாவதி நேற்று வாழ்ந்த வீட்டிற்கும் அவளுக்கு இன்று கிடைத்திருக்கின்ற குடிசைக்கும் எவ்வளவு வித்தியாசமோ அதைவிட மேலாகவே அந்தச் சுற்றத்திற்கிடையிலும் வித்தியாசம் இருந்தது.







வரவர அவள் உடம்பில் நோவும் இளைப்பும் ஏற்பட்டன. படிப்பில்லாதவர்களானாலும் அன்போடு அணையும் தாதியர்கள் உதவிக்கு வந்தார்கள். அவர்கள் காட்டிய உரிமையே பிரபாவின் வருத்தத்தை எல்லாம் பறந்து விடச் செய்தது. ஒருநாள் தன் துன்பத்திற்கெல்லாம் எல்லை போன்ற ஒரு செல்வக் குழந்தையைப் பெற்றெடுத்தாள். பட்டின் மேல் டாக்டர்களின் மத்தியிலே பிறக்காவிட்டாலும் அழகின் ஜீவன் அந்தச் சிசுவிடம் பரிமளித்தது. குழந்தையைப் பார்த்தபோது தாயின் மனதில் பெரிய சாந்தி பிறந்தது. அதற்காகவே தன் பெண்ணை, "சாந்தி" என்று கூப்பிடச்சொன்னாள். நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. இரண்டு வருஷத்திற்கு மேல் இந்த புதிய வாழ்வினை அவளது தேகம் பழகிவிட்டது. சாந்தியின் தட்டுத்தடுமாறி நடக்கத் தெரிந்த குழந்தையாகி விட்டாள்.

நதியில் ஜலம் நிறைந்து ஸ்படிகம் போல ஓடிக்கொண்டிருந்தது. மரம் செடிகள் தளிர்த்துப் பிரகிருதியின் யௌவனம் போலப் பொலிந்து விளங்கின. இளங்காற்று அவற்றிலே பட்டுச் சலசலப்பது மாயா ரூபிணிகளான தேவமங்கையர்கள் லதாக்கிருகத்தின் மறைவிலே நர்த்தனம் செய்வதுபோலக் கேட்டது. பிரபா வரண்டுதான் போய்விட்டாள். அவளிடம் இளமையின் மோகன நாதத்தை எழுப்புகிற நரம்புகள் இன்னும் அறுந்துவிடவில்லை. தேவகாலத்தை இசைக்கக்கூடிய பொன் யாழொன்று மீட்டுகின்ற வைணிகன் இல்லாமையினால் துருப்பிடித்துக் கிடப்பதுபோலவே அவள் இருந்தாள். எத்தனையோ வருஷங்களுக்கு முன் அந்த யாழிலிருந்து இன்னிசையை ஒருவன் எழுப்பினான். அது உலகத்தின் மறைவிலே தான் நடந்தது. பிறகு நீண்ட தனிமையிலே அவள் அயர்ந்து போனாள். அன்று பிரகிருதியின் மாதுர்யம் அவளை அணைப்பதுபோல இழுத்து மிதித்து கசக்கியது. எல்லாப் பக்கத்தையும் திரும்பிப் பார்த்தாள். அங்கங்கள் ஒருமுறை பொங்கி மெலிவடைந்தன. "ஒருவருக்கும் தெரியாமலே தொடச்சொல்லி யாடை செய்தேன்; அவர் தொட்டார். பகவான் மட்டும் பார்த்துக் கொண்டிருந்தார்.

என்னுடையது என்று இறுமாப்படைந்து கொண்டிருந்த திரவியத்திற்கு முன் ஒரு மலை வளர்ந்து விட்டது. கூப்பிட்டேன். அழுதேன்; அவருக்குக் கேட்கவில்லை" என்று வாய் விட்டுச் சொல்லிப் புலம்பினாள். பழைய சம்பவங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வந்து வேதனை செய்தன. உடம்பு சோர மணலிலே சாய்ந்து விட்டாள். அப்பொழுது நதியைக் கிழித்துக்கொண்டு ஒரு படகு போய்க்கொண்டிருந்தது. அதிலே அனேகர் இருந்தார்கள். ஹரிஹரனும் இருந்தான். கரையிலே சோர்ந்து விழுந்தவள் தனது ஜீவனைப் பிணைத்து உலகை வெறுக்கச் செய்த பிரபா தான் என்பது அவனுக்கு எப்படித்தெரியும்?. இத்தனை கஷ்டங்களுக்குப் பிறகாவது அது அவனுக்குத் தெரியலாகாதா? விதி அதற்குச் சம்மதிக்கவில்லை. ஆனால் காரணம் இல்லாமலே அவளைப் பற்றி நினைக்கத் தொடங்கினான். கண்கள் கலங்கின. உலகமும் மங்கலாகத் தெரிந்தது. இருந்த இடத்திலே மெல்லச் சரிந்து விட்டாள். ஆத்ம சம்பந்தமான இந்த நிகழ்ச்சிகளை ஒருவராலும் கண்டு கொள்ள முடியவில்லை. படகின் வேகத்தால் ஏற்பட்ட மயக்கம் என்றே மற்றவர்கள் கருதினார்கள். ஆனால் கண்களில் நீர்த்துளிப்பதன் காரணம் ஒருவருக்கும் தெரியவில்லை. இதற்குள் படகும் ஓடி மறைந்து கொண்டிருந்தது.

# 5

**பி**றகும் எத்தனையோ வருஷங்கள் கழிந்துவிட்டன. ஹரிஹரன் இளமையும் அழிந்து கொண்டிருந்தது. அவனக்கு மணம் செய்து வைத்துவிட வேண்டுமென்று பிரயத்தனப்பட்டவர்கள், "பாவம்! அவனுடைய ஜீவன் துன்பப்படுகிறது. நாம் ஏன் இந்தக் கதைகளை எடுக்க வேண்டும்?" என்று மௌனமாக இருந்துவிட்டர்கள். அவனுக்கோ மங்கிக் கொண்டே போகிற இளமையைப்பற்றிய கவலை இல்லை. விரைவிலே மரணம் வந்துவிடப்போகிறதே







என்ற பயமும் இல்லை. எல்லா அநித்தியமாக இருந்தாலும் அவளைக் கண்டு விடலாமென்று கனவு கண்டு கொண்டிருந்தான். கல்கத்தாவில் இருக்கும்பொழுது பிரபா அனுப்பிய கடிதம் இன்னும் பத்திரமாகவே அவன் பீரோவில் இருந்தது. அதைப்பார்க்கும்போதெல்லாம் "இது அவள் கைப்பட்ட கடிதம் அல்லவா? அப்போது எவ்வளவு சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தாளோ?" என்று எண்ணங்களை வளர்த்துக் கொண்டே போவான். சில சமயங்களில் அந்தக் கடிதத்தை எரித்துவிடவும் நினைப்பான். பிறகு, "அது அவளைச் சுடுவதுபோலாகும்" என்று அஞ்சுவான். அவனுடைய முகத்திலே சந்தோஷத்தின் குறிகள் தோன்றியதைப் பல வருஷங்களாக ஒருவரும் காணவில்லை. அர்த்தமில்லாமலே பார்த்துப் பழகின அவன் கண்களிலே தான் அன்றைக்குச் சாந்தி அகப்பட்டாள். அந்தக் குழந்தையின் முகத்திலே அவனை ஆறுதல் செய்கிற ஒருமாய மந்திரம் எழுதியிருந்தது. வாய், கண், முகம், நடை எல்லாம் தன் உள்ளத்தை வாடவிட்டு மறைந்துபோன பிரபாவின் யாடையாகவே இருக்கக் கண்டான். பிறகு குழந்தையை அவள் வீட்டிற்கு அனுப்பியபோது தற்செயலாகக் கிடைத்த ஒரு வஸ்துவை இழந்து விட்டதுபோலவே துடிதுடித்து அயர்ந்து போனான். துணைக்கு அனுப்பிய மனிதன் திரும்பி வந்தவுடனே "அவளைப் பக்குவமாகக் கொண்டு போய் விட்டாயா? குழந்தை என்ன சொன்னாள்?" என்று நெடுகக் கேட்டான். அந்த வேலைக்காரனுக்கு இது பெரிய துன்பமாக இருந்தது. "அப்பா! உனக்கு அவள் வீடு தெரியும் அல்லவா? விடிந்தவுடன் கூட்டிக்கொண்டு வந்துவிடு" என்று சொல்லிவிட்டு படுக்கைக்கு ஹரிஹரன் போனான். அங்கே காதலின் சோகம் மரணத்தின் பயம் என்ற எல்லாமாகப் படுக்கையிலிருந்து அவனைத் துடிக்கச் செய்தன. நாழிகை செல்லச்செல்ல மயக்கம் கூட வந்து பிதற்றினான். வேலைக்காரனைக் கூப்பிட்டு "இப்பொழுதே வண்டியோடு போ; குழந்தையை அழைத்து வா ஓடு" என்று அவசரமாக அவனை அனுப்பினான்.

வேலைக்காரன் வண்டியோடு உடனே கிளம்பிவிட்டான். பொழுது புலருமுன் அந்த ஏழைகள் வசித்த கிராமத்திற்குள்ளே வண்டி போயிற்று. கிழக்கு வெளுப்பதற்குள், மங்கலான இருள் உலகத்தை மூடியிருந்தபொழுதே குடிசையின் வாசலில் வண்டிபோய் நின்றது. "அம்மா!" என்று வண்டிக்காரன் கூப்பிட்டான். "யாரது?" என்று ஒரு குரல் கேட்டது. பிறகு சாந்தியும் அவள் தாயும் வெளியே வந்தார்கள். "குழந்தையை எஜமான் கூட்டிவரச்சொன்னார் பிறகு கொண்டு வந்து விடுகிறேன்" என்றான் அந்த வண்டிக்காரன். பிறகு, "அம்மா! இவளை எஜமானுக்கே கொடுப்பீர்களா? எவ்வளவு வேண்டுமானாலும் தந்து விடுவார்" என்று தொடர்ந்து சொன்னார். இதைக் கேட்டுப் பிரபாவதி ஆத்திரப்பட்டாள். அதனால், "சாந்தி! நீ போக வேண்டாம்" என்று ஒரேயடியாகத் தடுத்துவிட்டாள். அப்பொழுது வண்டிக்காரன் மன்றாடினான். "அம்மா! எஜமானைப் பார்த்தால் அழுகை வருகிறது. நேற்றுக் குழந்தையோடுதான் அவர் சிரித்ததைக் கண்டேன். ராத்திரியெல்லாம் அவருக்குத் தூக்கம் இல்லை. "சாந்தி! எப்படியோ நீ என் பிரபாவைப்போலப் பிறந்துவிட்டாய். ஞாபகத்திற்காக உன்னையாவது உன் அம்மா எனக்கென்றே தரமாட்டாளா? அதற்காக என் செல்வம் முழுவதையுமே அவளுக்குக் கொடுக்கிறேன். என்று சொல்லி அழுதார்" என்றான். பிரபாவின் தலை சுழன்றது. அப்படியே ஸ்தம்பித்து விட்டாள்.

## 6

உலகம் சூரிய காந்தியாய் மலர்ந்து விட்டது. வண்டியும் மேடு பள்ளமான இடங்களைக் கடந்து ஒழுங்கான ஒரு பாதையிலே போய்க்கொண்டிருந்தது. வண்டிக்காரனுக்குப் பக்கத்திலே சாந்தி இருந்தாள். "அம்மா! அழாதீர்கள்; எல்லாம் விதியின்படி நடக்கிறது" என்று வண்டிக்காரனது குரல் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தது.





# தூமகேது

## 1

சம்பகம் சுகானந்தரது ஆசிரமத்துக்கு வெகு தூரத்திலேயுள்ள ஒரு கிராமத்திலே பிறந்தவள். தான் சுமந்து பெற்ற செல்வத்தைப் பார்க்காமலே அவள் தாயென்ற அருள் தெய்வம் கண்ணை மூடிவிட்டது. சில காலத்துள் தந்தையும் அதே வழியைப் பின்பற்றி நடந்து விட்டார். நிராதரவான அந்தக் குழந்தையை அதன் அத்தை முறையான ஒருத்தியே எடுத்து வளர்த்தாள். அது வளர்ந்து ஓர் உருவாவதற் குள்ளேயே, "பாவி! நீ பிறந்த உடனேயே மலைபோல இருந்தவர்களைப் புதைத்து விட்டாய். எப்பொழுது உன்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தேனோ அன்று முதல் இந்த வீடும் விடிந்தது போலத்தான். என் குழந்தைகளிலும் இரண்டைத் தின்றுவிட்டாள். தூமகேது தோன்றியதுபோல வந்து பிறந்தாயே" என்று அவள் அத்தை வாழ்த்தத் தொடங்கி விட்டாள். எல்லோராலும் வெறுக்கப்பட்ட ஒரு ஜந்துவாகவே அந்தக் குழந்தை வளர்ந்தது. அவள் பெரியவளானபின்பும் இரும்பு மனம் படைத்த மனிதர்களின் நடுவிலேயே இருந்துகொண்டு ஒவ்வொரு நிமிஷத்தையும் கழிக்க வேண்டியதாயிற்று. இப்பொழுதோ அவள் அத்தை முன்னைவிடக் கடினமாகவே நடந்து கொள்வாள்.

ஒருமுறை ஆதரவு அற்ற அந்த அபலையின் மனத்திலும் தைரியம் பிறந்து விட்டது. "அத்தை! எவ்வளவோ பிரயாசை எடுத்துப் பார்க்கிறேன். சாவு கூட என்னிடம் வரப் பயப்படுகிறது!" என்று சொன்னாள். இராட்சஷ உள்ளம் படைத்த அவள் அத்தைக்கு இந்த வார்த்தைகள் மேலும் மேலும் ஆவேசத்தைக் கிளப்பி விட்டன. "ஓஹோ! உனக்குச் சாவு வந்துவிட்டால் உலகமே அஸ்தமித்துவிடும் என்று நினைக்கிறாயா? அப்படி நிகழ்ந்து விட்டால் அது இந்தக் கிராமமே செய்த பாக்கியம் ஆகாதா?" என்று குத்திச் சொன்னாள். சம்பகம் எதிர் வார்த்தை ஒன்றும் பேசவில்லை. ஆனால் அன்று முழுவதும் அழுதுகொண்டேயிருந்தாள்.

அன்றைக்குத்தான் சுகானந்தரது ஞாபகம் அவளுக்கு வந்தது. அவ்வளவில் மனம் அங்கேயே லயித்து விட்டது. "ஆசிரமத்துக்குச் செல்லுகின்ற நீண்ட வழியைக் கடக்கமுடியாமல் மரணம் சம்பவித்தாலும், பவித்திரமான அந்த வழியிலே இறப்பதுமேல்" என்று உறுதிகொண்டு விட்டாள். அன்று இரவே உதயக்காலக் கோழியின் சத்தம் கேட்டதும் எழுந்து நடக்கத் தொடங்கினாள். உச்சிக்காலத்துக்கு முன்பே ஆசிரமத்துக்குக் கிட்டப் போய் விட்டாள். ஆனால் மிருதுவான அவள் கால்களால் மிகுதி வழியைக் கடக்கமுடியாமல் இருந்தது. வெயிலும் கடுமையாக வாட்டியது. பாதையோ செங்குத்தாகவே அப்பாற் சென்று கொண்டிருந்தது. அதனால் அடிபெயர்க்கமுடியாமல் பாறையொன்றிலே சாய்ந்து விட்டாள்.

அந்த நிலைமையிலேதான் நரேந்திரன் அவளை முதன்முதலாகக் கண்டான். அவள் அணிந்திருந்த உடையிலிருந்து ஒரு சிறுவனே களைத்து விழுந்துவிட்டான் என்று அவன் நினைத்தான். உடனே அவளை ஒரு துரும்புபோல எடுத்துக்கொண்டு செங்குத்தான அந்த மலைப்பாதையைக் கடந்து விட்டான். குளிர்ந்த சுனை நீரை அவள் முகத்திலே தெளித்ததும் மெல்லக் கண்களைத்







திறந்தாள். அரும்புகின்ற ரோமமும் உச்சியிலே முடியும் காவியுடையும் அணிந்து ஒரு பால்ய சந்நியாசி தன் முன்னால் நிற்பதைக் கண்டதும் "ஏழைகள் சகிக்கமுடியாத துன்பத்தை அடையும்போது பகவான் நேராகவே வந்து காப்பாற்றுவார் என்ற உண்மை என்னளவில் மெய்யாகி விட்டது" என்று பரவசமானாள். "சுவாமீ! அடியாள் கிருபை செய்த உலகத்தின் பதியே" என்று கண்ணீர் சோர அவன் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கப் போனாள். நரேந்திரன் அவள் கைகளைப் பிடித்துத் தடுத்து விட்டான். ஆனால் பிரமச்சாரியாகிய நான் இவளைத் தீண்டிவிட்டேனே என்று உள்ளம் கலங்கினான். உடனே அவளைச் சுவாமிகளிடம் அழைத்துச்சென்று ஒப்படைத்து விட்டான். இரண்டு ஆண்டுகள் ஆயின.

## 2

"**அ**ம்மா! நீயோ சிறு பெண். ஆசைகளை அடக்கி இந்திரிய ஜயம் பெறுவது சாமான்யமல்ல. சிலசமயங்களில் நானுமே தடுமாறினேன். ஏதோ அசந்தர்ப்பங்களினால் உன்னுடைய மனத்திலே வைராக்கியம் ஏறிவிட்டது. உலகத்தோடு கலந்து வாழ்வதென்பது கஷ்டமான காரியம் தான். ஆனால் வாழ்வை வெறுப்பது அதைவிடக் கடினமல்லவா? எத்தனையோ வருஷங்களாக விரதம் முதலியவற்றால் பக்குவமடைந்த மனமும் பருவத்தின் நினைப்புக்களான சுழல் வந்து மோதும்போது கணத்துக்குள் அள்ளுண்டு போய் விடுகிறது. கொஞ்சம் யோசித்துப் பார்".

"சுவாமீ! தாங்கள் சொல்வது வாஸ்தவமேயானாலும் உலக விஷயங்களில் இருந்து நீங்கி இருப்பதே லேசாக எனக்குத் தெரிகிறது. இந்த அற்ப காலத்துக்குள்ளேயே உலகத்தின் கோரமான இயல்புகளையெல்லாம் கண்டு கழித்துவிட்டேன். எத்தனையோ தடவை மரணத்தையும் தேடி ஓடினேன். விதி ஏனோ விட மறுத்துவிட்டது. இந்த அகன்ற உலகத்தில் கருணையோடு பார்க்கின்ற ஒருவரையும் நான்

காணவில்லை. ஏதோ ஜன்மாந்தரங்களிலே செய்த புண்ணியத்தினால் தங்களை அடைந்துவிட்டேன். தங்களை விட்டு என்னாற் போகமுடியாது."

"சம்பகம்! மறுபடியும் பிடிவாதமாகவே பேசுகிறாய். உண்மையில் உலகாநுபவம் உனக்குப் போதாது. நீ போகலாம் என்று நினைக்கின்ற பாதை முள்ளாலானது. திடசித்தமும் வைராக்கிய புத்தியுமுள்ள சிலரே அதில் போகலாம் என்று நினைக்கவே முடியும். அவர்களிலும் தவறி விழுகிறவர்கள் அநேகர். பிரம்மசாரிகளே வாழுகின்ற இந்த இடத்திலே உனது வருகை பெரும் புயலையே கிளப்பிவிடும். அதனால் உன்னை வெளியே தள்ளி விட நினைக்கின்றேனென்று கருதாதே. உன்னைப் போன்ற ஆதரவற்ற கோடிக்கணக்கான அபலைகளுக்கு உதவிசெய்யும் பாக்கியம் கிடைக்கவேண்டுமென்றே ஈசுவரனை வேண்டுகின்றேன்."

"சுவாமீ! நான் வளர்ந்த இடத்தில் அடைந்த துன்பங்களுக்கும் சிறுமைகளுக்கும் ஓர் எல்லைதேடியே இங்கு வந்து சேர்ந்தேன். மறுபடியும் எங்கே போகச் சொல்லுகிறீர்கள்? இதை விட்டுக் கிளம்பினால் யமபுரத்தைவிட எனக்கு வேறு புகலிடம் இல்லை."

"அம்மா! உனக்கு இவ்வளவு வைராக்கியம் ஏற்பட்டுவிட்டதா? உன் வார்த்தைகளைக் கேட்டு ஒரு வகையில் நான் சந்தோஷப்படுகிறேன். இனி நீ கலக்கப்படாமலே இரு. ஆனால் உனது வருகையினால் ஆசிரமத்துக்கு அழிவு வந்துவிடப்படாது."

"சுவாமீ! இந்தப் புனிதமான சேத்திரத்திற்கு எந்த விதத்தில் என்னால் அழிவு ஏற்பட்டுவிடக் கூடும்?"

வெகு காலத்துக்குப் பிறகும் நேற்று நிகழ்ந்தது போலவே இந்தச் சம்பாஷணை முழுவதும் அவள் நினைவிலே







தெரிந்து கொண்டிருந்தன. கடைசியாகச் சுவாமிகளுடைய வாயிலிருந்து, "உனது வருகையினால் ஆசிரமத்துக்கு அழிவு வந்துவிடக் கூடாது" என்ற வார்த்தைகள் பிறந்தபோது ஏற்பட்ட உணர்ச்சிகள் இன்றும் வந்து மறைந்தன. இருட்டிலே கலந்து மறைந்து கிடந்த மலைச்சாரல்களைப் பார்ப்பவள்போல ஏதோ வெளியிலே பார்வையைச் செலுத்திக்கொண்டிருந்தாள். அபரபட்சத்துப் பிரதோஷசந்திரனும் மரங்களுக்கூடாகக் கிழக்கே ஒரு கோடுபோலக் கிளம்பிக் கொண்டிருந்தான். நிலைகலங்கிச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாளே தவிர இத்தனை நேரங் கழிந்ததும் அவள் நினைப்பிலே தெரியவில்லை. கிழக்கு வானகத்தின் எல்லையிலே மங்கிக்கொண்டு நின்ற பிறைக்கோட்டை மறுபடியும் ஒரு முறை பார்த்துவிட்டு ஒரு பெருமூச்சு விட்டாள். அப்போதுதான் உதய காலத்தைக்கண்டு மகிழ்கிற பட்சிகளின் இனிய கீதம் தூரத்திலிருந்து வருவதுபோலச் சிறிது சிறிதாக அவள் காதிலே வந்து விழுந்தது. சமுத்திரம்போலக் குமுறிக் கொண்டிருந்த உள்ளத்திலும் ஓர் அமைதி நிலைகொள்ளத் தொடங்கியது. நித்திரையும் மெல்ல வந்து கண்களை மருவப் படுக்கையிலே சரிந்து கிடந்தாள்.

## 3

**நி**ர்மலமான ஆகாயம். சந்திர பிம்பம் அம்ருதப்பிரவாகம் போல நிலவை எங்கும் சொரிந்து கொண்டு இருந்தது. விருட்சங்களின் முகடுகளிலே இருந்த வெள்ளை மலர்கள் பிரகாசித்தன. உலகத்தைக் காமதேவனின் சிருங்கார மாளிகை போல இயற்கைத் தேவி ஜோடித்துக் காட்டிக் கொண்டிருந்தாள். அதன் நடுவிலே நரேந்திரனோடு சம்பகமும் நின்றாள். நரேந்திரன் மெதுவாக வாய் திறந்து பேசத் தொடங்கினான்; "சம்பகம்! கொடிய மிருகங்கள் சூழ்ந்த வனத்தினிடையிலே பொழிகின்ற சந்திரிகையின் லாவண்யம்போலவும், பயங்கரமான சமுத்திரத்தின் நடுவிலே

தனிமையிலே எழும்புகின்ற நாதசௌந்தர்யம் போலவும் உன்னுடைய அழகை அனுபவிக்க முடியாமல் வெகு காலம் கஷ்டப்பட்டேன். உன்னைப் பார்க்கும்போதும், உனது இருதயத்தின் குழைவை உணரும்போதும் பீறிக்கொண்டு எழும்புகின்ற என் உணர்ச்சிகளை இஷ்டம்போல உடைந்து ஓடவிடாமல் அடக்கி அடக்கி உயிரழிந்துபோனேன். அந்தக் காலம் பழங்காலமாகி மறைந்து வருகிறது. சுவாமிகளுக்கு முன்பு இருக்கும்போது கூட உன் கண்கள் சொல்லும் இரகசியங்களை நான் உணர்ந்து கொள்ளாமலா இருந்துவிடுகிறேன்? நீ ஸ்நானத்திற்கு சுனைக்கு வரும்பொழுது வனவிலங்குகளால் உனக்கு யாதொரு துன்பமும் நேர்ந்துவிடாமல் நான் காத்து வருவதை நீ அறிந்திருக்க வில்லையா? எனது தவ விரதத்திற்குப் பங்கம் வந்துவிடக் கூடாது என்று நீ பயப்படுகிறாய். ஆனாலும் மணம் செய்து கொள்வது தர்மத்திற்கு விரோதமானது என்று யார் தான் சொல்ல முடியும்? "என்னால் யாருக்குமே தீமை ஏற்படாதபடி காத்துக் கொள்கிறேன்" என்று சுவாமிகளுக்குச் சொன்ன வார்த்தைகளை நினைத்துத் தானே கதிகலங்குகிறாய்? ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலே ஏற்படுகின்ற சம்பந்தம் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டது. அதுவே பிரகிருத்தியின் உண்மையான தத்துவமாகவும் இருக்கிறது. பெரிய மகரிஷிகளும் மணம் செய்து கொண்டு இயற்கை அன்னையின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்துகொண்டு வாழவில்லையா? வேதாகமங்களிலும் ஸ்மிருதிகளிலும் மணம் செய்து கொள்வது பாவம் என்று சொல்லப்பட்டிருக்கிறதா? உண்மையானதும் இயற்கைக்குக் கட்டுப்பட்டதுமான ஒரு வழியிலே செல்லுவதைச் சத்தியத்திற்கு மாறு என்று எதற்காக கருதுகிறாய்? சுவாமிகள் கோபிக்கமாட்டார். நீயோ அவருடைய குழந்தைக்குச் சமானம். சம்பகம்! ஏன் பேசாமல் நிற்கிறாய்? உன்னை மறந்துவிட வேண்டுமென்று கடினமான விரதங்களையும் அனுஷ்டித்துப் பார்த்து விட்டேன். உயிரோடு சம்பந்தப்பட்டிருக்கின்ற தொடர்பு, கேவலம் இந்த வெறும்







சடலத்தை மட்டும் வாட்டுவதனால் அழிந்து விடுமா? முடியாது: முடியவே முடியாது. இதோ பேசுகின்ற என் இருதயத்தைத் தொட்டுப் பார்" என்று சொல்லிக்கொண்டே அவளைத் தன் இருகரங்களாலும் அணைத்துக் கொண்டான்.

அவள் இன்னும் மௌனமாகவே நின்றாள். ஆனால் உள்ளத்தில் மட்டும் ஆயிரக்கணக்கான எண்ணங்கள் சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தன. திடீரென்று அவள் கண்கள் வானத்தைக் கூர்ந்து பார்த்தன. உடம்பு நடுங்க எண்ணங்கள் சுழல, "அதோ அந்த வானத்தில்" என்று சுட்டிக்காட்டியபடியே நின்றாள். நரேந்திரனும் உற்று நோக்கினான். அடிவானத்தைப் பூமி தொடுகின்ற மேற்கு மூலையிலே ஒரு பிரபையான நட்சத்திரம் தெரிந்தது. அதன் சோதியும் வளர்ந்து கொண்டே போக மேலே மேலே அது நகர்ந்தது. கணத்துள் உச்சி வானத்துக்கு வந்துவிட்டது. ஆனால் அதன் வால் இன்னும் அடிவானத்திலே தொட்டுக் கொண்டு நின்றது.

அவள் அப்படியே கண்களை இறுக மூடிக்கொண்டு, "பிராணபதே" என்று சொல்ல வாயெடுத்தாள். அவ்வளவோடு ஆழ்ந்த அந்தக் கனவு நிலையிலிருந்தும் விழித்துக் கொண்டாள். நரேந்திரனை அங்கே காணவில்லை. காலைச் சூரியன் பொன்வட்டில் போல மலையின் கீழ்க் கோடியில் இருந்து எழுந்து கொண்டு இருந்தான். உலகம் பழையபடியே சப்தமயமாக விளங்கியது. வெளி ஞாபகங்களின் ஒரு துளி கூடக் கலக்கவிடாதபடி உதய காலத்திற்கண்ட அந்தக் கனவே அவளது உள்ளத்தில் நிறைந்திருந்தது. இன்னதென்று சொல்லமுடியாத ஓர் இன்பமும் பயமும் அதிலே கலந்து இருப்பதாக உணர்ந்தாள். படுக்கையை விட்டு எழுந்தவள் அந்த இடத்தை விட்டு சிறிதும் நகராமலே உட்கார்ந்திருந்தாள். "சம்பகம்! இத்தனை நேரமாகியும் தூக்கம் கலையவில்லையா? சுனைக்கரையில் வருவாய் வருவாய் என்றிருந்தேன்" என்ற நரேந்திரனின் வார்த்தைகள் அவளுடைய காதுகளிலே வந்துவிழுந்தன. மெல்ல எழுந்து வெளியே வந்தாள். நெடு

நேரம் மட்டும் நித்திரையின்றி சிவந்து வீங்கியிருந்த அவள் கண்களைக் கண்டதும், "உனது உடம்புக்கு என்ன?" என்று கேட்டான். அதற்கு, "ஒன்றுமில்லை" என்றாளே தவிர உள்ளத்தின் அதிர்ச்சிகளை மறைக்க முடியாமலே நடந்து கொண்டிருந்தாள். அப்பொழுதுதான் சுவாமிகளும் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவராய் அப்பக்கத்திலே சென்று கொண்டிருந்தார்.

## 4

**அ**ன்றைக்கு நடுப்பகலாகிவிட்டது. சூரியன் தீப்பொறியை அள்ளி வீசிக் கொண்டு நின்றான். மலைப்பாறைகளும் பொரிந்து துள்ளி எழுந்து பறந்தது. பெரிய விருட்சங்களும் வாடிப் போய் நின்றன. எங்கும் நிலவிலிருந்த நிசப்தத்தின் நடுவிலே அருவியொன்று சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது. நரேந்திரனும் அவளும் சுனைக்கருகிலே சரிந்து நின்ற ஒரு வேங்கை மரத்தின் கீழ் இருந்தார்கள். வார்த்தைகள் ஒன்று இரண்டாகவே ஒவ்வொருவர் வாயிலிருந்தும் கிளம்பிக் கொண்டிருந்தன. தான் அன்று கண்ட கனவைச் சொல்ல வேண்டுமென்ற ஆசை அவளைத் தூண்டியது. ஒருமுறை வாயெடுத்துவிட்டு ஏதோ பயந்தவள்போல மௌனமாக இருந்துவிட்டாள். நரேந்திரன் அவளது முகத்திலே தோன்றிய மாறுபாட்டைக் கண்டபிறகும் தொடர்ந்து பேசிக்கொண்டே போனான். "சுவாமிகள் அவசரமாகக் கிராமத்துக்குப் போய் விட்டார். ஆனால் என்னிடமும் ஒன்றுமே சொல்லிக்கொள்ளவில்லை. என்னுடைய மனத்திலும் வாழ்விலும் ஏற்படுகின்ற மாறுபாட்டைக் கண்டு அவர் மனத்தில் வேதனை பிறந்துவிட்டதோ என்று பயமாக இருக்கிறது. ஆனாலும் இதில் என்ன பிசகு? இதோ பார்! என் உள்ளத்தில்..." என்று ஏதோ சொல்ல வாயெடுத்தான். அப்போது அந்த வேங்கை மரத்தின் உச்சியிலே இருந்த ஒரு பட்சி பயங்கரமாக அலறிக்கொண்டு பறந்து சென்றது.







அவ்வளவில் அவன் வாயும் அடைத்துவிட்டது. ஏதோ சிந்தித்தபடியே பலநாழிகைவரையிலும் அவர்கள் மௌனமாகவே இருந்துவிட்டார்கள். அதன் பிறகே அவன் தன் எண்ணத்தைச் சொல்லிக்கொண்டிருந்தான். அவளும் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டே மலையடிவாரத்தை நோக்கிச் செல்லும் பாதையைப் பார்த்தாள். சுவாமிகள் வேகமாக வந்து கொண்டிருப்பது நன்றாகத் தெரிந்தது. தலையை நிமிர்த்தினாள். அவனோ தூரத்திலே வானத்தைத் தொட்டுக்கொண்டு நின்ற மலையின் கொடுமுடியைப் பார்த்தபடியே பேசிக் கொண்டிருந்தான். "சுவாமிகள் வந்து கொண்டிருக்கிறார்" என்று அவள் சொன்னதும் பேச்சை நிறுத்திவிட்டான். "புறப்படு, ஆச்சிரமத்துக்குப் போவோம். இரவு பதினைந்து நாழிகைக்குச் சந்திக்கிறேன்." என்று சொல்லிவிட்டு விரைவாக எழுந்து நடந்தான். அவளும் அச்சத்தோடு அவன் அடிச்சுவடுகளைப் பின்பற்றிச் சென்றாள்.

பொழுது மேற்கே சாய்ந்து கொண்டிருந்தது. "நரேன்!" என்று கூப்பிட்டுவிட்டுச் சுவாமிகள் நடந்தார். அவன் சுவாமிகளைப் பின் தொடர்ந்தான். நாழிகைகள் கழிந்து கொண்டிருந்தன. ரவியும் மறைந்து விட்டான். இதுவரையிலும் சுவாமிகள் ஒன்றுமே பேசவில்லை. அவனோ வாய் திறக்காமலே அவரைத் தொடர்ந்து கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய இருதயத்தின் அடியிலே என்றைக்கும் கேட்டிராத ஒரு பறையொலி கேட்டுக் கொண்டிருந்தது. அடிக்கடி எழுந்த பெருமூச்சுக்களை அடக்கி அடக்கி மெல்ல விட்டுக் கொண்டே நடந்தான். பிறகும் வெகு நேரம் சென்றுவிட்டது. ஒருவருடைய உருவம் மற்றவருக்கு ஒரு நிழல் போலத் தெரிகிற அளவிற்கு உலகம் இருண்டு விட்டது. சுவாமிகள் திடீரென்று திரும்பி ஆச்சிரமத்தை நோக்கி நடந்தார். இப்பொழுது அந்த நடையிலே ஒரு வேகமும் கடினமும் கலந்திருந்தன.

"நரேன்! எனக்குப் பிறகு ஆச்சிரமப் பொறுப்புக்களை

உன்னிடமே ஒப்படைக்கலாம் என்று எண்ணியிருந்து விட்டேன்" என்று சொல்லி விட்டுக் கலகலவென்று சிரித்தார். அடுத்த கணம் அவருடைய சிரிப்பு மறைந்து விட்டது. ஆனால் அவர் முகத்திலே படர்ந்திருந்த கோரமான சாயையை அவனுக்குத் தெரியவிடாமல் இருள் மறைத்து விட்டது. நரேந்திரன் கலங்கிப்போய் அவர் பின்னாலே ஓடிக்கொண்டிருந்தான். அவரோடு பேச வேண்டுமென்ற எண்ணம் லவலேசமும் அவனுக்கு இல்லை. அதற்குள் அவர் தமது இருக்கைக்குச் சென்று விட்டார்.

நரேந்திரன் தனியாகவே நின்றான். அந்த இருளிலே வெகு நேரம் அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருந்தான். பிறகு உடம்பிலே சோர்வு பிறந்துவிட்டது. போய்ப்படுத்தான். நித்திரையே வரவில்லை. சுவாமிகள் கோபத்தை அந்தச் சில வார்த்தைகளே வெளிப்படுத்திவிட்டன என்பதை அவன் மறந்து விடவில்லை. கோபத்தின் வேகத்தாற் பொலிகின்ற ரௌத்திராகாரமான சுவாமிகளது ரூபத்தை அவன் மனம் கற்பனை செய்து பார்த்தது. உடனே உலகமே இடிந்து போவதுபோல் கலங்கினான். இதற்கிடையில் "வருகின்றேன்" என்று அவளிடம் சொன்ன வார்த்தைகளையும் அவனால் நினைக்க முடியவில்லை. உள்ளத்திலேயே ஏங்கிக் கொண்டிருந்த புலமையின் ஜீவநாடி அறுந்தபோது கவி எப்படி நினைப்பின்றி இருப்பானோ அப்படியே நரேந்திரனும் இருந்துவிட்டான்.

## 5

**வெ**கு நாட்களுக்குப் பிறகே அவளுடைய கண்களை ஆழ்ந்த ஒரு சுகநித்திரை அணைத்து மகிழச்செய்தது. "மற்றவர்களது அழிவுக்குக் காரணமாகவே என்னைக் கடவுள் படைத்திருக்கறார்" என்று அவள் மனத்தில் அழியாமல் இருந்த எண்ணமும் அந்த மௌனசுகத்திலே மறைந்து விட்டது. நடுநிசிவரையும் அப்படியே துயில் கொண்டிருப்பாள்.





அதற்குள் நரேந்திரன் உள்ளே நுழைந்தான். அவனுடைய கால் ஓசையைக் கேட்டு எழுந்தவள் "எதற்காக இங்கே வந்தாய்?" என்றே கேட்டாள். அவன் வாய் திறவாமலே நின்றான். "சம்பகம் ஆச்சிரமத்தைக் கெடுத்து அழித்துவிடப் போகிறாய்" என்று சுவாமிகளின் கோபக்குரல் வெளியிலிருந்து கேட்பதுபோல உணர்ந்தாள். உள்ளே மங்கி எரிந்து கொண்டிருந்த அகல் விளக்கும் அணைந்து விட்டது. சிறிது நேரத்திற்குள் வேங்கை ஒன்று அந்தப் பக்கத்தால் உறுமிக்கொண்டு ஓடுகிற பயங்கர ஓசை கேட்டது. எங்கும் நிறைந்த அந்தகாரத்துக்குள்ளே நரேந்திரன் குருடன் போல அவளைத் தேடித் தேடி அலைந்துகொண்டிருந்தான்.

# இரண்டு ஊர்வலங்கள்

மரணத்தோடு போராடிக் கொண்டிருந்த சமயத்திலும் விதி அவளுடைய படுக்கையில் அந்த அரச மரத்தடியில் இருந்து மாற்றி வைக்க விரும்பவில்லை என்றே சொல்ல வேண்டும். அவளுக்குப் பக்கத்தில் ஸ்வாமி மட்டும் உட்கார்ந்திருந்தான். சற்றுத் தொலைவில் ஒரு கிழவன் விழுந்து கிடந்தான். மற்றவர்களை அங்கே காணவில்லை. ஸ்வாமி அடிக்கொரு தரம் அவளைக் கூப்பிட்டுப் பார்த்தான். ஒருவேளை பிரக்ஞையற்றுக் கிடக்கும் அந்தப்பெண் திடீரென்று எழுந்திருந்து பேசுவாள் என்று எண்ணினான் போலும்!

இப்படியாகிவிடும் என்று அவன் கனவிலும் எண்ணியிருக்கவில்லை. சாயந்தரம் எல்லாம் படுத்தபடியே கிடந்தாளேனும் நன்றாகப் பேசினாள். அப்படி வெகுநேரமாக அவளுடன் பேசிக்கொண்டு இருந்துவிட்டு 'இன்றைக்குக் கொஞ்சம் கஞ்சி வைத்து கொடுக்கட்டுமா' என்று கேட்டுக்கொண்டே எங்கோ ஓடிப்போய், கொஞ்சம் அரிசியும் கொண்டு வந்தான். அப்பொழுதும் அயர்ந்து கிடப்பதுபோலவே அவள் காணப்பட்டாள். ஆனால் கஞ்சியை வைத்துக் கொண்டுவந்து எழுப்பிப் பார்த்தபொழுதோ .......!

வழக்கம்போல அங்கே வந்து விழுந்து கிடக்கும் மற்றப் பிச்சைக்காரர்கள் எல்லோரும் அன்று அந்நகரத்துப்





பிரபு ஒருவருடைய பெண்ணின் கல்யாண வைபவத்தைப் பார்க்கப் போய்விட்டார்கள். எல்லா ஜனங்களுக்குமே அது ஒரு ஆனந்தமான சம்பவமாக இருக்கும்பொழுது, சாதாரணமான அந்த ஏழைகளுடைய நிலையைச் சொல்ல வேண்டியதில்லை. ஆயிரக்கணக்காக ரூபாய்களைச் செலவு செய்து கொட்டகைகள் போட்டு அலங்காரங்கள் செய்திருந்தார்கள். வாத்தியக்காரரும் மற்றும் வித்துவான்களும் பல தேசங்களிலிருந்து வரவழைக்கப்பட்டிருந்தார்கள். நண்பர்கள் என்றும், பந்துக்கள் என்றும் வந்து குவிந்த கும்பலே பார்ப்பதற்கு அதிசயமாக இருந்தது. இந்தக் காட்சிகளைப் பார்ப்பதை விட்டு, இருள் சூழ்ந்த அந்த மரத்தடியிலே விழுந்த கிடக்க யார் தான் விரும்புவார்கள்? அல்லாமலும், அவள் சுகமாகக் கிடந்ததை நேராகப் பார்த்து விட்டே அவர்கள் மாலையில் அங்கே ஓடிச் சென்றார்கள். ஆனால், ஸ்வாமியும் அந்தக் கிழவனும் அவளை விட்டுப் போக விரும்பவில்லை.

ஸ்வாமி கொஞ்ச நாட்களுக்கு முன்பு தான் இந்தக் கூட்டத்தார்களோடு வந்து சேர்ந்தான். அதற்கு முன்பெல்லாம் உணவுக்காகத் தேசாந்தரஞ் செல்லும் பறவைகள் போல எங்கெங்கோ சுற்றி அலைந்து கொண்டிருந்தான். அப்பொழுது நிரந்தரமாகச் சில மாதங்களுக்கேனும் அவன் ஒரு இடத்தில் நிலைத்து இருந்ததில்லை. இங்கு வந்த பிறகே இயல்பான அவனுடைய பழக்கம் மாறியது. உயர்ந்த அந்தஸ்துக்களில் இருந்து கொண்டு வாழுகிற மனிதர்களை விட இந்த கூட்டத்தவர்களிடம் அமைந்திருந்த அற்புதமான இயல்புகளே அப்படி அவனை ஓட விடாமல் தடுத்து வைத்திருந்ததென்று சொல்ல வேண்டும்.

காலையிலே அவர்கள் இந்த இடத்தை விட்டுத் தனித்தனியாக ஒவ்வொரு திசையால் போவார்கள். மாலைக்காலமானதும் திரும்பி வந்து கூடுவார்கள். எல்லோரும் வந்து சேர்ந்ததும், 'இன்றைக்கு யாராவது வயிற்றுக்கு கிடைக்காமல் வந்தீர்களா' என்று விசாரித்து,

வைத்திருக்கிறவர்கள் மற்றவர்களுக்குக் கொடுத்து உதவுவார்கள். பிறகு எல்லோருமே சேர்ந்து கொண்டு தங்கள் துன்பங்களை மறந்து சிறு குழந்தைகள் போல விளையாடுவார்கள்: பாடுவார்கள். இந்தச் சமயங்களிலெல்லாம் அவள் எல்லோருடைய கண்களின் முன்பும் நிற்பாள். அவளுடைய ஒவ்வொரு செய்கையும் மற்றவர்களை வசீகரித்து ஒரு புதுமையின் சுகத்தில் ஆழ்த்திவிடும். அவளுக்கு யாரிடமும் வித்தியாசம் பாராட்டி நடக்கவும் தெரியாது, எல்லையற்ற இருட்கடலிலே தோன்றிய லட்சிய தீபம் போலவும், பரந்த பாலைவனத்தின் நடுவிலே கிடந்த அமிர்த மயமான தடாகம் போலவும் அவர்களது ஆழ்ந்த துயரநிலையில் அவள் ஒரு தன்னம்பிக்கையை உண்டுபண்ணிக் கொண்டிருந்தாள். அதாவது, வாழ்விலே சிரித்துப் பழக்கமில்லாத அந்த ஏழைகளை அவளுடைய ஒவ்வொரு செய்கையும் தங்களை மறந்து ஆரவாரம் செய்யும்படி உற்சாகமூட்டிக் கொண்டிருந்தது. சில சமயங்களிலே அவள் ஒரு "தர்பார்" நடத்துவதுண்டு. ஸ்வாமி முதன்முதல் அங்கே வந்த அன்றைக்கும் அது நடந்தது. எல்லோரும் அவளைச் சுற்றி உட்கார்ந்தார்கள். அவளுடைய கண்கள் நாலா பக்கமும் ஒருமுறை சுற்றி வந்தன. புதிதாக அன்றைக்கே வந்து சேர்ந்த ஸ்வாமியைக் கண்டதும், "ஓகோ! நமது கூட்டத்துக்குள் உத்தரவில்லாமலே யாரோ ஒரு புதியவன் வந்து நுழைந்து விட்டதாக தெரிகிறதே! உடனே அந்த மனிதனைப் பிடித்து வந்து என் முன்னால் நிறுத்துங்கள்." என்ற கட்டளை பிறந்தது. ஸ்வாமி சிரிப்பை அடக்கிக் கொண்டு, "நானே வந்து விடுகிறேன்" என்று சொல்லியபடி அவளுக்கு முன்னால் வந்து நின்றான்.

"வேண்டுமானால் உத்தரவில்லாமல் வந்து புகுந்த குற்றத்தை மன்னிக்கிறோம். ஆனால், மன்னிக்க முடியாத வேறொரு குற்றம் உண்டு.!"

"புதியவனானாலும் கட்டளைப்படி நடக்க உத்தரவை எதிர்பார்க்கிறேன்.'







"நமது கூட்டத்துள் நுழைகிற எந்த ஆசாமியும் குறைந்த பட்சம் இரண்டு மூன்று கிழிசல் இல்லாத உடையை உடுத்திருக்கலாகாது. நீ அதற்கு மாறாக நடந்து விட்டாய் அல்லவா? ஏன், நீங்களே சொல்லுங்கள், தண்டிக்காமல் விடலாமா?".

"விடமுடியாது: விடமுடியாது!" என்று ஏக காலத்தில் பல குரல்கள் எழுந்து கேட்டன. அவ்வளவில் அவன், "உங்களுடைய சட்டம் தெரியாமல் இந்த அபராதத்தைச் செய்து விட்டேன். இதோ நானாகவே கிழித்து விடுகிறேனே" என்று சொல்லியபடி கிழிப்பதற்குத் துணியைப் பிடித்தான். உடனே, "மன்னித்துக்கொண்டோம்; இனிமேல் இவ்விதமான பிழைகள் வராமல் பார்த்துக் கொள்ளல் வேண்டும்" என்ற தீர்ப்புக் கூறப்பட்டது.

அதோடு அன்றைய நியாய சபை கலைந்து விட்டது. பிறகும் வெகுநேரம் வரை பேசிக்கொண்டிருந்துவிட்டு, ஒவ்வொருவராக அங்கங்கே விழுந்து தூங்கி விட்டார்கள். ஸ்வாமி மட்டும் ஒரு புறத்தில் கிடந்து யோசித்துக் கொண்டிருந்தான். அவனுடைய உள்ளத்தில் என்றைக்குமே கண்டிராத ஒரு இன்ப வெள்ளம் கரைபுரண்டோடிக் கொண்டிருந்தது. அதனால் அன்று வெகுநேரத்தின் பிறகே அவனுக்கு நித்திரையும் வந்தது. தினமும் அவர்களுடைய வாழ்வு இப்படியே இருந்ததால், நாளைக்கு என்ற விசாரம் யாரிடமும் இருந்ததில்லை. உணவு கிடைத்தலும் கிடைக்காவிட்டாலும் ஒரே மாதிரியே சலனமற்ற நிலையில் காணப்பட்டார்கள். எந்த நிலையிலும் தங்களைத் தேற்றிக் கொள்ளக் கூடிய ஒரு வீரம், அவர்களது பிறப்புரிமையானது என்று கூடச் சொல்லலாம். எல்லோராலும் ஒதுக்கித்தள்ளப்பட்டபோதிலும், அவர்களிடம் தன்னம்பிக்கை இருந்தது. மானமற்ற ஈனப் பிச்சைத் தொழிலையே செய்தாலும், அவர்களே அந்த மானத்தின் உயிர் நிலையாக இருந்தார்கள் எனலாம். வாழ்க்கையின் சுகங்களைக் கனவிலும் காணாமல்

துன்பச் சுழல்களில் அடியுண்டும், நிமிர்ந்தும் நிற்கும் அவர்களைப் போன்று மனிதரது மூச்சிலிருந்தே புது யுகத்தின் உயிர் தோன்றப்போகிறதல்லவா?

இந்த இடத்தில் ஏற்பட்ட கூட்டுறவை ஸ்வாமி தனக்குக் கிடைத்த ஒரு பாக்கியமாகவே கருதினான். மற்றவர்களை விட அவனுக்கு உயர்ந்த ஒரு அந்தஸ்து கிடைத்தது. அதுவும் அவளுடைய கடாட்சத்தினாலேயே கிடைத்தது என்று சொல்ல வேண்டும். வாழ்க்கை என்னும் முள் நிறைந்த பாதையிலே காலமெல்லாம் நடந்ததில் சலிப்படைந்த அவனுக்கு அவள் ஒரு மருந்தாகவே விளங்கினாள். ஒரு நாள் அவர்களது சம்பாஷணைக்குள் இந்த பிச்சை எடுக்கிற தொழிலைப்பற்றிய பேச்சும் வந்தது. அப்போது அவள் தன் மனத்தில் வெகுகாலமாக வேரூன்றி இருந்த இந்த அபிப்பிராயத்தையும் சொன்னாள்.

"வெட்கமின்றி எல்லோரிடமும் யாசிக்கின்றோம். வயிற்றுக் கொடுமையினாலேயே கேட்கிறார்கள் என்று எண்ணாமல் ஜனங்களும் வாய்க்கு வந்தபடி திட்டுகிறார்கள். கடவுள் தந்த உடம்பு இருக்கும்போதாவது வேலை செய்து இந்த வயிற்றை நிரப்பக் கூடாது என்று அடிக்கடி தோன்றுகிறது".

சிறிது நேரம் வரை சும்மா இருந்துவிட்டே அவன் பதில் சொன்னான்:

"நீ சொன்னதைப்பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். உண்மையில் அது நல்லது தான். ஆனால்.... எல்லோருக்கும் வேலை கிடைப்பது, பிறகு வேலைக்குக் கூலி கிடைப்பது - இவையெல்லாம் எனக்குப் பெரிய பிரச்சனைகளாகவே தோன்றுகின்றன."

அவள் இதைக் கேட்டதும் ஒரு மாதிரி சிரித்துக்கொண்டு "நீங்களும் ஒரு பெரிய கோழை என்றே சொல்வேன்; ஆனால், உங்களைப் பார்க்கும்போது அப்படிச் சொல்ல முடியவில்லை." என்றாள்.







'அநுபவம் இல்லாத ஒரு பெண் சொல்லக்கூடியதைத்தான் நீயும் சொல்கிறாய்.'

'என்ன? உலகத்தில் வேலை கிடைப்பது என்பது பெரிய பிரச்சனையா? நன்றாகச் செய்கிறவர்களை எல்லோருமே வரவேற்றத் தயாராக இருக்கிறார்கள்.'

'சரி; நான் இன்றையிலிருந்தே அப்படியே செய்கின்றேன். ஆனால் நீ .... '

'நானும் அப்படித்தான் செய்வேன்'

'அதற்கு நான் சம்மதிக்க மாட்டேன்.'

'அப்படியானால் நான் நெடுகிலுமே பிச்சை தான் எடுக்கவேண்டுமாக்கும்?'

'எனக்குக் கிடைப்பதில் ஒரு பகுதியைக் கொடுக்கிறேனே!'

அவனைப்பற்றி நன்றாகத் தெரிந்திருந்தும் இதைக் கேட்டவுடன் கொஞ்சம் யோசித்துவிட்டே, 'என்ன?' என்று கேட்டாள்.

'நான் வெகுகாலமாக கூலி வேலை செய்து சீவித்த ஒருவன் என்பதை நீ ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். முதலாளிகள் என்று இருக்கிறவர்கள், ஓயாமல் வேலை வாங்கிக்கொண்டும், அதற்குரிய சம்பளத்தை கொடுப்பார்களா? மனிதனிடம் நியாயப்படி கொடுக்கிற மனம் இருந்தால் ஒருவனும் கோடீஸ்வரனாய் வந்திருக்க முடியாது. பத்து ரூபா செலவு செய்யவேண்டிய ஒரு வேலையை, பத்துப் பணத்தோடு செய்கின்ற ஒருவனையே ஒவ்வொரு மனிதனும் தேடிக் கொண்டிருக்கிறான் என்பதை நீ அறிவாயா? அந்தக்காலத்தில் வேலை செய்து செய்து எலும்பாகி சாகிற நிலைக்கு வந்துவிட்டேன். பிறகு, வேலை செய்யவும் முடியாது போய்விடவே இந்த பிச்சை எடுக்கிற தொழிலில் இறங்கினேன். என்னுடைய இந்த அநுபவத்தைக் கொண்டே 'நீ செய்ய வேண்டாம்' என்று தடுத்தேன். உன்னாலும் அப்படிப் பாடுபட முடியாது.'

'எப்படியிருந்தாலும் ஒவ்வொருவரும் தங்கள் வயிற்றுக்கு தாங்கள் தானே பாடுபட்டுத் தீர வேண்டும்?'

'உண்மைதான்: ஆனால், ஒரு குழந்தை தன் சாப்பாட்டிற்கு சம்பாதித்தேயாகவேண்டும் என்று அதன் தாய் - எவ்வளவு ஏழையானாலும் - விரும்புவாளா?'

அவளுக்கு இந்த வார்த்தைகள் ஒரு வித இன்பம் கலந்த மயக்கத்தையே உண்டு பண்ணின. ஆயினும் சாதுரியமாகப் பதில் சொன்னாள்:

'தானே பாடுபட்டு கொடுக்கும் பருவம் வந்தபிறகும், வாழ்க்கையிலே அடிபட்டு சோர்ந்து போன ஒரு தாயிடம் எதிர்பார்ப்பது எந்தப் பிள்ளைக்கும் ஏற்றதல்ல. அல்லாமலும், தன் குழந்தைக்கு சம்பாதிக்கத்தக்க பருவம் வந்தபிறகும், அடைத்து வைக்கிற ஒவ்வொரு தாயும் தன் குழந்தைக்கே பெரிய தீமை செய்தவளாகிறாள்.'

'நியாயம் வேறு; தாயினுடைய உள்ளம் வேறு. அது சட்டங்களுக்குள் கட்டுப்படக் கூடியதுமல்ல.'

மேலே அவளால் ஒன்றுமே பேச முடியவில்லை. உண்மையான அன்பு கனிந்த அவனது முகத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதிலே கூட அவள் ஆனந்த மடைந்தாள். இதுவரை காணாத ஒன்றைக் கண்டது போல அவளுடைய உள்ளம் உள்ளே குமுறிக் கொண்டிருந்தது. பாவம் அவளுக்குத் தன் தாயின் அன்பு கூட இப்படித்தான் இருக்கும் என்று தெரியாது. அதனாலேதான் புதிதாகக் கிடைத்த அந்த இனிமை அவளுக்கு அமிர்தமாகவே தெரிந்தது. அவனும் உள்ளபடி ஒரு தாயின் ஸ்தானத்தில் இருந்துகொண்டே தன் உள்ளத்தைக் காட்டினான். ஆயினும் அது இன்ன பாதையிலே தான் ஓடிவருகிறதென்று அவளால் நிதானிக்க முடியவில்லை.

இயற்கையிலே துள்ளி விளையாடும் சிறுவர்கள் போன்ற அவளுடைய சுபாவம் நாளடைவில் அடங்கிவிட, ஒருவித அமைதியான நிலை தானாகவே தோன்றி நிலைத்துவிட்டது. அவளிடத்துத் தோன்றிய இந்த மாறுதல்





மற்றவர்க்குக் கூட ஆச்சரியத்தையே உண்டுபண்ணியது. அந்தக் கிழவன் மட்டும் "அம்மா நீ அவனோடு சுகமாக வாழ்வதைப் பார்த்துவிட்டுத்தான் நான் சாகவேண்டும்" என்று அடிக்கடி வெளியாகத் திறந்து சொல்லுவான். முதலில் "தாத்தா! உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?" என்று கேட்டவள் வரவரச் சிரித்து மௌனமானாள். நியாயமின்றி மற்றவர்கள் இப்படி நினைக்கிறார்கள் என்பது தெரிந்திருந்தும், அதை வரவேற்பதற்குத் தயாராகவே அவளுடைய நெஞ்சு திருந்திவிட்டது. ஆனால் .....? காலக்காற்று திடீரென்று வேறு திசைநோக்கி சுழன்றடிக்கத் தொடங்கி விட்டது. ஒரு காரணமுமின்றி அவளுக்கு ஏதோ ஒன்று சொல்ல முடியாதபடி வந்து விட்டது. இத்தனை நாளும் வெயிலென்றும் மழையென்றும் பாராமல் அலைந்த போது கூட வராத அந்த வருத்தம் ஒருவன் பக்குவஞ்செய்ய வந்த பிறகே எங்கிருந்தோ ஓடிவந்து பிடித்துக்கொண்டது. அன்று, சாயந்திரம் அவன் அரிசிக்காகப் போகும் வரைக்கும் சௌக்கியமாகத்தானே இருந்தாள்! படுத்தபடி கிடந்த போதிலும் வேடிக்கையாகப் பேசினாள். சிரித்தாள். "கஞ்சி வைத்துத் தரட்டுமா" என்று கேட்ட போது, "இந்த நேரத்தில் எங்கே அரிசி கிடைக்கப்போகிறது" என்று அவனுக்காகத் தன் அனுதாபத்தைக்கூடத் தெரிவித்தாளே! இப்போதோ.....

பிரக்ஞையற்றுக் கிடக்கும் அந்தப் பேதையின் தலையைத் தன் மடியில் வைத்தபடியே அவனும் உணர்ச்சியற்ற நிலையிலேயே உட்கார்ந்திருந்தான். அப்பொழுதுதான் ஒவ்வொருவராக அவர்களது கூட்டத்தவர்கள் எல்லோரும் வந்து சேர்ந்தார்கள். வெளியில் நிறைந்திருந்த இருளின் எதிரொலி போல எல்லோருடைய இதயங்களும் பயங்கரமாக இருண்டு கிடந்தன. ஆனால், அந்த இருளின் கோரமான சிரிப்புப் போலவே தூரத்தில் வந்துகொண்டிருந்த கல்யாண ஊர்வலத்தில் தீபங்கள் பிரகாசித்தன. வாத்தியங்களின் ஓசையும் சனங்களின் ஆரவாரமும் ஒன்றாகி, விதி தூரத்தில் நின்றுகொண்டு தன் வாயைத்திறந்து ஊளையிடுவது போலவே கேட்டது.

மூச்சு நின்ற பிறகும் அவளுடைய உடலைத் தன் மடியிலிருந்து இறக்கி வைக்க விரும்பாதவன் போலவே ஸ்வாமி விறைத்துப் போயிருந்தான். அவனுடைய கண்களிலிருந்து ஆறாக ஓடிய நீர் உயிரற்ற அவள் முகத்தின் வழியாக ஓடிக்கொண்டிருந்தது.

கல்யாண ஊர்வலம் அந்த மரத்தடிக்குச் சற்றுத் தொலைவில் வந்ததும், திடீரென்று ஒரு பரபரப்பு உண்டாகி விட்டது. எல்லோரும் நின்று ஒருவரோடொருவர் பேசிக் கொண்டார்கள். பிறகு ஒரேயொரு மனிதன் மட்டும் அந்த இடத்தை நோக்கி வந்தான். அவனுடை உடம்பு ஆத்திரத்தினால் ஆடிக்கொண்டிருந்தது, அந்த மங்கிய மர நிழலிலே கூடத் தெரிந்தது. வார்த்தைகளும் துடித்துக் கொண்டே வெளிவந்தன. ஆனால் எட்டி நின்று பேசினான்:

"யாரெடா அங்கே! ஊர்வலம் வருவது தெரியவில்லையா? எப்படித் தெரியும்! எந்த நாயின் பிணத்தை வைத்துக்கொண்டு வழியிலே அபசகுனம் மாதிரி நிற்கிறீர்கள்? எல்லோருக்கும் அந்தக்கதி வருமுன் ஓடிப் போகிறீர்களா? அல்லது.."

ஸ்வாமி அப்படி இரைந்துகொண்டு நின்ற அந்த மிருகத்தின் பக்கமாக ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டுத் தன் உயிரினுமினிய அவளது உடலைத் தூக்கித் தோள் மீது வைத்துக்கொண்டு ஏதோ ஒரு திசையை நோக்கி நடந்தான். அவனைச் சேர்ந்த மற்றவர்களும் ஒருவர் பின் ஒருவராக அவனைத் தொடர்ந்து நடந்தார்கள்.

அந்த உயர்வான மனித ஜாதியின் ஆடம்பரமான கல்யாண ஊர்வலம் நகரத்தொடங்கிய போது, அவர்களால் ஒதுக்கித் தள்ளப்பட்ட அந்த ஏழை மனிதர்களின் அபசகுனமான மரண ஊர்வலமும் இருளோடு ஐக்கியப்பட்டு மறைந்துவிட்டது.

ஒருவேளை நவயுகத்தை சிருஷ்டிக்க எண்ணிய விதியின் ஆரம்ப ஊர்வலங்களாகவும் இவை இருக்கலாமல்லவா?





# "அவள்"

'எப்பொழுது ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினாய்?

'நானா'

'இல்லை; - எப்போது உன்னை வெளியே தள்ளி விட்டார்கள்?

'நேற்று'

'இது தான் உனக்கு முதல் பிரசவமா?

'ஆமாம், இதுவே முதலும் கடைசியுமென்று எண்ணுகிறேன்' பெரியவள் சிரித்தாள்.

'ஏன் சிரிக்கிறாய்?'

'இதுவே முதலும் கடைசியுமாக இருக்கலாமென்றாயே, அதை எப்படி உன்னால் சொல்லி விடமுடியும்?'

'ஏன் முடியாது?'

அவ்வளவோடு நிறுத்தி விட்டு அவள் ஒரு பெருமூச்சு விட்டாள். மற்றவள் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு மறுபடியும் ஆரம்பித்தாள்.

'உனக்கு இப்பொழுது என்ன வயசு?'

'பதினெட்டு'

'புருஷன் உன்னை விட்டுவிட்டானா?'

'இல்லை'

'செத்துப்போனானா?'

'இல்லை'

அவளுடைய தொண்டை கரகரத்தது.

'அப்படியானால்?'

அவள் ஒன்றுமே பேசாமல் மௌனமாக இருந்தாள். மற்றவள் அவ்வளவில் நிறுத்திவிட விரும்பவில்லை. தொடர்ந்து பேசிக் கொண்டேயிருந்தாள்.

'ஏன் பேசுகிறாயில்லை? ஒரு வேளை அவனையுனக்குத் தெரியாதாக்கும்!'

'என்னை அப்படிப் பிசகாக நீ எண்ணக்கூடாது'

அவளுடைய வார்த்தைகளில் ஒருவித ரோசமும் ஆத்திரமும் கலந்து காணப்பட்டது.

மற்றவள்தான் இப்பொழுது பேச்சற்றிருந்தாள். அவளே தொடர்ந்து பேசினாள்.

'அவரை எனக்கு நன்றாகத் தெரியும். பல வருஷங்களாகத் தெரியும். வருஷக்கணக்காக அந்த வீட்டிலேயே சீவித்திருக்கிறேன்'.

'அப்படியா?'

அவள் பிறகு மௌனமாகி இரண்டொரு பெருமூச்சு மட்டும் விட்டாள்.

'உனது வாழ்வைக் கெடுத்தவன் எவனானாலும், அவனை 'அவர்' என்று சொல்ல உனக்கு வெட்கமாயில்லை?'

'பழக்கத்தினாலே சொல்லிவிட்டேன். உண்மையில் மரியாதை செய்ய வேண்டும் என்று நான் கனவிலும் எண்ணுவதேயில்லை'.

'அவன் இப்பொழுது எங்கே இருக்கிறான் என்று நீ அறிவாயா?'





'ஆமாம்; நன்றாகத் தெரியும். ஆனால் நீ அதைக் கேட்காதே!'

'ஏன் அதை மறைக்கவேண்டுமென்று விரும்புகிறாய்?'

'அதனால் யாருக்குமே பிரயோசனம் கிடைக்காது'.

'நீ உனக்கு எப்படிப் பிரயோஜனம் அற்றவளோ, அப்படியே தான் எனக்கும் பிரயோஜனப்படமாட்டாய் என்பதை நான் தெரிந்து கொண்டேன்'.

'எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. நீ யார் என்பதையும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை'.

'நீ புத்திசாலியானால் இதற்குள்ளாகத் தெரிந்திருக்க முடியும். இல்லாவிட்டாலும் என்னை நன்றாகக் கவனித்துப்பார்!'

அப்பொழுது அவள் மடியில் கிடந்த அந்தச் சிசு வீரிட்டழுதது. அதைப் பார்த்துக் கொண்டே பெரியவள் மீண்டும் சொன்னாள்:

'இதையாவது ஆஸ்பத்திரி ல் விட்டுவரவேண்டும் என்று உனக்குப்படவில்லையே!'

'என்னுடையது என்று இது ஒன்று தானே இருக்கிறது. இதையும் இழந்து விட்ட பிறகு நான் எதற்காக வாழவேண்டும்?'

'நான், அல்லது என்னைப் போன்ற எவளும் உன்மாதிரி எண்ணுவதில்லை'.

அவள் இந்தப் புதுமாதிரியானவளுடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதற்குள் வெயில் மரக்கிளைகளைக் கடந்து அவர்களைச் சுடத் தொடங்கியது. இரண்டு பேருமாகவே எழுந்து மரத்தடியிலே போய் உட்கார்ந்தார்கள். குழந்தை அந்த ஏழைத்தாயின் அணைப்பிலே பாலைக் குடித்தபடி அயர்ந்து கிடந்தது. அவர்களுடைய பேச்சு மேலும் தொடர்ந்து சென்றது. பெரியவளே பிறகும் ஆரம்பித்தாள்.

'உனக்கு வேறு யாரும் இல்லையா? இனி என்ன செய்ய உத்தேசித்திருக்கிறாய்?'

'எங்கேயாவது வேலை செய்து தானே வயிற்றை வளர்க்க வேண்டும்'.

'இந்தக் குழந்தையையும் வைத்துக்கொண்டு அப்படிச் செய்ய முடியுமா?'

பெரியவள் மிகுந்த பரிவுடனேயே இதைக் கேட்டாள். சிறிது நேரம் வரை அங்கே மௌனமே நிலைத்திருந்தது.

'உனக்குக் குழந்தைகள் இல்லையா?'

இதற்கு ஒரு மாதிரியான தொனியிலே அந்தப் பெரியவள் பதில் சொன்னாள். பதிலும் மிகவும் சுருக்கமாகவே இருந்தது.

'இருக்கலாம்'.

இந்தப்பதில் அவளுக்குத் திகைப்பையே உண்டு பண்ணியது. அதனால் மறுபடியும் அவளே, 'இருக்கலாம் என்றால் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே? என்று நிறுத்தினாள்.

'ஆமாம்: அவைகள் எங்கோ இருக்கின்றன. ஒருவேளை இல்லைத்தானோ என்றும் என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது'.

'பிள்ளைகளைப் பெற்ற எந்தத்தாயும் உன்னைப் போல இருக்க முடியாதென்றே எனக்குப் படுகிறது. என்னளவில் நிச்சயமாகச் சொல்ல முடியும். என்னால் முடியாது'.

'நீ சொல்லுவது வேறு உலகங்களுக்குப் பொருத்தமாக இருக்கலாம். ஆனால் நம்முடைய இந்த உலகம் இருக்கிறதே, இதற்கு முற்றிலும் பொருந்தாது. நானும் முதலில் உன் மாதிரியே தயங்கினேன். கொஞ்ச காலத்தின் பிறகே கேவலமான இந்த உலகத்தைப் பழிவாங்க வேண்டுமென்று முடிவு செய்துகொண்டு எல்லாவற்றையும் உதறித் தள்ளினேன். என் ஆசை உண்மையில் நிறைவேறிவிட்டது. பணம் படைத்த, மிருக இச்சை கொண்ட மனித பிசாசுகள் தங்கள் இச்சைக்கு ஏழைகளாகிய எங்களைப் பலி எடுக்கிறார்கள். பிறகு பாவப்பெயரையும் சூட்டி







உதைத்துத் தள்ளி விடுகிறார்கள். அந்த நிலையில் 'தாசி' என்ற அவப்பெயரோடு அலைவதைத் தவிர வேறு வழியுண்டா? நீயே யோசித்துப்பார்! தாசியாக இருக்காமலே தாசி என்ற பெயர் கேட்ட ஒருத்தி ஏன் அந்தத் தொழிலில் இறங்கக் கூடாது? உண்மையில் உன்னுடைய கதையோடு சேர்த்து இதை யோசித்துப்பார். நான் சொல்வதில் எவ்வளவு சரி இருக்குமென்பதை உணர்வாய்!'

அவள் மௌனமாகவே கேட்டுக் கொண்டிருந்தாள். பெரியவள் தொடர்ந்து பேசிக் கொண்டே போனாள்:

'மனித உள்ளமே இல்லாத உலகத்தில் நீ மட்டும் எதற்காக அந்த உள்ளத்தை வைத்துக்கொண்டு அழவேண்டும்?'

குழந்தை திடீரென்று வீறிட்டு அழுதது. அதை எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு மறுபடியும் பாலை ஊட்டினாள் அந்தத்தாய். அப்பொழுது எதைத்தான் கண்டாளோ, மற்றவளுடைய கண்ணும் கலங்கியது. ஒருவேளை தன் குழந்தைகளினுடைய நினைப்புக்கள் தோன்ற அவள் உள்ளமும் அலறியிருக்கக்கூடும். சிறிது நேரம் வரை ஒருத்தரும் பேசவில்லை. வெயில் காய்ந்து கொண்டேயிருந்தது. முகத்தில் அரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டு 'சாப்பிட்டாயா'? என்ற அந்தப் பெரியவளே மற்றவளைப் பார்த்துக் கேட்டாள்.

'நேற்றிரவுக்குப் பிறகு இல்லை'.

'காலையிலிருந்து ஒன்றும் அகப்படவில்லையா?'

ஒரு பதிலுமே கிடைக்கவில்லை.

'நான் இன்று உனக்கு ஒரு விருந்து போடப் போகிறேன்' என்று மறுபடியும் அவள் தொடங்கினாள்.

உடனே, 'எதற்காக அப்படி விரும்பினாய்?' என்று கேட்டாள் அந்தப் புதிய தாய்.

'உன்னைப் போலவே ஒரு காலத்தில் நானும் தெருத்தெருவாக் அலைந்திருக்கிறேன். இதைத் தான்

காரணமாகச் சொல்ல முடியும். ஆனால் என்னோடு வந்து என்னைப்போலவே வாழ்க்கையை நடத்து என்று சொல்ல நான் விரும்பவில்லை. நீ மட்டும் விரும்பினால் தாராளமாக வரலாம். என்னால் இயன்ற உதவிகளைச் செய்து வழிகாட்டுவேன்'.

பேச்சு முடிந்ததும் அவள் மௌனமாக இருந்தாள். மற்றவளும் சும்மா இருந்தாள்.

பேசினவளே மறுபடியும் தொடங்கினாள்:

'நேற்று வழக்கத்திற்குமாறாக ஒருவன் நிறையப் பணம் தந்தான். அவனும் எங்கோ சூதில் அடித்துக்கொண்டு வந்ததுதானே.! அவ்வளவும் இங்கேதான் இருக்கிறது. அதை உனக்கே கொடுத்துவிடப் போகிறேன்'

அவள் பணத்தை எடுத்தாள். அதற்குள், 'எனக்கு ஒரு ரூபா மட்டும் கொடுத்தாள் போதும்' என்றாள் மற்றவள்.

'எப்படி உனக்கு அது போதுமென்று எண்ணினாய்?'

'ஒரு தடவை நிறையச் சாப்பிட ஒரு ரூபா போதுமல்லவா? அவ்வளவுதான் இனி எனக்குத் தேவை என்று முடிவு செய்து விட்டேன்.'

'நல்லது: உன்னுடைய எந்த முடிவுக்கும் குறுக்கே நிற்க நான் விரும்பவில்லை' என்று சொல்லிக்கொண்டே ஒரு ரூபாவை மட்டும் எடுத்துக் கொடுத்துவிட்டு, நான் போய் வரட்டுமா'? என்று எழுந்தாள் அந்த பரோபகாரி.

குழந்தையை மடியிலே அணைத்து வைத்தபடியே நமஸ்கரித்து விட்டு, 'கடவுளுடைய கணக்குப் புத்தகத்தில் உன்னைப்பற்றி நிச்சயமாக நன்றாகவே எழுதப்படும்.' என்றாள் அந்த அபலை.

'அந்த கடவுள் செத்துப் போனான் என்ற கதை நீ இதுவரை கேட்டதில்லையாக்கும்.!' என்று ஒரு மாதிரிச்சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு அவள் நடந்து மறைந்தாள்.







'எங்கோ சாப்பாட்டை முடித்துக்கொண்டு மறுபடியும் அந்த மரத்தடிக்கே வந்து அவள் உட்கார்ந்தாள். அவளுடைய கண்கள் அடிக்கடி மேற்கே சரிந்து செல்லும் சூரியனையே பார்த்துக்கொண்டிருந்தன. அஸ்தமித்ததும் குழந்தையையும் ஏந்திக்கொண்டு நடக்கத் தொடங்கினாள். இளைத்து வலுவற்ற அந்த நடையிலும் அவளால் வேகமாக நடக்க முடிந்தது. நடுச்சாமம் ஆவதற்குள் தான் போகவேண்டிய - வெகுகாலம் பழகின அந்த இடத்திற்குப் போய்விட்டாள். ஒரு நாள் எந்த தோட்டப்பக்கத்தால் எந்த நேரத்தில் வெளியேறினாளோ, அதே பாதையால் அதே நேரத்தில் உள்ளே நுழைந்தாள். வீட்டிலிருந்த எல்லோரும் நன்றாகத் தூங்கி விட்டார்கள். அங்கே படுத்துக்கிடந்த அவள் வளர்த்த நாய் மட்டும் ஒரு முறை உறுமிவிட்டு அடையாளம் கண்டு கொண்டு ஓடி வந்து வாலை ஆட்டிற்று. அதைத் தடவிக் கொடுத்துவிட்டு நடந்தாள். நாயும் பின்னாலே நடந்தது.

அந்தப் பக்கத்தில் உள்ளே நுழைய ஒரு கதவு மட்டும் இருந்தது. சில சமயங்களில் அதையும் பூட்டி விடுவார்கள். அந்த நினைவு வந்ததும் மெல்ல அதில் கையை வைத்தாள். அது தானாகவே திறந்து வழிவிட்டது. நேராக உள்ளே சென்றாள். அவள் கால்கள் மாடி அறையை நோக்கி நடந்தன. அங்கே தான் அவளை இந்த நிலைக்குக் கொண்டு வந்த அந்த உத்தம பிரமச்சாரி தூங்குவது வழக்கம்.

ஒரு முறை அறையின் வாயிலுக்கு வந்ததும் அவள் உள்ளம் - உயிர் எல்லாம் கலங்கி நிலைக்கு வந்தன. பிறகு குழந்தையை தன் அணைப்பில் இருந்து எடுத்து முத்தமிட்டாள். அது மெல்ல முனைகியது. அவள் கண்களிலிருந்து தாய்மையின் உதிரம் போல் கண்ணீர் பீறிக்கொண்டு வந்தது. ஆயினும் அவள் தைரியத்தை இழந்து விடவில்லை. தான் கிழித்து வைத்திருந்த பாதிப் புடைவையை விரித்து குழந்தையைக் கீழே படுக்க வைத்துவிட்டு நிமிர்ந்தாள்.

திடீரென்று கதவு திறக்கப்பட்டது. 'யாரது'? என்று கேட்க வாய் எடுத்தவன், அவளைக் கண்டதும் திகைப்படைந்து நிறுத்திக் கொண்டான்.

அதற்குள் அவள் திரும்பினாள். அவனோ அப்பொழுதும் பேச விரும்பாதவன் போலவே வாயடைத்து நின்றான். ஆனால் அவள் பேசினாள்:

'உனது மானத்தைக் காப்பாற்றவே ஒரு நாள் வெளியேறினேன். உன்னுடையது அதோ இருக்கிறது. உன் வீட்டிலிருந்த அடிமை ஒருத்தி பெற்றதானாலும் அது உனது சொத்து. ஏன்? மறுக்கிறாயா?'

அவன் அப்பொழுதும் மரமாகவே நின்றான். அவள் தலையை ஒருமுறை தூக்கி அவனைப் பார்த்துவிட்டு கீழே கிடந்த குழந்தையையும் பார்த்தாள். அந்தப் பார்வையில் அவனை நடுங்கச் செய்யும் ஏதோ ஒரு சக்தி இருந்தது.

அவள் திரும்பி இரண்டு படி இறங்கிய பிறகே அவனால் பேச முடிந்தது. வந்து இரண்டொரு வார்த்தைகளும் கிணற்றினுள்ளேயிருந்து கேட்பது போலவே ஒலித்தன.

'நீயும் இங்கேயே இருக்கலாம்'.

'நான் அதற்காக இந்த நேரத்தில் வரவில்லையே!'.

நிதானமாகவும் உறுதியாகவும் அவள் இதைச் சொல்லிவிட்டு நடந்தாள். அவளுடைய நடையிலும் ஒரு கம்பீரம் இருந்தது.

தோட்டத்தின் எல்லையைக் கடந்து தெருவுக்கு வரும்வரை அந்த நாயும் அவளுடன் சென்று திரும்பியது.

தெருவில் நின்று அந்த வீட்டை ஒரு முறை பார்த்தாள். குழந்தையின் மிருதுவான கீச்சுக்குரல் மட்டும் கேட்டது. உடனே கைகளினால் காதுகளை அடைத்துக்கொண்டு நடக்கத் தொடங்கினாள். அந்த நடை 'தனக்கே தெரியாத ஏதோ ஒரு உலகத்தை நோக்கி நடக்கிறாள்' என்பதையே காட்டிற்று.



# துறவு

**அ**வர் நிமிர்ந்திருந்தார். அவருக்குப் பின்புறமாகச் சற்று விலகி அந்தப் பாலசந்நியாசி உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் நின்ற ஆலமரம் வானத்தை மறைப்பது போல எங்கும் பரந்து வளர்ந்து கிடந்தது. சற்றுத்தொலைவில், அவர்களுக்கு எதிரில் நெருப்பு ஒரு மனித உடலைக் கழுவித் துடைத்து உண்டுகொண்டிருந்தது. அப்படி எரிந்து கொண்டிருந்த நெருப்பின் ஒளி வெகுதூரம் வரைக்கும் இருளைத் துரத்தி விரட்டியது. பிரமாண்டமான அந்த ஆலின் விழுதுகளின் நிழலும் அடிமரத்தின் நிழலும் பூதாகாரமாக எதிர்த்திசையில் படுத்துக்கிடந்தன.

இரண்டொரு நரை கண்ட பெரியவரின் கம்பீரமான முகமும், அடர்ந்து கறுத்த ரோமங்கள் பிரகாசிக்கும் இளையவரின் ஒளி நிறைந்த முகமும் தெளிவாகத் தெரிந்தன. பெரியவர் கண்களைப் பாதி மூடியபடி இருந்தார். மற்றவரோ அகல விழித்தபடி எதையோ கவனித்துக் கொண்டிருந்தார்.

எங்கும் நிசப்தம் நிலவியது. மரணத்தின் நிழல் படிந்த நிசப்தம் அது. அக்கினி அந்த உடலுடன் விறகையும் சேர்த்துத் துடைப்பதனால் உண்டான சப்தங்கள், அங்கே நிலவிய அமைதியை இடையிடையே மாசுபடுத்திக் கொண்டிருந்தன.

வாழுகிற மனிதனால் பெரிதும் அஞ்சி வெறுக்கப்படுகிற, கடைசியில் அவனுக்கு அடைக்கலம் தந்து ஆறுதல் செய்கிற, இடம் அது. வேறு வகையில்-அளவில்-நிலையில் இன்பதுன்பங்களை மாறி மாறி அநுபவித்த தசை நரம்பு எலும்பு முதலிய எல்லாமே துகளாகி அந்த மண்ணின் உருவை ஏற்றுக்கொண்டு தாமும் அதுவாகி ஐக்கியமாகிவிட்டன.

ஒரு காலத்தில் யாரோ இரண்டு பகையரசர்களின் படைகள் ஒன்றோடொன்று மோதி நிர்மூலமான இடமும் அதுதானாம். அகால வேளைகளில் குதிரைகள் ஓடுகிற கனைக்கிற சத்தங்கள், யானைகள் பிளிறுகிற பேரொலிகள், வெட்டு குத்து கொல்லு என்ற இரக்கமற்ற குரல்கள், வேதனை தோய்ந்த மரண தாகத்தில் எழுகின்ற சோக மயமான ஓலங்கள் எல்லாம் கலந்து கேட்கும் என்று சொல்லுகிறார்கள்.

அது மயானம்; இடுகாடும் சேர்ந்த மயானம். பேய்கள் தங்கள் விருப்பம்போல் விளையாடி மகிழும் இடம். எங்கே திரும்பினாலும் நிர்மானுஷ்யத்தின் சுவடுகள் தெரிந்தன.

பெரியவர் கண்களைத் திறந்து உற்றுப் பார்த்தார். எதிரில் அந்த உடல் கருகிச் சுருண்டு வெடித்து எரிந்து கொண்டிருந்தது. தீக்கொழுந்து எழுந்தும் அடங்கியும் வளைந்து நெளிந்தும் வேறு வேறு திசைகளில் குதித்தும் காற்றுடன் சேர்ந்து தானும் விளையாடியது.

திடீரென்று மேலே உறங்கிக் கிடந்த பறவைகளின் அவலக் குரல்கள் எழுந்தன. கூகை ஒன்று, எங்கிருந்தோ வந்து கொத்தியும் கிழித்தும் அவற்றைக் கொன்று தள்ளியது. அபாயத்தை எதிர்பார்த்திராத அந்த ஏழைப் பறவைகள் செயலற்று ஒவ்வொன்றாக கீழே விழுந்தன. யமனாகி வந்த கூகை அங்கிருந்து பறந்து சென்ற பிறகும், வெகு நேரம் வரைக்கும் அந்தப் பறவைகளின் துன்பக்குரல்கள் கேட்டுக் கொண்டே இருந்தன.







நடுநிசி ஆகிவிட்டது. அதுவரை ஓங்கி எரிந்த நெருப்பு மெல்ல மெல்ல அடங்கித் தழலுருவாயிற்று. மறுபடியும் சப்த நாடிகளையும் ஒடுங்கச் செய்யும் அந்தப் பேயமைதி. சுற்றிலும் இருள் இருளை விழுங்கி அதையே உமிழ ஆரம்பித்தது.

பெரியவர் திரும்பிப் பின்னால் உட்கார்ந்திருந்த இளந்துறவியின் முகத்தைப் பார்த்தார். அவருக்கே அது ஆச்சரியத்தைக் கொடுத்தது. அந்த வைராக்கிய புருஷனின் குழந்தை முகம் எதிரில் கிடந்த தழல் போல என்றும் இல்லாத ஒளியுடன் விளங்கியது.

'குழந்தாய்!' என்று அவர் தம்மை மறந்து கூப்பிட்டார்.

இளையவர் எழுந்து முன்னால் வந்தார். பெரியவர் கேட்டார்: 'இங்கே எதைக் காண்கிறாய்.'

சிறிது தாமதித்தே பதில் வந்தது: 'காலருத்திரனது நிர்த்தனத்தையே காண்கிறேன், சுவாமி.'

கேட்டவர் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, 'இனிப் புறப்படுவோம்' என்று சொல்லிக்கொண்டு எழுந்தார்.

இருவரும் நடக்க ஆரம்பித்தார்கள். குற்றுயிராய்க் கிடந்த ஏதோ ஒரு பறவையைச் சர்ப்பம் ஒன்று சிரமப்பட்டு விழுங்கியபடியே நகர்ந்து வழி விட்டது.

## 2

கிழக்கிலிருந்து வந்தவர்கள் வடக்கு நோக்கிச் சென்றார்கள். பெரியவர் முன்னாகவே நடந்தார். எங்கும் வளர்ந்து கிடந்த நாணல்கள் அவர்களின் பாதங்களைத் தொட்டுத் தொட்டு மீண்டன. பாதையோ வளைந்து வளைந்து போய்க் கொண்டிருந்தது. இளையவர் அடிக்கடி வானத்தைப் பார்த்துக் கொண்டே நடந்தார். அது நிர்மலமாகி ஞானிகளின்

மனம்போலத் தெளிந்திருந்தது. கொஞ்சத்தூரம் சென்றதும் பெரியவர் திரும்பி நின்று, 'அப்பனே, உனக்குத் தூக்கம் வரவில்லையா'? என்று கேட்டார்.

'இப்பொழுது இல்லை, சுவாமி'.

'பசி'?

'அதுவுமில்லை'.

மறுபடியும் அவர்கள் நடக்க ஆரம்பித்தார்கள். இரண்டு நாழிகைத் தூரத்தில் அந்த ஒற்றையடிப்பாதை அகன்ற ஒரு சாலையில் போய் முடிந்தது. அந்தச் சாலையின் ஓரங்களில் பெரிய பெரிய மரங்கள் வளர்ந்திருந்தன. இடையிடையே மாளிகைகள் போன்ற வீடுகளும் தெரிந்தன.

அவர்கள் நிற்காமலே தொடர்ந்து நடந்தார்கள். 'இது எங்கே போகிறது?' நாம் எங்கே போகிறோம்?' என்ற விசாரம் அவர்களைத் தொடவில்லை. மேலும் சில நாழிகை தூரம் நடந்து சென்றார்கள். திடீரென்று பெரியவர் வழியை விட்டு இறங்கி ஒரு வீட்டின் முன்புறத்திலே மரமொன்றைச் சுற்றிக் கட்டியிருந்த மேடையை அடைந்து படுத்துக் கொண்டார். மற்றவரும் அவரைத் தொடர்ந்து சென்று அவரது காலடியில் சரிந்தார்.

புலருவதன்முன் இளையவர் எழுந்து உட்கார்ந்தார். மிகச்சமீபமாக யாரோ ஒரு பெண் நிற்பதைக் கண்டதும் அவர் நன்றாக ஊன்றிப் பார்த்தார். வைகறையின் மங்கிய ஒளியிலே அவளது தோற்றம் யாரோ ஓர் அணங்கு நிற்பது போல இருந்தது. பிரபஞ்சத்தின் எந்த விசாரமுமே அணுகாத அவரது உள்ளத்தில் அது பெரிய ஆச்சரியத்தையே உண்டு பண்ணியது. அதனால் அவர் அவளையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தார். கம்பீரமான அவரது தோற்றமும் பால் வடியும் முகமும் அவளையும் தன்னை மறந்த நிலையில் நிற்கச் செய்தன.







அந்தச் சமயத்திலேதான் பெரியவர் கண்களைத் திறந்தார். இந்த எதிர்பாராத காட்சி அவரை அதிரும்படி செய்யாவிட்டாலும் சிந்திக்கத் தூண்டியது. சிறிது நேரம் வரை அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தவர், 'அப்பனே, இவள் யார்?' என்று கேட்டார். இளையவர் பதில் சொல்லவில்லை. ஆனால் அவள் திரும்பி நின்று பேசினாள்: 'சுவாமி, தங்கள் வரம் பெற்றதனால் பெரிய பாக்கியசாலி ஆனவள் இவள்.'

அவர் மௌனமாக இருந்தபடி அவளை உற்றுப் பார்த்தார். அப்போதும் அவளே தொடர்ந்து பேசினாள்: 'சுவாமி, ஏதோ புண்ணியவசத்தால்தான் இங்கே தங்கி இந்த இடத்தைப் புனிதமாக்கி விட்டீர்கள். கொஞ்சம் எழுந்து உள்ளே வருகிறீர்களா?'

அவள் நிலத்தில் விழுந்து வணங்கினாள். பெரியவர் கையை மேலே தூக்கி உயர்த்தி ஆசிர்வதித்தார். மற்றவரோ சும்மா இருந்தபடியே இருந்தார். அப்பொழுது அவள் கண்கள் இருவரையும் மாறி மாறி மன்றாடின.

அவள் யாசித்ததை நிராகரிக்க அவர் விரும்பவில்லை. உடனே எழுந்து அந்த வீட்டை நோக்கி நடந்தார். அவர்கள் உள்ளே நுழையும்முன்பே அவள் ஓடிச்சென்று ஆசனங்களை இழுத்துவிட்டு 'உட்காருங்கள்' என்று வணங்கி நின்றாள். இருந்தவர் மற்றவரையும் உட்காரும்படி சமிக்ஞை செய்துவிட்டு எல்லாப் பக்கங்களையும் ஒரு முறை பார்த்தார். திடீரென்று அவரது முகத்தில் சொல்லமுடியாத ஒருவித வெறுப்பின் நிழல் படிந்தது.

அவள் இதை உணர்ந்ததும் மிகுந்த பண்புடன் பேச ஆரம்பித்தாள்: 'சுவாமி பாவிகளுக்கு ஒருநாளும் விமோசனம் கிடைக்காதா?'

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் அவர் கருணை நிறைந்த கண்களால் அவளைப் பார்த்து 'நீயும்

உட்கார்' என்று ஓர் ஆசனத்தைக் காண்பித்தார். அவள் உட்கார விரும்பவில்லை. மேலும் ஒருபுறமாக ஒதுங்கி நின்றாள்.

பெரியவர் பேசினார்: 'தவறு செய்தவர் தாமாகவே அதை உணர்ந்து பச்சாதாபப்படுவதே மிகச் சிறந்த பிராயச்சித்தமாகும்.'

'சுவாமி, என்னைப் போன்றவர்களுக்கும் இந்த விதி பொருந்துமா?'

இப்பொழுது தெளிவான குரலில் அவர் பதில் கேட்டது: 'குழந்தாய், உனக்குத்தான் இது முற்றும் பொருந்தும். வாழ்க்கை எல்லோருக்கும் எப்போதுமே நிதானமான பாதையில் செல்வதில்லை. மனம் சந்தர்ப்பவசத்தால் பல தடவைகளில் குழியில் தள்ளி விடுகிறது. குழந்தை நடக்கப் பழகும்போது எத்தனை தடவை விழுந்து விழுந்து எழும்புகிறான் என்பதை நீ அறியாயா?'

'மறுபடியும் எழுந்திருக்க முடியாதபடி விழுந்துவிட்டால்?' பெருமூச்சின் நடுவே அவள் இப்படிக் கேட்டாள்.

அவர் ஒரு மாதிரி சிரித்தபடியே பதில் சொன்னார்: 'குழந்தையின் மானிடத்தாய் அல்லவே லோகநாயகி.'

அவள் ஓடிவந்து அவர் பாதங்களைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டாள். மற்றவரோ எல்லாவற்றையும் கவனித்தபடியே பின்னால் உட்கார்ந்திருந்தார்.

பிறகு அவள் பெரியவரையே பார்த்து, 'சுவாமி, ஒரு பொழுதுக்காவது இங்கே தங்கிச் செல்லவேண்டும்' என்று வேண்டிக்கொண்டு உள்ளே போனாள். அப்பொழுது அவர் மற்றவரைப் பார்த்துச் சொன்னார்: 'அப்பனே, எழுந்திரு: போகவேண்டும்'







ஒருவர் பின் ஒருவராக அவர்கள் வெளியே சென்றார்கள்.

அவள் ஓடிவந்து பார்த்தபோது அந்தத் தெருவையே கடந்து அவர்கள் மறைந்து விட்டார்கள்.

# 3

எதிர்பாராத வகையில் பெரியவர் வேகமாக நடந்தார். அவரது மனம் நிலைகொள்ளாமல் தடுமாறியது. அந்த நிலையிலும் 'ஏன் இது?' என்று தமக்குள்ளே கேட்டுப் பார்த்தார். காரணம் தெரியவில்லை.

'அங்கே நுழைந்தாயே, அதனால்தான்'.

இது அவர் உள்ளத்தின் ஒரு கோணத்திலிருந்து எழுந்த குரல்.

'பாவத்தின் பயங்கர அந்தகாரம் சூழ்ந்த இந்த உலகத்தில் அவள் அப்படி ஓர் ஆகாத பண்டமா?' உள்ளே இருந்து மற்றொரு குரல் இப்படிக் கேட்டது. பின்னால் தொடர்ந்து வரும் மற்றவரை ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டு அவர் மறுபடியும் முன்போலவே நடக்க ஆரம்பித்தார். இப்படிச் சிக்கலான மனநிலை அவரை முன்னும் சில சமயங்களில் கலங்கச் செய்ததுண்டு. அப்போதெல்லாம் அதனதற்குரிய காரணங்களை நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தார். இன்று அது முடியவில்லை. விரும்பி முயன்றும் அது வெளிவரமறுத்தது.

அவர் முகத்தில் இலேசாக வியர்வை அரும்பியது. தமக்குள் பேசிக் கொண்டே நடந்தார்: 'இந்த உலகத்திலிருந்து விடுபட்ட வாழ்வில் எத்தனையோ வருஷங்கள் கழிந்து விட்டன. நித்திரை, உணவு என்ற இன்றியமையாதவற்றையே கட்டுப்படுத்தி மனத்தை மடக்கி வழிநடத்தினார். எத்தனை சோதனைகளைச் செய்து பார்த்தாயிற்று! எல்லாவற்றிலும் சித்தி இலேசாகக் கிட்டியது. இன்றோ இது பெரிய புதிராகவே

இருக்கிறது. அடிமனத்தில் - எங்கோ ஒரு மூலையில் - என் சக்திக்கு எட்டாத ஆழத்தில் ஏதோ ஒன்று அழுகிக் கிடக்கிறது.

ஒரு பெருமூச்சுடன் திரும்பிப் பார்த்தார். இளையவரது முகம் வழக்கம் போலவே பிரகாசத்துடன் விளங்கியது.

'குழந்தாய்!'

அந்தக் குரலில் அன்பு அமுதாகி கடலாகிப் பொங்கி வழிந்தது.

'சுவாமி!' என்று உடனே பதிலுக்குக் குரல் கொடுத்தார் மற்றவர்.

'களைப்படைந்தாயோ என்று பார்த்தேன்: அவ்வளவுதான்'

மறுபடியும் அவர்கள் ஒருவர் பின் ஒருவராக நடந்தார்கள். அவர்களுக்கு நடுவில் மௌனம் நிலைத்திருந்தது. கொஞ்ச தூரம் சென்றதும் தெருவின் ஓரத்தில் நின்ற ஒரு மரத்தின் நிழலில் அவர் போய் உட்கார்ந்தார். இளையவரும் அவரைத் தொடர்ந்து சென்று ஒரு பக்கத்தில் ஒதுங்கினார்.

பெரியவருடைய மனத்தில் மற்றவரைப் பற்றிய நினைவுகள் திடீரென்று முளைத்தன. உடனே அவர் கேட்டார்: 'குழந்தாய், நீ என்னை அடைந்து பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. இல்லையா?'

'ஆம்' என்று தலையசைத்தார் இளையவர்.

'இதுவும் ஒருவகையில் நம்மைப் பாதிக்கக்கூடிய பந்தம் தானே? இதை நீ உணரவில்லையா?'

மற்றவர் பதில் இன்றி மௌனத்தில் மூழ்கியிருந்தார்.

'உனக்குப் பக்குவ நிலை கைவந்துவிட்டது. இனியும் நீ என் இறக்கைகளுக்குள் உறங்க வேண்டியதில்லை.'

இளையவர் பிறகும் பேச்சின்றியே இருந்தார். சிறிது பொறுத்து மறுபடியும் பெரியவரே பேசினார்:







'அப்பனே, இனி நீயும் நானும் பிரிந்து விடவே வேண்டும்: அல்லது இரண்டு பேருமே பெரிய நஷ்டத்தை அடைவோம்.'

இளையவர் எழுந்து கூப்பிய கரங்களுடன் அவர் பக்கமாகச் சென்று விழுந்து வணங்கினார்.

'குழந்தாய், உன்னை ஆண்டவன் ஆசீர்வதிப்பானாக!'

அவர் கண்களை மூடியபடி எழுந்து நின்றார். அவருடைய குரல் கரகரத்தது. மற்றவர் குனிந்து அவருடைய பாதங்களைத் தொட்டுப் பலமுறை கண்களில் ஒற்றிக்கொண்டு தெருவில் இறங்கினார்.

## 4

**தெ**ருவில் இறங்கிய இளையவர் ஒரு முறை கூடத் திரும்பிப் பாராமலே நடந்து கொண்டிருந்தார். அவரது நடையில் எது இல்லாவிட்டாலும் நிதானம் இருந்தது. எல்லாவற்றிலிருந்தும் விடுபட்ட தெளிவு இருந்தது.

அந்த உருவம் கண்களை விட்டு மறையும் வரையும் நின்றபடியே பார்த்துக்கொணடு நின்ற பெரியவர் தாய் போல் மாறி, 'ஐயோ வெயில் கடுமையாக எரிக்கிறதே!' என்று அங்கலாய்த்தார். பிறகு தாமும் தொடர்ந்து போக எண்ணியவர் போல அந்த திசையில் வேகமாக நடந்தார். சிறிது தூரம் சென்றதும் ஏனோ மறுபடியும் திரும்பி வந்து அந்த மரத்தின் கீழ் உட்கார்ந்தார்.

இளையவர் இருந்த இடம் சூனியமாகிக் கிடந்தது. ஆனால் மண்ணில் அவர் காலடிகள் நன்றாகத் தெரியும்படி பதிந்திருந்தன. அந்த அடையாளங்கள் ஏதோ அருமையான பொக்கிஷங்கள் போல அவருக்கு இருந்தன. வெகுநேரம் வரையில் அவற்றையே பார்த்துக் கொண்டிருந்தார். அதில் ஏதோ ஆறுதல் இருப்பதுபோலப் பட்டது. நடுவில், 'இனி ஒரு போதும் சந்திக்க மாட்டேனா?' என்ற கேள்வி எழுந்ததும்

த்டுமாறி எழுந்து நின்று அவர் போன திசையைப் பார்த்தார். பிறகு அங்கும் இங்குமாக நடக்க ஆரம்பித்தார். அப்போதெல்லாம் அந்த அடையாளங்கள் அழிந்து விடாதபடி விலகி விலகியே நடக்க வேண்டுமென்று அவருக்குத் தோற்றியது.

'இந்த பாசம் இவ்வளவு தூரம் என்னைப் பாதித்துவிட்டதே' என்ற ஏக்கமும் அவருக்கு அடிக்கடி உண்டாயிற்று.

'அன்றைக்கே, அவன் வந்தபோது 'இது வேண்டாம் - மறுபடியும் கட்டுப்படாதே' என்று எச்சரித்த என் அந்தராத்மாவின் குரலை நான் கௌரவிக்கவில்லை. 'சுவாமி, எனக்கு வழிகாட்டுங்கள்' என்று வந்தவனை எப்படித்தான் போ என்று தள்ள முடியும்? வா என்று ஏற்றுக்கொண்டேன். அவன் நிழலாகி வளர்ந்தான். இந்த நிலையிலும் அவனைப் பார்த்து மனம் களித்தேன். ஆனால் இன்று?'

அவர் நீண்ட ஒரு பெருமூச்சுடன் கிளம்பி வந்தவழியால் நடந்தார். இப்பொழுது அவரது நடையில் வேகம் இல்லை. நிதானமும் இருக்கவில்லை. தவித்துக் கொண்டிருந்த வெயில் கூட அவரை அவசரப்படுத்தவில்லை. மெல்ல மெல்ல ஊர்ந்து சென்றார். பாரம் ஏறிய மனநிலையை அவரது முகம் எடுத்துக் காட்டியது.

வழியில் ஜனங்கள் போனார்கள்: வந்தார்கள். அவர்களுக்குள் அவனும் இருக்கலாம் என்பதுபோல அவர் கண்கள் எல்லோரையும் ஆராய்ந்தன. 'இனி வேண்டாம்' என்று சில சமயங்களில் கண்களை மூடிக்கொண்டும் நடந்தார்.

வரவர அவருக்கு நடப்பதே பெரிய சிரமமாக இருந்தது. ஆயினும் நிற்காமலே சென்றார். அந்தச் சமயத்திலே, காலையிலே தாம் எந்த வீட்டில் இருந்து கிளம்பி ஓடினாரோ, அந்த வீட்டின் எதிரில் வந்துவிட்டதைத் தெரிந்து







கொண்டார். நடப்பதை நிறுத்தி விட்டு அந்த மரத்தின் அடியில் இருந்து மேடையைப் பார்த்தார். எதிரில், 'சுவாமி, வாருங்கள்' என்று வேண்டியவாறே அவள் ஓடிவந்தாள். அவர் இப்பொழுது அசையவில்லை. கண்களை அகல விழித்து அவளையே பார்த்துக் கொண்டு நின்றார். பிறகு தாமாகவே இறங்கி உள்ளே சென்றார்.

மற்றவரைப் பிரிந்ததினால் உண்டாகிய தாகம் மெல்ல மெல்ல தணிவதுபோல அவருக்குப் பட்டது. அப்பொழுது அவள் பேசினாள்: 'சுவாமி, எப்படியும் ஒரு நாளைக்கு உங்களைச் சந்திப்பேன் என்ற நம்பிக்கை எனக்கிருந்தது. ஆனால், அது இன்றைக்கே சித்தியாகும் என்று எண்ணவேயில்லை. நான் பெரிய பாக்கியம் செய்தவள்.'

அவர் உள்ளே புகுந்து ஓர் ஆசனத்தில் உட்கார்ந்தார்.

'சுவாமி, மறுபடியும் போய் விடமாட்டீர்களே?'

அவள் உண்மையாகத்தான் இப்படிக் கேட்டாள்.

'போ என்று தள்ளினாலும் முடியாத நிலையில் இப்பொழுது இருக்கிறேன்.'

காலில் விழுந்து வணங்கியவள் எழுந்து உள்ளே சென்றாள். அவர் அதற்குள் அதிலேயே அயர்ந்து தூங்கி விட்டார். பிறகு அவர் கண்களைத் திறந்தபோது முற்றும் எதிர்பாராத தோற்றத்தில் அவள் எதிரில் நின்றாள்.

'அம்மா, இது என்ன கோலம்?'

அவர் ஆச்சரியத்தோடு இப்படிக் கேட்டார்.

அவள் இதற்குப் பதில் சொல்லாமலே தன் கருத்தைச் சொன்னாள்: 'சுவாமி, இவையெல்லாம் இனித் தங்களைச் சேர்ந்தவையே. விருப்பம் எதுவோ அப்படிச் செய்யுங்கள்.'

அவர் அதிர்ந்து போய் சோர்வடைந்த கண்களை உயர்த்தி அவளைப் பார்த்தார்.

அதற்குள் அவள் வெளியே இறங்கி நடந்து கொண்டிருந்தாள்.

# சபலம்

**நெ**ஞ்சில் இழுத்து அடக்கி வைத்திருந்த புகையைக் கக்கியபடியே கடை வாசலில் நின்றவன் அவனைப் பார்த்தான். அந்த மனிதனது கையில் கிடந்த சிகரெட்டிலிருந்து புகை கொடியாகக் கிளம்பி வளைந்து மறைந்து கொண்டிருந்தது. அவன் இவனைப் பார்த்தபடியே சும்மா நின்றான். கடைக்காரனுடைய கண்கள் எதிரில் நின்ற இருவரையும் ஆராய்ந்தன.

அப்பொழுது இவன் அவனைக் கேட்டான்:

'என்ன, உனக்குச் சிகறெற்றா வேண்டும்?'

அவன் பேசவில்லை.

கடைக்காரன் முழுக்கவனத்தையும் திருப்பி விட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? சிகறெற் பற்றி உள்ளே குடைகிறது. இல்லையா?'

அப்போதும் அவன் மௌனம் கலையவில்லை.

'தடிக்கழுதை' என்று எரிச்சலோடு சொல்லிவிட்டு அந்த மனிதன் இரக்கமற்ற காரமான தன் பார்வையை அவன் மீது ஏற விட்டுக்கொண்டே அவ்விடத்தைவிட்டு நடக்க ஆரம்பித்தான். அதுவரைக்கும் சலனமின்றி நின்ற அவன் தன் கால்களையும் மெல்ல நகர்த்தி நடக்க முயன்றான்.







அப்பொழுது எதிர்பாராத விதமாக அந்தக் கடைக்காரன் அவனைப் பார்த்து, 'ஒரு சிகறெற் தானே? நான் தருகிறேன்' என்றான்.

கடைக்காரன் கையில் சிகறெற்றுடன் எழுந்து நின்றான். அந்த சிகறெற்றையும் அதை வைத்திருந்தவனையும் ஒரு முறை பார்த்துவிட்டு அவன் சொன்னான்:

'மன்னிக்க வேண்டும். எனக்கு இப்பொழுது வேண்டாம்'.

கடைக்காரன் பிறகு மரியாதை விளங்கும்படி பேசினான்:

'கொஞ்சம் முன்பு தானே கேட்டீர்கள். ஏன் மறுக்கிறீர்கள்?'

'எப்படியோ மனம் மாறிவிட்டது'.

'அப்படியானால் பீடி கொடுக்கிறேன்.'

'அதுகூட வேண்டியதில்லை. மன்னித்துக் கொள்ளுங்கள்.'

அவன் அந்த இடத்தைவிட்டுக் கிளம்பி நடந்தான். கடைக்காரனோ அவனை ஆச்சரியம் நிறைந்த கண்களால் பார்த்துக்கொண்டே உட்கார்ந்தான்.

அந்தக் கடைக்குச் சற்றுத் தொலைவில் தெருவுக்கு மற்றப் பக்கத்தில் ஒரு பெரிய அரசமரம் நின்றது. அதைச்சுற்றி யாரோ மேடை கட்டி விட்டிருந்தார்கள். வெளியே கொளுத்திய வெயிலில் கொதிப்பை தாங்க முடியாமலோ, உள்ளே அடங்கி எரிந்து கொண்டிருந்த நெருப்பை அணைக்க விரும்பினதாலோ அவன் நேராகவே சென்று அந்த மரத்தடியில் இருந்த மேடையில் ஏறி உட்கார்ந்தான். காக்கை, குருவிகள் அதன் பழங்களைத் தின்று விட்டு அங்கும் இங்குமாக எச்சம் இட்டிருந்தன. அவன் அதனைக் கவனிக்கவில்லை. புனிதமான இடத்தில் மனத்திருப்தியோடு உட்காந்திருப்பவன் போலவே கைகளை ஊன்றியபடி இருந்தான். அப்பொழுது தெருவின் மற்றத் திசையில் இருந்து ஒருவன் வந்து பக்கத்தில் அவனைப்

பார்த்தபடி உட்கார்ந்தான். வந்தவனுக்கு அவனை நன்றாகத் தெரிந்திருந்தது. ஆனால் அவனை மற்றவனாற் புரிந்து கொள்ள முடியவில்லை. அதனால் அவன் காற்றில் சலசலத்துக் கொண்டிருந்த அரசமரத்தின் இலைகளையும் கிளைகளையும் பார்த்துப் பார்த்து நேரத்தைக் கடத்தினான்.

சிறிது நேரம் கழிந்திருக்கும். அதற்குள் வந்த அந்த மனிதன் ஒரு மாதிரிக் கனைத்து அவனைத் திரும்பிப் பார்க்கச் செய்துவிட்டு; நீ இப்பொழுது என்ன செய்கிறாய்?' என்று கேட்டான்.

அவனக்கு இந்தக் கேள்வி ஏனோ எரிச்சலாக இருந்தது. அதனால் பேச்சை நிறுத்த விரும்பியவன் போல, 'இதோ பார் உனக்கு முன்னால் இந்த அரசமரத்தின் கீழ் உட்கார்ந்திருக்கிறேன்' என்று முடித்தான்.

மற்றவன் கோபிக்கிறதற்குப் பதிலாக மெல்லச் சிரித்துவிட்டு, 'கடையிலிருந்து விலகி விட்டாயா?' என்று விஷயத்தில் இறங்கினான்.

பிறகு அவன் பதில் சொன்னான்: 'நானாக விலகவில்லை, முதலாளியே 'போ' என்று தள்ளி விட்டான்.'

'என்ன அப்படி நடந்தது?'

'அவனுக்கு - அவன் தொழிலுக்கு நான் உதவாதவன்'.

'அப்படி என்றால்?'

'வியாபார பாத்திரத்தில் உண்மை பேசுவது பெரிய தப்பாகும். எனக்கு அந்த சாஸ்திரம் ஒத்துக்கொள்ளவில்லை. பிறகு என்னை அவனுக்கு எப்படி ஒத்துக்கொள்ளும்?'

'சும்மா இருந்து எத்தனை நாளைக்கு அலைவது?'

'நானும் அதைத்தான் யோசிக்கிறேன்'.

சிறிது நேரம் வரை இரண்டு பேருமே பேசுவதை நிறுத்திவிட்டுச் சும்மா இருந்தார்கள். பிறகு மற்றவனே தொடங்கினான்.







'உண்மை பேசக்கூடாது என்ற அந்த சாஸ்திரத்தை இன்றைக்கு ஒத்துக்கொள்ள முடிகிறதா?'

கொஞ்சம் தாமதித்து அவனிடமிருந்து பதில் கிடைத்தது.

'ஒத்துக்கொள்ள முடியாது என்ற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது.'

'இவ்வளவிலாவது தெரிந்து கொண்டாயே. இனி நீ தப்பி விட்டாய்'.

இரண்டு பேருடைய முகங்களிலுமே ஒருவித திருப்தி காணப்பட்டது. பிறகும் அவர்கள் சிறிது நேரம் வரை எதைப்பற்றியோ பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவன் மெல்ல அந்த மேடையின் மீது சரிந்து கண்ணயர்ந்து விட்டான்.

✡ ✡ ✡

**அ**வன் கண்விழித்த சமயம் பொழுது சாய்ந்து விட்டது. எங்கே போகலாம் என்ற எந்தவித நிதான நினைவுகளுமின்றி அவன் அதிலேயே எழுந்து உட்கார்ந்திருந்தான். அப்பொழுது எதிர்ப்பக்கத்தில் இருந்த அதே கடைக்காரன் கையைத் தட்டிக் கூப்பிட்டான். அலுப்பாக இருந்தபோதும் அந்த மனிதன் கூப்பிடுகிறானே என்று எண்ணிக்கொண்டு அவன் எழுந்து கிட்ட வந்தான்.

"பசியில்லையா?" என்று கேட்டான் அந்தக் கடைக்காரன்.

"சாப்பிடத்தான் வேண்டும். அதற்காகப் பசிக்குத் தனி மதிப்புக் கொடுக்க நான் விரும்பவில்லை".

அவன் இப்படிச் சொல்லிவிட்டு அமைதியாகவே மெல்ல விலக ஆரம்பித்தான். அதற்குள் அந்தக் கடைக்காரன் (ட்றாயரை) இழுத்து ஒரு ரூபாயைக் கையில் எடுத்து நீட்டியபடி, "ஏனோ, கொடுக்க வேண்டுமென்று மனம் சொல்கிறது" என்றான்.

"சரி, நானும் வாங்கத்தான் போகிறேன். ஆனால் ஒரு நாளைக்குத் திருப்பிக் கொண்டு வருவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது." என்று சொல்லிவிட்டு அதை வாங்கிக்கொண்டு அவன் புறப்பட்டான்.

கடைக்காரன், அவன் சென்று திருப்பத்தில் மறையும்வரைக்கும் பார்த்துக்கொண்டே நின்றுவிட்டு உள்ளே வந்தான்

அவன் நடந்து கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய மனம் தடுமாறி சிந்தனைகளில் கலங்கி மயக்கமடைந்தது.

"பொய்யா? என்னால் முடியாது. அதற்காக இந்த வயிற்று வளர்ப்பை உதறித்தள்ள நான் தயார்" என்று சொல்லிக்கொண்டே அன்றொருநாள் படியை விட்டு தெருவில் இறங்கி கெம்பீரமாக நடந்தேன். அப்பொழுது நாளைக்கு வேறொரு வழி பிறக்கலாம் என்ற நம்பிக்கை இருந்தது. வெளியேறியது வெளியேறியது தான். ஆனால் "மற்றொரு வழி என்றது கனவாகவே முடிந்தது. சே, பிசகாக நடந்து விட்டேன்" என்பதை உணர வெகுநாட்கள் வேண்டியிருக்கவில்லை. அழக்கூடிய சந்தர்ப்பங்கள் எத்தனையோ வந்து போய் விட்டன. ஆனால் அப்போதெல்லாம் நான் அழுதுவிடவில்லை. அடக்கிக்கொண்டு இருக்க எப்படியோ பழகிவிட்டேன், இடையில் வந்த இந்த மனிதன் - அடடா, எதிர்பாராத இடங்களில் எதிர்பாராத மனிதர்கள்!

சிந்தனையில் நடந்து கொண்டிருந்தவன் எதிரிலே கண்ணில் பட்ட ஒரு ஹோட்டலுக்குள் புகுந்தான். பணத்தை நாளைக்கும் வைத்துக்கொண்டே செலவு செய்தான்.

இன்னும் ஒரு நாளைப் போக்கிவிடலாம் என்று திருப்தியோடு ஹோட்டலை விட்டு வெளியே வந்தான். மறுபடியும் அவன் நடக்க ஆரம்பித்தான். அப்பொழுது வெளியூரிலிருந்த ஒரு நண்பனுடைய ஞாபகம் அவனை







ஆறுதல் செய்தது. உடனே, "இங்கேதான் நமக்கு என்ன உறவு? அவனிடம் போய்ப் பார்க்கலாமே" என்ற எண்ணம் உண்டானதும் ஸ்ரேசன் பக்கமாகத் திரும்பி நடந்தான். கையிலிருந்த பணம் பாதியளவிற்குக் கூடப் போதாது என்பது நன்றாகத் தெரிந்தபிறகும் அவன் நிற்காமலே சென்று கொண்டிருந்தான்.

"தினமும் நூற்றுக்கணக்கானவர்கள் டிக்கற் இல்லாமலே பிரயாணம் செய்கிறார்கள். நான் மட்டும் ஏன் அப்படிச் செய்யக்கூடாது? இதற்குள் எத்தனையோ கண்டாயிற்று. இதையும் பார்த்துவிடலாம்."

ஸ்ரேசனுக்குக் கிட்ட வந்ததும் தலையைத் தூக்கிப் பார்த்தான். நிறையக் கூட்டம் இருந்தது. "நல்லது" என்று மனத்தோடு சொல்லிக்கொண்டே ஆளோடுஆளாக உள்ளே நுழைந்து விட்டான். ஏனோ வண்டிக்குள்ளேயும் பெரிய கூட்டம். மனிதர்கள் உயிரற்ற பொருள்கள் போல அடைந்து கிடந்தார்கள். ஆனாலும் அவன் வண்டியினுள்ளே நுழைந்து தன்னைச் சுருட்டி மடக்கிக்கொண்டு ஒருபுறமாக நின்று மூச்சு விட்டான். இந்த அவதிக்கு நடுவில் டிக்கற் இல்லாமல் ஏறி விட்டேனே என்ற நினைவு கூட அவனுக்கு உண்டாகவில்லை.

வண்டி புறப்படப் போகிற சமயம் யாரோ ஒரு நல்ல ஜீவன் - எப்படியோ அடித்து நெருக்கிக் கொண்டு உள்ளே நுழைந்து இருக்க வேண்டும். நின்றவர்கள் கசங்கி அசைந்து நின்றார்கள். பக்கத்தில் நின்ற ஒருவன் அந்த உதைப்பில் தனது காலைப் பிடுங்கி மறுபடியும் ஊன்றினான். செருப்புக்கால் இவனுடைய காலில் இருந்தது. இவன் அழுவதற்குப் பதிலாக, "ஐயா" என்று இழுத்தான். தேய்ந்து ஆணிகள் தலை தூக்கிய அந்தச் செருப்புக்கால் அவனுடைய காலை எலும்போடு கசக்கிப் பிடுங்குவதுபோல அழுத்தியது. உடனே அவன் நுழைந்து குனிந்து தன் பலம் முழுவதையும் சேர்த்து அந்தச் செருப்புக் காலைப் பிடுங்கி அப்புறப் படுத்தினான். அப்போதுதான் அநேக கால்களுக்கு நடுவில் அவனுடைய

கண்களுக்கு அகப்பட்டுக் கைக்குள் அது புகுந்து கொண்டது. மனத்தின் எல்லா எதிர்ப்புக்களையும் உதறி எறிந்துவிட்டு அவன் அதை எடுத்து மடியில் புதைத்து வைத்துக் கொண்டான்.

"செருப்பைக் கையிலே எடுத்து வைத்துக் கொள்ளக் கூடாதா?" என்று யாரோ அவனுக்காகப் பேசினார்கள். இத்தனை மிதி மிதித்த அந்த மனிதனைக் கடிந்து கொள்ள அவன் மட்டும் விரும்பவில்லை. மிதிபட்ட நினைவு கூட அவன் மனத்திலிருந்து மறைந்து விட்டது. பதிலுக்கு மற்றொரு வேதனை - கலக்கம் அவனைச் சோர்ந்து போகும்படி செய்து கொண்டிருந்தது. நிற்க முடியாமல் எப்படியோ அவன் அதற்குள்ளே - அதிலேயே நின்று கொண்டிருந்தான். அவனுடைய மனம் கடைசியில் சமாதானம் சொல்லியது;

"திருடவில்லை, கிடந்ததை எடுப்பதில் என்ன தவறு?"

இவ்வளவில் சமாதானம் உண்டாகின்றபோதும் சமாதானத்தை உண்டு பண்ண அவன் மனத்தோடு போராடிக்கொண்டே நின்றான். அதற்குள் வண்டி இரண்டு மூன்று ஸ்ரேசன்களைக் கடந்து விட்டது.

"இனி வண்டி நின்றதும் இறங்கி விடவேண்டும்" என்று முடிவுக்கு திடீரென்று வந்து சேர்ந்தான். அதற்குள் அகப்படாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை எதிர்பாராமலே அவனை ஆடச் செய்து விட்டது.

அடுத்த ஸ்ரேசனில் வண்டி நின்றதும் நினைத்தபடி இறங்கி வெளியே வந்து சேர்ந்தான். அவன் எதிர்பார்த்ததுபோல வண்டியிலோ இறங்கிவரும்போதோ யாரும் அவனைச் சந்தேகிக்கவில்லை. ஆயினும் அவன் மடியிலே மறைந்துகிடந்த - அவனுக்குச் சொந்தமில்லாத அந்தப் பணம் அவனை ஏதோ செய்துகொண்டிருந்தது. அது எவ்வளவு என்று கூட அவன் இன்னும் பார்க்கத் துணியவில்லை. மடியோடு ஒட்டி பரம இரகசியமாக அது கிடந்தது. இடையிடையே கையினால் மட்டும் தொட்டுப் பார்த்துக்கொண்டான்.







இடம் அவனுக்கு ஏதோ ஓர் அளவுக்கு தெரிந்ததாகவே இருந்தது. கடை விஷயமாக முன் இரண்டொரு தடவை வந்த ஞாபகம் மட்டும் இருந்தது. அந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு தெருவில் வேகமாக நடந்தான். நேரம் அதிகமாகவில்லை. ஜனங்கள் நடமாடிக்கொண்டிருந்தார்கள். கடைகளில் நிறையக் கூட்டம் இருந்தது.

அவன் எந்த இடத்திலும் நிற்கவில்லை. நடந்துகொண்டே யிருந்தான். வழியில் வந்த ஒரு பஸ் அவனுக்குக் கிட்ட வந்ததும் நின்றது. திரும்பிப் பார்த்துவிட்டு அதில் ஏறி உட்கார்ந்துகொண்டான். பஸ் புறப்பட்டு சிறிது நேரத்திற்குள் கண்டக்டர் வந்து "எதுவரைக்கும் டிக்கற்?" என்று கேட்டான்.

"ரேமினல்"

அவ்வளவோடு அவன் நிறுத்திக்கொண்டான். ஆனால் அந்த பஸ் எங்கே போகிறது - வழியில் எந்த இடங்கள் இருக்கின்றன என்ற ஒன்றுமே தெரியாத தன் நிலையை அவன் காட்டாமல் சமாளித்து விட்டான். பிறகு டிக்கற்றைப் பெற்றுக் கொள்வதற்காகவே புற்றினுள் கையை விடுவதுபோல மடியிலே இருந்து ஒரு நோட்டை இழுத்துப் பார்த்தான். அது ஒரு பத்து ரூபா நோட்டு. அதை வேதனையோடு தான் கண்டக்டரிடம் நீட்டினான். கண்டக்டர் கொடுத்த சில்லறையை எண்ணிப் பாராமலே மறுபடியும் மடியிலே வைத்துக் கட்டிக்கொண்டான்.

பஸ் இரண்டு மூன்று ஊர்களைத் தாண்டி விட்டது. பிறகும் அதில் உட்கார்ந்துகொள்ள அவனால் முடியவில்லை. இனி எங்கே நின்றாலும் இறங்கி விடுவதே என எண்ணிக்கொண்டே உட்கார்ந்து இருந்தான். பஸ் அடுத்த ஊரில் நின்றது உடனே அவனும் இறங்கினான்.

அதைப் பார்த்த கண்டக்டர் கேட்டான்,

"ஏனைய்யா பணத்தை வீணாக்கினாய்?"

"இங்கே அவசிய வேலை இருக்கிறதை அப்போது மறந்து விட்டேன்."

அவனுடைய பதில் கண்டக்டரைத் திருப்திப் படுத்தியது. ஆனால் உள்ளுக்குள்ளே கருக்கிக்கரைத்துக் கொண்டிருந்த அந்த இரகசியம் முகத்திலே தெரியாதபடி மறைக்க முடியாத நிலையிலே அவன் நடக்க ஆரம்பித்தான். தெருவில் நடமாட்டம் குறைந்து கொண்டிருந்தது. "எங்கே போகிறேன்" என்ற நினைவு இல்லாமலே நடந்தவன் எதிரே ஒரு கோயிலைக் கண்டதும் அதன் வெளி மண்டபத்திலே போய் உட்கார்ந்தான். அதன் பிறகு வெகுநேரம் வரை சரிந்து படுக்க வேண்டும் என்ற தேவை அவனுக்கு வரவில்லை. ஆனாலும் கடைசியில் ஒருமுறை படுத்தும் பார்த்தான். வேதனையாகத்தான் இருந்தது. உடனே எழுந்து உட்கார்ந்தான். அதுவும் முடியவில்லை. எழுந்து அங்கும் இங்குமாக உலாவினான். மனம் அடித்துக்கொண்டிருந்தது.

"எதற்காக இதை எடுத்தேன்?" என்று தன்னைத்தானே கேட்டபடி நிழலான ஒரு மூலையிலே போய் உட்கார்ந்தான். நெஞ்சுக்குள் ஏதோ செய்தது. எழுந்து சென்று எதிரேயுள்ள திருக்குளத்தில் கால் முகங்களைக் கழுவிக்கொண்டு மறுபடியும் திரும்பி வந்து படுத்துப்பார்த்தான். கண்களை மூடிக் கொள்வதை விட திறந்து வைத்திருப்பதே ஆறுதலாகத் தெரிந்தது. ஆனாலும் கண்களை இறுக மூடிப்பார்த்தான். உலகமே இடிந்து தகர்ந்து விடுவதுபோல பயங்கரமான பல தோற்றங்கள் மாறி மாறி எழுந்து மறைந்தன.

பிறகு நன்றாக விழித்தபடியே எழுந்து உட்கார்ந்துகொண்டு தன்னையே கேட்டான்:

"ஐயோ, இழந்தவனுக்கு எப்படியிருக்கும்?"

பதிலாக நீண்ட ஒரு பெருமூச்சே அவனுடைய நெஞ்சின் ஆழத்திலிருந்து வெளிக் கிளம்பியது. நேரம் செல்லச் செல்ல வாய் விட்டு அழவேண்டும் போலவே அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவன் அப்படி அழவில்லை.







கண்களிலிருந்து கண்ணீர் மட்டும் வந்தது. கண்களைத் துடைத்துக்கொண்டு யோசித்தான். பிறகு எங்கேயாவது ஓடலாமா என்று கூட ஆசைப்பட்டான்.

வேதனை உள்ளேயிருந்து கிழித்தது. பயம் மற்றொரு கோணத்திலிருந்து குத்தியது. கடைசியில் மனத்தை எப்படியாவது திடப்படுத்த முயன்றான். நிகழ்சிகளெல்லாம் குழம்பி தடுமாற்றத்தை மயக்கத்தை வருவித்தன. "ஒருவேளை நான் கனவு காண்கிறனோ?" என்று கூடச் சந்தேகப்பட்டான். கடைசியில் எழுந்து சென்று சந்நிதானத்திற்கு எதிரில் உட்கார்ந்து கொண்டு "கடவுளே, என்னைச் சோதிக்காதே" என்று வேண்டினான். அப்பொழுது மணி இரண்டு அடித்தது.

உட்கார்ந்திருந்தவன் திடீரென்று எழுந்து நின்றான். அடி மடியிலே மூடி மறைத்துக் கட்டி வைத்திருந்த - அவனை வதை செய்து கொண்டிருந்த - ஊர் பேர் தெரியாத யாரோ ஒருவனுக்குச் சொந்தமான அவ்வளவையும் கையில் எடுத்துக்கொண்டு ஓடிப்போய் உண்டியலுக்குள் திணித்தான். சில்லறையும் நோட்டுமாக இருந்த அவ்வளவும் அவனை விட்டு அகன்று விட்டன. சற்று விலகி நின்று வேஷ்டியை உதறி உடுத்துக் கொண்டான்.

"எப்பொழுது நித்திரையானேன்" என்பது அவனுக்கே தெரியாது. காலையில் அவனை யாரோ எழுப்பினார்கள். கண்களைத் திறந்து பார்த்தான்.

"எப்பொழுது இங்கே வந்தாய்?" என்று கேட்டான் அவனைத் தட்டி எழுப்பியவன்.

அவன் பதிலுக்கு இப்படிக் கேட்டான்:

"நீ இங்கேதான் இருக்கிறாயா?"

நின்றவன் குனிந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டு, "வீட்டுக்குப் போய் எல்லாம் பேசிக்கொள்ளலாம். எழுந்திரு" என்று அழைத்தான்.

சந்நிதானத்தைக் கடக்கும்போது அவன் கண்களைத் துடைத்துக்கொண்டு நடந்தான்.

# பிரயாணி

மைதிலி வெகு நேரம் பேசிவிட்டாள். ஜனங்களோ அவளை வார்த்தைக்கு வார்த்தை உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தார்கள். அவளுடைய குரலும் வெண்கலம்போற் கணீர் என்று ஒலித்துக்கொண்டிருந்தது.

"யார் என்ன சொன்னாலும் மனச்சாட்சிக்கு விலை கொடுங்கள். மனச்சாட்சியை மறைக்க எண்ணும்போதுதான் மனிதன் தருமப் போர்வைக்குள் நுழையப் பார்க்கிறான். மகாபாதகங்களைச் செய்கிறவன்கூட தன்ஈனத்தனமான செய்கைகளுக்கெல்லாம் தருமம் பேசுகிறதை நீங்கள் கேட்கவில்லையா? இனி, சுயமாகச் சிந்திக்கவிடாத எந்தத் தருமநூலையும் எரித்து விடுங்கள். நியாயத்துக்குப் புறம்பான அற்புத சாஸ்திரங்கள் நமக்கு வேண்டாம்."

ஜனங்கள் கரகோஷஞ் செய்தார்கள். தன் நெற்றியில் அரும்பி வடிந்துகொண்டிருந்த வியர்வையைக் கைக்குட்டை ஒன்றினால் ஒற்றிக்கொண்டே அவள் திரும்பினாள். அவளுக்கு முன்னால் ஏதோ புரியாத தத்துவங்களைப்போல் உட்கார்ந்திருந்த அந்த இளைஞனுடைய முகத்தில் இலேசாக ஒரு சிரிப்புத் தோன்றி மறைந்தது. அதை அவதானித்ததும் அவள் ஏனோ மருண்டுபோனாள். ஆயினும் தன்னைச் சமாளித்துக்கொண்டு இப்படி ஆரம்பித்தாள்:





"மடமைகள் நிறைந்த பழமை என்ற கட்டுப்பாடுகளுக்குள் ஊறிப்போனவர்கள் - அவர்கள் எத்தனை நூல்களை நெட்டுருப்பண்ணினவர்களானாலும் - எத்தனை பட்டங்களைச் சுமந்து கொண்டவர்கள் என்றாலும் - அவர்களுடைய வார்த்தைகளுக்கு விலை வைக்க முடியாது. பிற்போக்கான அந்த மனிதர்களுடைய போதனைகள் நம்மை வெகுதூரம் ஆழத்தில் தள்ளிவிடக் கூடும். இதை நீங்கள் நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும்."

ஜனங்கள் உணர்ச்சியோடு கை கொட்டினார்கள். பேச்சுத் தொடர்ந்து போய்க்கொண்டேயிருந்தது.

"நமது வாழ்க்கை ஏமாற்றங்களுக்கு நடுவில் அகப்பட்டுக்கிடந்து இழுபடக்கூடாது. அது தன்னம்பிக்கையின் அணைப்பிலே எல்லாக் கட்டுப்பாடுகளையும் கடந்து கொண்டு சுதந்திரத்துடன் கெம்பீரமாக நிமிர்ந்து நடக்கவேண்டும்."

சபையோர் கைகொட்டக் கொஞ்சம் "லீவு" விட்டு அவள் முடிவுரையை ஆரம்பித்தாள்.

"கடைசியாக ஒன்று சொல்லுகிறேன். எதிர் கால உலகத்திற்கு இளைஞர்களே அஸ்திவாரமானவர்கள். புது யுகத்தின் மறுமலர்ச்சி அவர்களது உள்ளங்களிலேதான் ஊற்றெடுக்க வேண்டும். நைந்து போன பழமை என்னும் பிற்போக்குச் சக்தி எந்த ரூபத்தில் வந்தாலும் அதைத் தகர்த்துக்கொண்டு முன்னேறுவது அவர்களுடைய கடமையாகும். எதிர்கால உலகம் இளைஞர்களிடம் கேட்பதும் இதையேதான்."

கரகோஷம் வானை முட்டி மெல்ல ஓய்ந்தது. மைதிலி நமஸ்காரம் சொல்லிவிட்டு உட்கார்ந்தாள். அவளது உள்ளம் வெற்றிப் பெருமிதத்தில் மலர்ந்து குமுறியது. ஆயினும் அவள் கண்கள் பக்கத்தில் ஒடுங்கி உட்கார்ந்திருக்கும் அந்த இளைஞனை ஆராயத் தொடங்கின. அவனோ

சிந்தனையிலாழ்ந்து நிலத்தையே பார்த்தபடி இருந்தான். எல்லோரும் கைகொட்டி முடிகிற சமயம் அவன் கைகளும் இரண்டொரு தரம் ஒன்றையொன்று முட்டி விலகின.

அவன் அப்படி அசட்டை செய்வதுபோல இருந்தது அவளுக்குப் பொறுக்கமுடியாத வேதனையைத் தந்தது. அதற்குள் அந்தக் கூட்டத்திற்குத் தலைமைவகித்தவர் ஏதேதோ பேசிவிட்டு மைதிலியைப் பற்றி ஒரு அத்தியாயம் புகழ்ந்து கொட்டினார். அதுகூட அந்த நிலையில் அவளுக்கு இனிக்கவில்லை. ஓரக் கண்ணால் அந்த இளைஞனைக் கவனித்தபடியே ஒரு புறத்தில் உட்கார்ந்திருந்தாள்.

தலைவர் உட்கார்ந்ததும் எல்லோரும் எழுந்தார்கள். அதற்குள் யாரோ ஒருவர் ஓடிவந்து அந்தத் தலைவருடைய காதோடு குனிந்து "சிவராமனைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே" என்று வருத்தப்பட்டார்.

"அவர் தன்னைப் பற்றி "ஒன்றுமே பேசக்கூடாது" என்று கேட்டுக்கொண்டார்." தலைவருடைய இந்தப் பதில் மைதிலியின் காதுக்கும் எட்டியது. உடனே அவள் மிகுந்த ஆச்சரியத்தோடு திரும்பினாள். அதற்குள் அவன் கூட்டத்துக்குள் கலந்து மறைந்துவிட்டான்.

## 2

நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. பிரசங்கங்களைப் பற்றிய எண்ணங்கள் உண்டாகும்போதெல்லாம் மைதிலிக்குச் சிவராமனைப் பற்றிய நினைவு வரத்தான் செய்தது. அவனை ஒரு முறையாவது சந்திக்க வேண்டும் என அவளுடைய மனம் ஆசைப்பட்டது. ஆயினும் அது கைகூடாமலே காலம் ஓடிக்கொண்டிருந்தது.







அன்று, அவள் சமுத்திரக் கரைக்குத் தனியாகவே வந்தாள். அவளுடைய மனமோ சமீபத்தில் பேசவேண்டிய ஒரு விஷயத்தைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தது. மாலையின் தங்க ஒளி, பரந்து கிடந்த வெள்ளி மணலையும் நீர்ப்பரப்பையும் முத்தமிட்டு ஸ்வர்க்கத்தை ஞாபகப்படுத்துவது போல் இருந்தது. ஜனங்கள் கூட்டங் கூட்டமாக அங்கும் இங்கும் இருந்து ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள்.

மைதிலி, அலைகள் கழுவிவிட்ட புது மணல்மீது நடந்தாள். குளிர்ந்த காற்றும் ஈரமணலும் அவளை "இன்னும் நட" என்று தூண்டிக்கொணடிருந்தன. அதனால் ஜன நடமாட்டம் குறைவான எல்லை வந்தபின்னும் அவள் திரும்பாமல் நடந்துகொண்டேயிருந்தாள்.

அந்த ஒதுக்கிலேதான் சிவராமன் தன்னை மறந்த நிலையில் உட்கார்ந்திருந்தான். நீலக்கடலையும் பரந்து கிடந்த பொன்வானத்தையுங்கூட அவன் கண்கள் பார்க்க விரும்பாதவை போல நிலத்தையே நோக்கியபடியிருந்தன.

அவனிருந்த அந்த நிலை அவளுக்கு வேதனையை உண்டுபண்ணியது. "வாழ்வில் மனமுடைந்து சாந்தியைத் தேடுகிறாரோ" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு மெல்ல மெல்ல நடந்துசென்று அவன் எதிரே போய் நின்றாள். திடீரென்று ஒரு பெண் தன்முன்னே வந்து நின்றதும் அவன் தடுமாறி எழுந்துவிட்டான்.

மைதிலி மெல்லச் சிரித்துக்கொண்டே, "என்னை ஞாபகமிருக்கிறதா?" என்று கேட்டாள்.

அவன் மௌனமாகவே நின்று "ஆம்" என்று தலையை அசைத்தான். சிறிது நேரம்வரை இரண்டு பேருமே பேச முடியாதவர்களாகி நின்றார்கள். பிறகு அவள் எப்படியோ ஆரம்பித்தாள்.

"உங்களுடைய ஆழ்ந்த சிந்தனைகளுக்கு இடையூறு பண்ணிவிட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்."

அவன் ஒரு மாதிரித் தன்னைச் சரிப்படுத்திக்கொண்டு "அப்படி ஒன்றையுமே நீங்கள் செய்துவிடவில்லை" என்றான்.

அவளுக்கு மேலும் பேசவேண்டிய தேவையிருந்தது. ஆனாலும் பேச்சு வரவில்லை. சபையிற் பிரசங்கஞ் செய்வதுபோல இது அவ்வளவு சுலபமாகவும் தெரியவில்லை. அதனால் கஷ்டப்பட்டுக் கொண்டே சும்மா நின்றாள்.

அப்போது அவன் பேசினான்.

"தனியாக இங்கே வந்து நிற்கிறீர்களே?"

கேட்டபிறகுதான் எதற்காக இப்படிச் செய்தேன் என்று அவன் தன்னைத்தான் நொந்து கொண்டான். அதற்குள் அவள் "நீங்களுந்தான் தனியாக வந்து நிற்கிறீர்கள். நான் மட்டும் ஏன் அப்படிச் செய்யக்கூடாது?" என்று கேட்டாள்.

சிவராமன் சிரித்தான். அந்தச்சிரிப்பு அவளுக்குப் பழைய நினைவுகளைக் கிளறிவிட்டது. உடனே அவள் வேதனை கலந்த குரலில் "நீங்கள் பெண்ணுலகத்தையே கேலி செய்கிறீர்கள். உங்களைப் போன்றவர்கள் இப்படி நடந்துகொள்வது உண்மையில் வருத்தப்பட வேண்டிய விஷயந்தான்." என்று சொல்லி நிறுத்தினாள்.

அவன் சாந்தமாகவும் நிதானமாகவும் பேசினான்: "நான் இதுவரை யாரையுமே கேலிசெய்ய எண்ணியதுமில்லை: ஆயினும் என்னையறியாமலே தவறு நேர்ந்திருக்கலாம்.தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள்."

மைதிலி பேச்சற்று நின்றாள். பந்தங்களினின்றும் மெல்ல மெல்ல விடுபடுவது போன்ற ஓர் இன்ப உணர்ச்சி அவளைப் பரவசப்படுத்திக் கொண்டிருந்தது. சிறிது பொறுத்து "என்னை மன்னிக்க வேண்டும்" என்று தாழ்மையோடு கேட்டாள்.





"நீங்கள் ஏதாவது பிழை செய்தீர்களா? அப்படியானால் நான் உங்கள்மீதுசுமத்திய பழி நியாயமானது என்றாகிவிடும்: இல்லையா?"

அவளோடு சேர்ந்து சிவராமனுமே சிரித்தான். பிறகு "உங்களிடம் ஒன்று கேட்கவேண்டும் என இருந்தேன் கேட்கலாமா?" என்று மைதிலி நிறுத்தினாள்.

"நன்றாகக் கேளுங்கள்" என்றான் சிவராமன்.

உபயோகமான உங்கள் சக்திகளையெல்லாம் அடக்கி வைத்துக்கொண்டு ஏன் ஒதுங்கி வாழுகிறீர்கள்? எனக்கு உண்மை சொல்ல வேண்டும்."

அவன் மௌனமாகி நின்றான். அவளோ திருப்பித் திருப்பி அதையே கேட்டாள்.

"என்னிடம் அப்படி என்ன சக்தியைக் கண்டீர்கள். உண்மையில் நான் எதையும் அடக்கி வைத்திருக்கவுமில்லை; ஒதுங்கி வாழவுமில்லை."

"பெரியமனிதர்களும் பொய் சொல்லத் தெரிந்து கொண்டுதானிருக்கிறார்கள்; இல்லையா?"

ஆச்சரியமான அந்தப் பெண்ணை அவன் ஒருமுறை உற்றுக் கவனித்துவிட்டு "நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை" என்றான்.

"பார்த்தீர்களா, மறுபடியும் என்னைப் பரிகாசம் செய்ய ஆரம்பித்து விட்டீர்களே" என்று சொன்னவள் அவனைப் பேசவிடாமலே பிறகும் ஆரம்பித்தாள்.

"அறிவில்லாதவர்கள் ஆயிரம் பிழைகளைச் செய்தாலும் பெரியோர்கள் தாமாகவே மன்னித்துவிடுகிறார்கள். அழிவற்ற இந்த நம்பிக்கையோடு உங்களிடம் விடைபெறுகிறேன்."

அவன் நமஸ்கரித்தான். அவளும் அவ்வாறே செய்து கொண்டு "தனியாக வந்து நிற்கிறாயே என்று அப்பொழுதே சொன்னீர்கள். இருள் மேலும் படரவிட்டது. நீங்களும் வருகிறீர்களா?" என்று கேட்டாள்.

ஒருவரோடொருவர் ஒன்றும் பேசாமலே சிறிது நேரம் நடந்தார்கள். அதற்குள் அவள் திரும்பி நின்று, "நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"சும்மா தான் இருக்கிறேன்."

"அப்படியானால் பைத்தியம் பிடித்து விட்டதா?"

"படிக்கிறேன்."

"அது என்ன படிப்போ?"

அவன் சிரித்துக் கொண்டே சொன்னான்: "நீங்களே எனக்கு ஒரு புதிய பாடமாகத்தான் தோன்றுகிறீர்கள்".

அவளும் 'கலகல' வென்று சிரித்தாள். பிறகு, "பாக்கியவசத்தால் உங்களை இன்று சந்தித்தேன்" என்று சொல்லிப் பிரிந்து சென்றாள்.

# 3

மற்ற நாள்: அஸ்தமனத்துக்கு வெகுநேரத்துக்கு முன்பே மைதிலி சமுத்திரக் கரைக்குக் கிளம்பிவிட்டாள். அவனைக் காணவேண்டும் என்ற ஆசை அப்படி அவளைத் தூண்டிக் கொண்டிருந்தது. 'அவர் அங்கேதான் இருப்பார்' என எண்ணியவளாய் நேராகவே முதல் நாள் அவனைச் சந்தித்த இடத்துக்குச் சென்றாள். ஆனால் அவனை அங்கே காணவில்லை. ஆயினும் 'வருவார்' என்று அடிக்கடி தன்னைத் தான் ஆறுதல் செய்துகொண்டே அங்கே உட்கார்ந்திருந்தாள்.







பொழுது போய்க்கொண்டிருந்தது. எத்தனையோ பேர் வந்தார்கள்; போனார்கள். அவன் மட்டும் வரவில்லை. கடைசியில் இருள் பரவுகிற நேரமாகிவிட்டது. 'இனி எங்கே வரப் போகிறார்?' என்ற வேதனையோடு எழுந்து நடந்தாள். தெருவுக்கு ஏறும்போது எங்கிருந்தோ அவள் இதயத்தைத் தொட்ட அந்தக்குரல் காற்றில் மிதந்துவந்து அவளது காதிலே விழுந்தது. நடப்பதை நிறுத்திவிட்டுத் திரும்பிப் பார்த்தாள். சற்றுத் தொலைவில் யாரோ இருவர் உட்கார்ந்திருப்பது நன்றாகத் தெரிந்தது. மறுபடியும் காதைக் கொடுத்துக் கேட்டாள். சந்தேகமில்லை. சிவராமனுடைய குரல்தான் அது.

அவள் மெல்ல நடந்து அவர்களுக்குப் பின்புறமாக உட்கார்ந்தாள். அப்பொழுது சிவராமனுக்குப் பக்கத்திலிருந்த பையனே பேசினான்:

"ஆறேழு வருஷங்களுக்கு முன்னாடியே செத்திட்டாங்களாம்."

"அம்மா இருக்கிறாளா?" இது சிவராமனுடைய குரல்.

"ஆமாம், இருக்குது."

"எங்கே?"

"பட்டணத்திலேதான்."

"பட்டணத்திலேதான் என்றால் எங்கே?"

"தெரியாது. எங்குந் திரியும்."

"அப்படியானால் நீ உன் அம்மாவைக் காணுகிறதில்லையா?"

"அதிக நாளாச்சு."

"உனக்குத் தம்பி தங்கை இல்லையா?"

"தங்கை இருக்குது. அதுக்கு ஒரு வயசு கூட இருக்காது."

சிவராமன் பேச்சை நிறுத்திவிட்டுச் சும்மா இருந்தான்.

"சாமி! பசிக்குது. ஏதாவது குடுங்கோ" என்றான் சிறுவன்.

சிவராமனுடைய கைகள் சட்டைப் பைகளைத் துழாவின. பையனோ அந்தக் கைகளையே பார்த்தபடியிருந்தான். பைகளுக்குள் நுழைந்த கைகள் வெளியே வர மறுப்பவைபோல அப்படியே கிடந்தன. அப்போதுதான் பின்புறத்திலிருந்து மைதிலியின் குரல் கேட்டது.

"இங்கே இருக்கிறது கொடுங்கள்."

சிவராமன் திரும்பினான். பையனோ அவளிடம் ஓடினான். அவள் அந்தப் பையனை அனுப்பிவிட்டு எழுந்து கிட்ட வந்தாள். வந்துகொண்டிருந்த மைதிலியைப் பார்த்துக்கொண்டே "பணம் இங்கே இருக்கிறதே" என்றான் சிவராமன்.

"அப்படியானால் என்ன யோசித்துக் கொண்டிருந்தீர்கள்?" என்று அவள் கேட்டாள்.

"நன்றாக ஆராய்ந்து பார்த்தால் யோசிக்காமல் இருக்கவும் முடியவில்லை. யோசித்தும் ஒரு பயனும் ஏற்படுவதில்லை."

"என்ன புதிர் போடுகிறீர்களே?"

"இந்த உலகமே அவிழ்க்கமுடியாத ஒரு புதிர்தானே!"

சிறிது நேரம்வரை ஒருவரை ஒருவர் பார்த்தபடி சும்மா இருந்தார்கள். பிறகு அவள் எதையோ ஒன்றை வைத்துக்கொண்டு பேச்சை ஆரம்பித்தாள்.

"ஒரு சந்தேகம் உங்களிடம் கேட்கப்போகிறேன்."

"நன்றாகக் கேளுங்கள்; முடியுமானால் சொல்லுகிறேன்."





"சிலர் மிகச் சாதாரணமாக நோக்கங்களை உடையவர்களாகவும் வேறு சிலர் அசாதாரண நோக்கங்களை உடையவர்களாகவும் இருக்கிறார்கள். ஒவ்வொருவருடைய நோக்கங்களும் கைகூடும்போது உண்டாகிற திருப்தியோ இன்பமோ அளவில் வித்தியாசமாக இருக்கிறதா?"

சிவராமன் நிதானித்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.

மைதிலி அதையே வேறொரு விதமாக ஆரம்பித்தாள்.

"எனக்குப் பசிக்கிறது. நான் அதற்காக முயற்சிக்கிறேன். என் பசி ஆறினதும் நான் திருப்தியடைகிறேன். நீங்களோ உலகத்தின் பசியைப் போக்க முயலுகிறீர்கள். உங்கள் நோக்கம் நிறைவேற எவ்வளவோ பாடுபட வேண்டியிருக்கிறது. அப்படிப் பாடுபட்டு அதுவும் சித்தியாகிறது என்று வைத்துக்கொள்வோம். அப்போது நீங்களும் திருப்தியடைகிறீர்கள். இந்த இரண்டுபேருடைய மனமும் திருப்தியடைவதால் உண்டாகிற இன்பத்தின் அளவில் வித்தியாசம் இருக்கிறதா?"

இதுவரை மௌனமாக இருந்தவன் பேச ஆரம்பித்தான்.

"சாதாரண இச்சைகளையும், உயர்ந்த லஷியங்களையும் எப்படி ஒன்றாக மதிக்க முடியும்? இச்சைகள் உடம்பின் பசி. லஷியங்கள் உயிரின் தாகம். அப்படியே இச்சைகள் கைகூடும்போது ஏற்படுகிற திருப்திக்கும் லஷியங்கள் சித்திக்கும்போது கிடைக்கிற ஆனந்தத்துக்கும் சம்பந்தமே கூறமுடியாது."

அவள் மௌனமாகி உட்கார்ந்திருந்தாள். அவனோ அவளோடு பேச்சை நிறுத்தி விட்டு எழுந்து நடக்க ஆயத்தமானான். பிறகு அவளும் எழுந்து அவனைத் தொடர்ந்து நடந்தாள். வழியில் வந்துகொண்டிருக்கும்போது அவள் வேண்டுமென்றே இதைச் சொன்னாள்.

"ஆழ்ந்த தத்துவங்களில் மூழ்கி அவிழ்க்க முடியாத பெரிய சிக்கல்களைத் தூக்கிக்கொண்டு சங்கடப்படுவதைவிட, செய்யத்தக்க சாதாரணமானவைகளையே தொடங்கி முடிப்பது மேல் என்றே நான் கருதுகிறேன்."

"ஒவ்வொருவரும் தங்களால் முடிந்ததைச் செய்கிறார்கள்; நாமேன் இதிற் சங்கடப்பட வேண்டும்."

சிவராமனுடைய வார்த்தைகள் அவளைப் பேச்சின்றி நடக்கச் செய்தன. பிறகு அவரவர் வழியாற் பிரிந்து சென்றார்கள்.

# 4

இப்பொழுதெல்லாம் அவர்கள் நெருங்கிப் பழகினார்கள். மனம்விட்டு எந்த விஷயத்தையும் பேசுவதற்குரிய 'தெம்பு' அவளுக்கு உண்டாகிவிட்டது. சிலசமயங்களில் 'வாருங்கள்' என்று அவனை இழுத்துக்கொண்டு வீட்டுக்கே வந்துவிடுவாள். அவனைக் காணாமல் இருப்பதென்பதும் அவளுக்கு முடியாத காரியமாகி வந்துவிட்டது.

அன்று வீட்டின் முன்புறத்தில் இரண்டு பேருமே உட்கார்ந்திருந்தார்கள். எப்படியாவது அவனைத் தோற்கடித்து அகப்படுத்திவிட வேண்டும் என அவள் ஆசைப்பட்டாள். அன்றைய மனநிலையும் தனிமையும் 'தொடங்கு' என்று அவளைத் தூண்டின.

"ஒரு விஷயம்" என்று மைதிலி ஆரம்பித்தாள்.

"என்ன? சொல்லுங்கள்" என்றான் சிவராமன். ஆனால் அவளால் உடனே ஆரம்பிக்க முடியவில்லை. தயங்கினாள். அவனோ அவளது முகத்தைப் பார்த்தபடியே விஷயத்தை எதிர்பார்த்தான்.







கொஞ்சம் பொறுத்தே மிகக் கஷ்டப்பட்டுக் கொண்டு "கல்யாணம்" என்பதைப் பற்றித்தான் கேட்கிறேன்" என்று மொட்டையாக நிறுத்தினாள்.

"யாருடைய கல்யாணத்தைப் பற்றியோ?" என்று கேட்டுவிட்டு அவன் சிரித்தான். அது அவளை மேலும் சங்கடத்துக்குள்ளாக்கி விட்டது. ஆயினும் ஒருவாறு சமாளித்துக்கொண்டு துணிந்து பேசத் தொடங்கினாள்.

"பொதுவாகத்தான் கேட்டேன். ஒவ்வொருவரும் அதைச் செய்துகொள்ளத்தான் வேண்டுமா என்பதுதான் பிரச்சினை."

"அது அவரவரைப் பொறுத்த விஷயம்."

"நான் அதைக் கேட்கவில்லை. கல்யாணம் செய்து கொள்கிறார்களே, அவர்கள் தவறு செய்கிறார்களா? அல்லது செய்யாது விடுபவர்கள்தான் தவறு செய்கிறார்களா?"

அவள் இப்பபொழுது ஒரு மாதிரி விஷயத்தில் இறங்கினாள்.

"இயற்கையைப் பிசகானது என்று யாராலும் சொல்லமுடியாது. அப்படியானால் இயற்கையின் கட்டளைக்கு அமைகிறவர்களை எவ்வாறு பிழை என்று சொல்லலாம். அவ்விதமே இயற்கையைப் புறக்கணித்து வாழுபவர்களை நியாயமானவர்கள் என்று சொல்லுவதும் தவறே."

எடுத்ததற்கெல்லாம் 'இது இயற்கையின் கட்டளை' என்று நாம் சொல்லமுடியாது. அது பெரிய பிசகாகும்."

இந்தப் பதில் அவளைக் கொஞ்சம் தடுமாறும்படி செய்தது. ஆயினும் சமாளித்துக்கொண்டு வேறொரு பக்கத்தால் நுழையப் பார்த்தாள்.

"நல்லது; இன்னுமொன்று உங்களைக் கேட்கப் போகிறேன். அதற்கும் பதில் சொல்லி விடுங்கள்."

அவள் பேசுவதை நிறுத்திவிட்டு அவனது முகத்தைப் பார்த்தாள்.

"சரி, சொல்லி விடுங்களேன்" என்றான் சிவராமன்.

"என்னையோ, உங்களையோ அல்லது வேறொருவரையோ எடுத்துக் கொள்ளுங்கள். ஒவ்வொருவரும் இந்த உலகுக்கு வர ஒரு தாயுந் தந்தையும் இன்றியமையாதிருந்தனர். அப்படியே அந்தத் தாய்க்குந் தந்தைக்கும் ஒவ்வொரு தாய் தந்தையர் இருக்கவே செய்தனர். இவ்வாறு ஒரு நூறு சந்ததியைக் கணக்கிடுங்கள். எத்தனையோ கோடானு கோடி தாய் தந்தையர்கள் சம்பந்தப்பட்டே இந்தத் தொடர் நீண்டிருக்கிறது. இடையில் ஒரு தாயோ தந்தையோ இல்லையென்றால் நம்மில் யாரும் பிறந்திருக்கமுடியாதல்லவா? இப்படியாகத் தொடர்ந்து வந்த இந்த அற்புதமான சங்கிலியை நடுவில் நிறுத்திவிட யாருக்கும் அதிகாரமில்லையென்றே நான் கருதுகிறேன்."

மைதிலி பேச்சை முடித்துவிட்டுச் சும்மா இருந்தாள். அவன் உடனே பதிலுக்குப் புதிர் போடுகிறவனைப் போல ஆரம்பித்தான்.

"இந்த உலகத்திற் காலத்துக்குக் காலம் எண்ணற்ற ஜீவ வர்க்கங்கள் தோன்றின. அவற்றுற் பல முற்றாக அழிந்து மறைந்து போயின. அதனால் இந்த உலகத்திற்கு ஏதாவது குறை ஏற்பட்டதா? அது போல மனித ஜாதியும் பூண்டோடு அழியினும் அழிந்து போகட்டும். அதற்காக நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்?"

இந்தப் பேச்சு அவளது உள்ளத்தைத் தாக்கி வேதனையை உண்டுபண்ணியது. அவள் அதை வெளிக்குக் காட்டாமலே மறைக்கப் பிரயத்தனப்பட்டாள். ஆயினும் அவளால் எதைப்பற்றியும் பேச முடியவில்லை. சும்மா இருக்கவும் இயலாத ஒரு நிலை அவளைச் சூழ்ந்து கொண்டது. அப்பொழுதுதான் அவளுடைய தாயார் வேலைகளை முடித்துவிட்டு அங்கே வந்து சேர்ந்தாள். அந்த அம்மாள் வந்து உட்கார்ந்ததுமே சிவராமனைப் பார்த்து "அப்பனே ஒரு தொழிலுமே செய்வதில்லை என்று இருக்கிறாயாமே ஏன்?" என்று கேட்டாள்.







"அம்மா! எத்தனை நண்பர்கள் வற்புறுத்திக் கேட்டுவிட்டார்கள். 'ஒன்றுமே செய்யமுடியாது' என மறுத்துவிட்டார்" என்றாள் மைதிலி.

"ஆமாம்; எனக்கு அந்த வேலைகள் பிடிக்கவில்லை."

சிவராமன் சொல்லி முடிப்பதற்குள் மைதிலி வேண்டுமென்றே இப்படிக் கேட்டாள்:

"அப்படியானால் உங்களுக்குப் பிடித்தமான வேலை எதுவோ?"

"மண் சுமப்பது. அல்லது அதுபோல வேறொன்று."

எல்லோரும் சேர்ந்து சிரித்தார்கள். பிறகு அந்த அம்மாள், அவனுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டே 'வாழ்க்கை என்று ஒன்று இருக்கிறதே. அதை எப்படியாவது இழுக்கவேண்டுமல்லவா?' என்றாள்.

சிவராமன் சொன்னான்:

"அம்மா வாழவேண்டு மென்பதும் அவசியந் தான்.அதற்காக நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளக் கூடாது. கேவலமாக வாழ்வதைவிடச் சும்மா இருந்து சாவது எவ்வளவோ மேல்."

மைதிலி மௌனத்திலாழ்ந்திருந்தாள்.அவளுடைய தாயாரும் பேச விரும்பாதவளாகிச் சும்மா இருந்தாள்.சிறிது நேரத்திற்குள் அவனும் எழுந்து விடைபெற்றுக் கொண்டு வெளியே சென்றான்.

# 5

கடந்த இரண்டு நாட்களாக அவன் அங்கே வரவில்லை. மைதிலி தானாகவே பார்க்கப்போனாள்.

அவனுடைய அறைக்கதவு மூடிக்கிடந்தது. கதவோடு காத்து நின்ற வாடகைப்பணம் வாங்குகிற மனிதன் அவளைக் கண்டதும் "அம்மா, இந்த மாசம் தன்னிடமே பணத்துக்கு வரவேண்டுமென்றார்" எனத் தயங்கினான்.

"எத்தனை தடவை உன்னிடம் சொல்லிவிட்டேன். இனிமேல் நீ ஒரு போதும் பணத்துக்கு இங்கே வரக்கூடாது" என்று அவள் கண்டிப்பாகச் சொல்லி அவனை அனுப்பிவிட்டு யன்னல் வழியாக உள்ளே பார்த்தாள்.

வெறுந்தரையிலே துணியை விரித்து அதன் மேற் கையே தலையணையாக அவன் தூங்கிக்கொண்டிருந்தான். ஏதோ ஒரு புஸ்தகம் பக்கத்திலே கிடந்தது.

அந்தக் காட்சி அவளுடைய நெஞ்சை உருக்கியது! கடவுளே, என்று வாய்விட்டுச் சொல்லி அவள் பெருமூச்சு விட்டாள். அப்போது பக்கத்து அறையில் குடியிருப்பவர் ஒருவர் வெளியே வந்து, "அம்மா, இரவு முழுவதுமே ஏதோ படித்துக் கொண்டிருந்தார். பிறகு வாந்தியெடுத்தார். காலையிலேதான் நித்திரையாகியிருப்பார் என எண்ணுகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றார்.

அவள் மற்றப்பக்கமாக முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்று கண்களைத் துடைத்தாள். பிறகு மெல்ல மெல்ல நடந்து வீட்டுக்கு வந்தாள். ஆயினும் அவளால் இருக்க முடியவில்லை. சிறிது நேரத்துள் மறுபடியும் கிளம்பி அங்கே சென்றாள்.

கதவு முன்போலவே தாழிடப்பட்டு இருந்தது. அறையினுள்ளே அவனைக் காணவில்லை. ஆனால் மைதிலி பைத்தியக்காரியைப் போலத் திரும்பி வீட்டை நோக்கி நடந்தாள். எதிர்பாராதவிதத்தில் சிவராமனை வழியிலேயே சந்தித்தாள். அவளுடைய உள்ளத்திலே இத்தனை நேரமாகக் குமுறிக் கொண்டிருந்த வேதனை கோபமாக மாறிவிட்டது.

"நீங்கள் யாருடைய சொல்லையும் லட்சியம் செய்ய மாட்டீர்களா?"

இதைக்கேட்டதும் அவன் சிரித்தபடியே, " ஏன் இப்படிக் கோபிக்கிறீர்கள்? " என்றான்.

"இரவு தூங்கினீர்களா? அப்படி எந்தப் பரீட்சைக்குப் படிக்கிறீர்கள்? வாந்தியெடுத்தீர்களாமே? "





அவள் ஒன்றன்பின் ஒன்றாகக் கேள்விகளை அடுக்கிக கொண்டே போனாள். அவனோ எல்லாவற்றிற்கும் பொதுவாக "எனக்கு இவையெல்லாம் பழக்கமாகிவிட்டன" என்று சமாளித்தான். உடனே அவள் தொடர்ந்து உரிமையோடு "நல்லது, இப்பொழுது வீட்டுக்கு வருகிறீர்களா இல்லையா?" என்று கேட்டாள்.

"அங்கே இப்போது எதற்காக?"

"நீங்கள் வரத்தான் வேண்டும்."

அவன் மறுக்கவில்லை. அவளுக்குப் பின்னால் நடந்து சென்றான். வீட்டுக்குள் நுழைந்ததும் அவள் தாயைக் கூப்பிட்டு, "நித்திரையும் நல்ல சாப்பாடும் இல்லாமல் எத்தனை நாளைக்கு இப்படி இருக்கலாம் என்று நீங்களே இவரைக் கேளுங்கள்" என்றாள்.

"சிவராமா! நீ இனி இங்கேயே சாப்பிடேன்" என்று அந்த அம்மாள் தாயின் உள்ளத்தோடு அன்புக் குரலால் கேட்டாள்.

அவன் ஆமென்றோ இல்லையென்றோ சொல்லாமல் மௌனமாக இருந்தான். பிறகு "அம்மா, ஸ்நானஞ் செய்துவிட்டு வருகிறேன்" என்று எழுந்து வெளியே சென்றான்.

அவன் சென்றதும் 'நடக்க முடியாதது நடந்துவிட்டது' என்று அவள் பரவசமானாள். அவளுடைய உள்ளத்தின் மலர்ச்சி அந்த வீட்டின் ஒவ்வொரு அணுவிலும் பிரதிபிம்பித்தது. அவள் ஓடியோடி எத்தனையோ ஆயத்தங்களையெல்லாம் செய்தாள். 'என் தெய்வத்துக்கு நேருக்கு நேர் நின்று பணிவிடை செய்யும் பாக்கியத்தைப் பெற்றவள் நான்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டாள்.

பிறகு சிவராமன் அங்கே வந்ததும் - சாப்பிட்டதும் இப்படியென்று சொல்லமுடியாததும் - மறக்க முடியாததுமாகிய ஒருவித இன்பப் போதையை அவளுக்கு உண்டுபண்ணியது.

இரவுக்கும் அவன் வந்து சாப்பிட்டுவிட்டே சென்றான்.

# 6

மறுநாள் நித்திரைவிட்டெழும்பும் போதே 'காப்பி சாப்பிட இப்போது வருவார்' என்ற ஆனந்தத்தோடு அவள் எழுந்தாள். பிறகு எல்லாவற்றையும் செய்து முடித்துவிட்டுக் காத்திருந்தாள்.

நேரம் மெல்ல மெல்லக் கழிந்து சென்றது. மைதிலி தெருவைப் பார்த்துக்கொண்டே கதவோடு வந்து நின்றாள். அவன் வரவில்லை. ஆனால் அவனெழுதிய ஒரு கடிதம் மட்டும் வந்து சேர்ந்தது.

பதறிக்கொண்டே அதைப் பிரித்துப் படித்தாள்.

மைதிலி,

வழியில் - வண்டியில் சந்திப்பதுபோல நாங்களும் சந்தித்தோம். எனக்காக நீயும், உனக்காக நானும் பிரயாணத்தை நிறுத்திவிடலாகாது. இன்னும் கொஞ்ச நாட்கள் சென்றால் நானே அந்தப் பிழையைச் செய்துவிடவும் கூடும். ஆதலால் உன்னிடம் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்.

அம்மாவின் பாதங்களில் என் ஆழ்ந்த வணக்கத்தைச் சமர்ப்பித்துவிடு.

சிவராமன்.

மரணஞ் சூழ்ந்தபிறகும் பிடித்துக்கொணடிருக்கும் உலக இச்சைகள் போல மறுபடியும் 'அவனைத் தேடு' என்று ஏதோ ஒன்று அவளைத் தூண்டியது. கஷ்டப்பட்டுக் கண்களை மேலே தூக்கினாள். எங்கும் இருள் கவிந்து வருவது போல இருந்தது. கண்களை மூடிக் கொண்டு அப்படியே உட்கார்ந்தாள்.

